# ஆழ்வார்களும் பாரதியும்

நூலாசிரியர்

அ. சீனிவாசன்

கர்மயோகி பதிப்பகம்

நூலாசிரியர் பதிப்பாளர்

அ.சீனிவாசன்

நெ.6, யாதவாள் 2–வது குறுக்கு தெரு,

விருகம்பாக்கம்

சென்னை 600092

தொலைபேசி (044) 5526 2585

# ஆழ்வார்களும் பாரதியும்

நூலாசிரியர் : அ.சீனிவாசன்

பொருளடக்கம்

# ஆழ்வார்களும் பாரதியும்

நூலாசிரியர் : அ.சீனிவாசன்

## பதிப்புரை

ஆழ்வார்களும் பாரதியும் என்னும் தலைப்பில் எழுதப்பட்டுள்ள இந்த நூல் ஒரு புதிய முயற்சியாகும். இது ஒரு சிறந்த முயற்சியுமாகும்.

ஆழ்வார்களுடைய பாடல்களையும், பாரதியின் பல வேறு பாடல்களையும் சிறந்த முறையில் எடுத்துக் காட்டி இந்த நூலில் ஆசிரியர் நன்கு ஆய்வு செய்து இணைத்துக் காட்டியுள்ளார்.

இந்து நூலில் தெய்வ பக்தியும், தேச பக்தியும் இணைத்துக் காட்டப் பட்டிருக்கிறது. இந்து தர்மத்தின் லோக க்ஷேமம் (உலக நன்மை) என்னும் தலை சிறந்த கருத்து இந்த நூலில் சிறப்பாக எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது

கண்ணன் பெருமை இந்த நூலில் மிகவும் சிறப்பாகவும் விரிவு படவும் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது. கண்ணன் மானிட வடிவில் வந்து ஆற்றிய அருஞ் செயல்கள், அவனுடைய உலகப் பெருவடிவம் நமது கண்முன் நிற்கும் படியாக சிறப்பாக எடுத்துக் கூறப் பட்டிருக்கிறது.

இந்த நூலின் கையெழுத்துப் பிரதியை முழுமையாகப் படித்து பிழைகளைத் திருத்தி உதவிய திருமதி பகீரதி பி.ஏ.,பி.எட்.,எம்.ஏ. தமிழ் அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்து உதவிய அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

திரு.அ.சீனிவாசன் எழுதிய முந்திய நூல்களுக்கு சிறந்த முறையில் ஆதரித்தவர்கள் இந்த நூலுக்கும் தங்கள் ஆதரவினை நல்குமாறு வாசகர்களை வேண்டிக் கொள்கிறோம்.

பதிப்பகத்தார்.

# முன்னுரை

ஆழ்வார்களும், பாரதியும் என்னும் இந்த நூல் ஒரு புதிய பார்வையில் ஒப்பீட்டு நூலாக எழுதப் பட்டிருக்கிறது. ஆழ்வார்களும் பாரதியும் காலத்தால் வேறுபட்டவர்கள். ஆயினும் பாரதத்தின் பண்பாட்டு தளத்தில் காலூன்றி நின்று இனிய கருத்துள்ள கவிதைகளைப் பாடியவர்கள்.

ஆழ்வார்கள், வேதக்கருத்துக்களையும், உபநிடத தத்துவங்களையும், ஸ்ரீமத் பாகவதத்தின் கதை நிகழ்ச்சிகளையும் முன் வைத்துத் தங்கள் பாடல்களைப் பாடியுள்ளார்கள். பாரதி வேதங்களையும் உபநிடதங்களையும் ஆதாரமாக வைத்தும் ஸ்ரீமத் பாகவதத்தின் கதை நிகழ்ச்சிகளையும், தத்துவங்களையும் முன் வைத்தும், ஆழ்வார்களை வழி காட்டியாகக் கொண்டும், பகவத் கீதையின் மகத்தான தத்துவத்தை உள்ளடக்கியும் தனது கவிதா மண்டலத்தைப் பிரகாசிக்கச் செய்கிறார்.

பாரதம் வேத காலத்தில் பல வேறுவழிபாடுகளையும், மந்திர தந்திரங்களையும், விழாக்களையும், வேள்வி முறைகளையும் கொண்டிருந்தது. உபநிடதங்கள் பஞ்ச பூதங்களையும், பஞ்சேந்திரியங்களையும், அந்த ஐம்புலன்களின் புலனறிதலையும் செயல் பாடுகளையும் ஆதாரமாக வைத்து அறிவின் தத்துவத்தையும் தத்துவ ஞானப் பிரிவுகளையும், இறைமைக் கொள்கைகளையும், பல்வேறு செயல் முறைகளையும், ஆகம விதி முறைகளையும், வழி முறைகளையும் உருவாக்கி வழி காட்டின.

அத்துடன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தங்களும், அவைகளின் செயல் முறைகளும் உருவாக்கப் பட்டும், நீதி நெறிமுறை, அரசியல் நெறிமுறை, சமுதாய நெறி முறைகள், அறநெறி முறைகள், ஒழுக்க நெறி முறைகள், முதலியன

பற்றிய பல சாத்திரங்களும் உருவாக்கப்பட்டும், கால்நடை பராமரிப்பு, சாகு படி, பொருள் வினியோகம், வானிலை ஆய்வு, கணிதம், சிற்பம், மருத்துவம் இசை மற்றும் பல அறிவியல் பிரிவுகளும் தோன்றி வளர்ச்சியடைந்து பாரத சமுதாயம் நிலை பெற்றிருந்தது.

தமிழகத்திலும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நிலங்கள் பிரிக்கப் பட்டும், அதன் பண்புகள், வழிபாடுகள், செயல்முறைகள் வகுக்கப் பட்டும், வேதக் கலாச்சாரத்துடனும், ஆகம வழிமுறைகளுடன் இணைந்தும், பாரதக் கலாச்சாரத்தின் பகுதியாக வளர்ச்சி பெற்றிருந்தது.

வேத உபநிடதக்கருத்துக்களுக்கும், ஆகமக் கருத்துக் –களுக்கும் சங்க கால இலக்கியக் கருத்துக்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் மாறுபட்டு, பௌத்த, சமணக் கருத்துக்கள் பாரதம் முழுவதும் பரவி வளர்ச்சி பெற்றது. புத்தமும், சமணமும் சர்வஜன சமத்துவக் கருத்துக்களையும், ஜீவகாருண்யக் கருத்துக்களையும் பாரதக் கலாச் சாரத்தில் பலமாக வேரூன்றச் செய்தன. ஆயினும், வாழ்க்கையிலிருந்து விலகி துறவு பூண்டு, தனிமைப்படும் மாயா வாதக் கருத்துக்களை வலியுறுத்திய புத்த சமணக் கருத்துக்களையும் நடைமுறைகளையும் பாரதம் அநேகமாக நிராகரித்து விட்டது என்றே கூறலாம்.

இந்த சமயத்தில் பாரதத்தை முழுவதும் ஒன்று படுத்தி உணர்வூட்டி, புதிய தெம்பை ஊக்குவித்து மீண்டும் பாரத தர்மத்தை நிலை நாட்டும் முறையில், பகவான் ஆதி சங்கரர், வேத வழிபாடுகளை இணைத்து அறுசமயங்களையும் ஒருமுகப்படுத்தி வேதாந்த தத்துவத்தை நிலை நாட்டினார். பகவான் இராமானுஜாச்சாரியார் பகவத் கீதைக்கு ஸ்ரீபாஷ்யம் எழுதி மக்களுடைய உணர்வில் ஒரு வேகத்தை உண்டாக்கி, விசிஷ்டாத்வத முறையில் வேதாந்த விளங்களைக் கொடுத்து வைணவசம் பிரதாயத்தை முதன்மைப் படுத்திப் பரப்பினார்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோன்றி வைணவ, சைவ பக்தி இயக்கங்களை பாரத மக்களுடைய பேரியக்கங்களாக உருவாக்கி வளர்த்தார்கள். ஆழ்வார்கள் திருமாலை உலகப் பெரு வடிவமாகக் கண்டார்கள். உலகனைத்தையும் திருமால் வடிவமாகக் கண்டார்கள். திருமாலின் நின்ற வண்ணத்தையும் கிடந்த வண்ணத்தையும் கண்ணாரக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்தார்கள். கை வண்ணத்தையும், கால் வண்ணத்தையும் கண்டு மகிழ்ந்து புகழ்ந்தார்கள்.

அனந்தசயனத்தில் அறிதுயில் கொண்ட பள்ளி கொண்டானை, துயிலெழுப்பிப் பாடினார்கள். திருமால் துயில் எழுந்து உலகைக் காக்க முன் வரவேண்டும் என்று பாடினார்கள்.

ஆழ்வார்களுடைய பாடல்களில் திருமால் பக்தியே உயிர் நாடியாகும். உயிர் மூச்சாகும். அத்துடன் சேர்ந்து ஆழ்வார்கள் சமுதாய சீர்திருத்தக் கருத்துக்கள் பலவற்றையும் முன் வைத்து மக்களை ஒன்றுபடுத்தினார்கள். பல்லாயிரக் கணக்கில் மக்களைத் திருவிழாக்களில் ஒன்று திரட்டினார்கள்.

தவறான கருத்துக்களையும் கண்ணோட்டங்களையும், பழக்க வழக்கங்களையும் நீக்கி, சத்தியக் கருத்துக்களையும் தூய்மையான தெளிவான கண்ணோட்டங்களையும் புலனறிவுகளைக் கட்டுப்படுத்தி ஒரு முகப்படுத்தும் பழக்க வழங்கங்களையும் செயல் முறைகளையும் நிலை நாட்டப் பாடுபட்டார்கள்.

இயற்கையையும் இயற்கை சக்திகளையும் பகவானுடன் இணைத்து உலகைக் காக்க வேண்டும் என்று பாடினார்கள். நாடும் மக்களும் நலம் பெறப் பாடினார்கள்.

நல்ல உணவு, நல்ல உடை, அழகிய ஆடை ஆபரணங்கள், தீதில்லாத வேலை, கோயில் குளம், பக்தி, நீராடல், திருவிழா,

மகிழ்ச்சியான வாழ்க்கை, கலி நீங்கல் முதலியவைகளையெல்லாம் திருமால் வழிபாட்டுடன் இணைத்துப் பாடினார்கள்.

திருமால் அவதாரங்களில் கிருஷ்ணாவதாரம் பரி பூரணாவதாரமாகும். கண்ணனுடைய அருஞ்செயல்கள் அனைத்தையும் புகழ்ந்து பாராட்டி ஆழ்வார்கள் அழகுறப் பாடினார்கள்.

பாரதக் கலாச்சாரமும், பண்பாட்டு தளமும் பக்திப் பேரியக்கத்தின் காரணமாக புதிய பொலிவு பெற்று விரிவடைந்தது. ஆலயங்களும், புண்ணிய தீர்த்தங்களும், புதிய வழிபாடுகளும் பெருகி பாரத நாடு புதிய தோற்றத்தைக் கொண்டு எழுச்சி பெற்றது.

பாரத நாட்டின் அடுத்த வரலாற்றுக் காலத்தில் முஸ்லிம் படையெடுப்புகளினால் எண்ணற்ற பல சேதங்களும், நாசங்களும் அழிவுகளும் ஏற்பட்டன. பாரத நாட்டுச் செல்வங்கள், கோயில்கள், ஆலயங்கள் பலவும் கொள்ளையடிக்கப்பட்டன.

அதைத் தொடர்ந்து ஐரோப்பியர் படையெடுப்புகளும் ஆங்கிலேயர் ஆட்சியும் அந்த அன்னிய ஆட்சியால் இந்திய வரலாற்றில் எப்போதும் கண்டிராத அளவில் பாரத நாட்டில் பெரும் சேதங்களும் பெரு நாசங்களும் பேரழிவுகளும் ஏற்பட்டன. கணக்கில்லாத அளவில் இந்தியச் செல்வங்கள் கொள்ளையடிக்கப்பட்டன, சூரையாடப்பட்டன. ஆங்கிலேய ஆட்சியின் கொள்ளையைப் பற்றி பாரதி "பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை கொண்டு போகவோ நாங்கள் சாகவோ" என்று மனமுருகப் பாடினார்.

அன்னிய ஆட்சிகளோடு சேர்ந்து பாரதக் கலாச்சாரத்திற்கு எதிரான கலாச்சார ஆக்கிரமிப்புகளும் ஏற்பட்டன. இந்திய மக்களின் ஏழ்மை அதிகரித்தது. ஏழைகளாக, பஞ்சைப் பராரிகளாக, கூலிகளாக, அடிமைகளாக, கொத்தடிமைகளாக, அன்னிய

ஆட்சியாளர்களால் இந்திய நாட்டு ஏழை மக்கள் உலகின் பல நாடுகளுக்கும் கொண்டு செல்லப்பட்டார்கள்.

பாரத நாட்டின் அரசியல் சுதந்திரம் பறிபோயிற்று. பொருளாதாரத்துறையில் நமது ஏழ்மையும் வறுமையும், வேலையின்மையும், பெருகின. செல்வமும் செழிப்பும் சீரழிந்தது. பாரத நாட்டின் பாரம்பரியக் கலாச்சாரத்தின் மீது பெரும் தாக்குதல் நிகழ்ந்தது.

கல்வியும் கலாச்சாரமும் சீரழிந்து, கல்லாமையும், அறியாமையும், கண்மூடிப்பழக்கங்களும் அதிகரித்து புன்மை இருட்கணங்கள் பெருகின.

நமது ஆலயங்களும், புண்ணிய தீர்த்தங்களும் நீர் நிலைகளும் சேதங்கள் அடைந்து பொலி விழந்தன.

அந்த நேரத்தில் நமது தெய்வங்களின் சக்தியாலும், நமது முன்னோர் செய்த புண்ணியத்தாலும், நமது சத்திய தர்மத்தாலும், பாரத நாட்டின் பல சான்றோர்கள், சத்திய சீலர்கள் தேசபக்த வீரர்களின் கடும் தியாகத்தாலும் முயற்சிகளாலும் பாரத நாட்டில் ஒரு புதிய ஆதர்சம் தோன்றியது. ஒரு புதிய மார்க்கம் தோன்றியது. தேசபக்தி என்னும் புதிய மார்க்கம் தோன்றி புதிய ஒளியைப் பரப்பியது.

எண்ணற்ற பாரதிகள் தோன்றினார்கள். தமிழகம் செய்த தவப்பயன், பாரதம் செய்த புண்ணியம் மகாகவி சுப்ரமணிய பாரதி தென்னாட்டில் தோன்றினார். வாழையடி வாழையாகத் தோன்றிய பாரத நாட்டு மகான்களின் வரிசையில் பாரதி தோன்றித் தனது கவிதைகளைப் பாடினார்.

மகாகவி பாரதியின் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் கதைகளிலும், எழுத்துரைகளிலும் தேச பத்தியும், சமுதாய முன்னேற்றமும் தான் உயிர் நாடியாகவும் உயிர் முச்சாகவும் இருந்தது.

அவருடைய கவிதைகள், கட்டுரைகள், பாரத நாட்டின் அரசியல் விடுதலையையும், பொருளாதார முன்னேற்றத்தையும், சமுதாய சீர்திருத்தத்தையும் சமத்துவத்தையும், வற்புறுத்தின. கல்விப் பெருக்கையும், கலைப் பெருக்கையும் வலியுறுத்தின. கல்லாமையையும், அறியாமையையும், கலாச்சார சீரழிவையும் எதிர்த்தன. செல்வமும் கல்வியும் அறிவும் ஆற்றலும் பாரதத்தில் பெருக வேண்டும் என்று வேண்டின.

பாரதப் பண்பாட்டில் வேரூன்றி, காலூன்றி உறுதியாக நின்று புதிய பாரதத்தை பாரதி அழைத்தார்.

பாரதி கண்ணனின் உலக வடிவையும், உலக வடிவிலான கண்ணனையும் வரவேற்றார், பாராட்டினார், வணங்கினார், வழிபட்டார். தேச பக்தியுடன் தெய்வ பக்தியை இணைத்தார்.

ஆழ்வார் பள்ளி கொண்ட பெருமாளைத் தட்டி எழுப்புவதற்குத் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடியதை நினைத்தார். ஆழ்ந்த உரக்கத்திலுள்ள பாரத மக்களைத் தட்டி எழுப்பிச் சுதந்திர உணர்வை ஊட்டி எழுச்சி பெறச் செய்வதற்காக பாரதி, பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி பாடினார்.

பாரத தேசம் விடுதலை பெறுவதற்கும், பெற்ற விடுதலையைப் பேணிக் காப்பதற்கும், நாடு வளர்ச்சி பெற்று முன்னேற்றம் காண்பதற்கும் நாட்டு மக்களுடைய ஒற்றுமையும் ஒருமைப்பாடும் மிகவும் அவசியமாகும். சாதி மத வேறுபாடுகளும் பாகுபாடுகளும் நீங்கி இந்திய மக்கள் ஒன்று பட்டு நின்று செயல்பட வேண்டும். பாரதி இந்திய மக்களின் ஒற்றுமைக்காக பாடினார். சாதி மத வேறுபாடுகள் நீங்கப் பாடினார். பெண்ணடிமை நீங்கி, பெண்கள் விடுதலைப் பெறப்பாடினார்.

நாடும் மக்களும் நலம் பெறப் பாடினார். அச்சம் தீரவும், அமுதம் விளையவும், வித்தைகள் வளரவும் வேள்விகள் ஓங்கவும், மக்கள் அமரத்தன்மை எய்தவும் பாடினார்.

மண் மீதுள்ள மக்கள் பறவைகள், விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு மரங்கள் யாவும் இன்பமுற்று அன்புடன் இணங்கி வாழ்ந்திடப் பாடினார். கிருதயுகத்தைக் கேடின்றி நிறுத்தப்பாடினார்.

செல்வமெட்டும் எய்தி, செம்மை ஏறி, இல்லை என்னும் கொடுமை உலகில் இல்லையாக்கப் பாடினார். கல்வியும் கலைகளும், பாட்டும் பண்ணும், ஆடல்களும், பாடல்களும் பெருகப்பாடினார். வறுமையென்பதை மண்மிசைமாய்ப்பேன் என்று பாடினார்.

நாட்டு மக்கள் நலமுற்று வாழவும் நானிலத்தவர் மேனிலை எய்தவும் பாடினார். "திறமை கொண்ட தீமையற்ற தொழில் புரிந்து யாவரும், தேர்ந்த கல்வி ஞானமெய்தி வாழ்வம் இந்த நாட்டிலே" என்று பாடினார்.

ஆழ்வார்களைப் போலவே பாரதியும் கண்ணன் மீது அளவு கடந்த பக்தியும் ஈடுபாடும் கொண்டிருந்தார். கண்ணனைப் பலவாறாக வடித்துப் பாடினார். பாரதியின் கண்ணன் பாட்டு ஒரு தனி இலக்கியமாகும்.

கண்ணன் பாட்டு என்னும் தனித் தொகுதியில் கண்ணன் என் தோழன், கண்ணன்–என் தாய், கண்ணன்–என் சேவகன், கண்ணன்–என் அரசன்,கண்ணன் என் சீடன், கண்ணன்–என்சற்குரு, கண்ணம்மா–என் குழந்தை, கண்ணன்–என் விளையாட்டுப்பிள்ளை, கண்ணன்–என் காதலன், கண்ணன்–என் காந்தன், கண்ணம்மா–என் காதலி, கண்ணன்–என் ஆண்டான், கண்ணம்மா என் குலதெய்வம் என்று கண்ணனைப் பற்றிப் பாரதி பல பரிமாணங்களிலும் பாடுகிறார். அத்துடன் தோத்திரப் பாடல் தொகுதியிலும் கண்ணன் பிறப்பு, கண்ணன் வரவு, கண்ணன் துதி, கண்ணம்மா, என்னும் தலைப்புகளிலும் பாரதியின் பாடல்கள் வெளிவந்துள்ளன.

ஆழ்வார்களுக்கும் பாரதிக்கும் ஒப்பீடான பல கருத்துக்களையும் அதே சமயத்தில் இருவருக்கும் உள்ள

தனித்தன்மையான கருத்துக்களும் இந்த நூலில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

ஆழ்வார்களும் சிறந்த கவிஞர்களாவர். அவர்களுடைய பக்தியின் ஆழத்தையும், கவியுள்ளத்தின் ஆழத்தையும் காண்பது அரிது. அதுபோல் பாரதி என்னும் மகாகவியின் கவியுள்ளத்தின் ஆழத்தையும் காண்பது கடினம். ஆழ்வார்களின் பாடல்களையும், பாரதியின் பாடல்களையும் படிக்கும் போதும் படிக்கக் கேட்கும் போதும் அக்கவிதைகளின் பொருளையும் கருத்தாழத்தையும் புரிந்து கொள்ள முயலும் போதும், ஆழ்வார்களுக்கும், பாரதிக்கும் உள்ள பல ஒற்றுமைகள் புலப்படுகின்றன. அதை அறிந்து கொள்ளும் முயற்சியில் இந்த நூல் எழுத டுயற்சித்தேன். அந்த முயற்சியில் எந்த அளவில் வெற்றி கிடைத்திருக்கிறது என்பதை மற்றவர்கள் தான் கூறவேண்டும்.

ஆழ்வார்களும் பாரதியும் என்னும் இந்த நூலை எழுதுவதற்கு என்னுடைய பல நண்பர்களும் ஊக்க மூட்டினார்கள். ஆழ்வார்களும், பாரதியும் நமது பெருமைக்குரியவர்கள். அவர்கள் எழுதியுள்ள தெய்வ பக்திப் பாடல்களை, தேச பக்திப் பாடல்களை, மானுட அபிமானப்பாடல்களை, உலக நன்மைக் கான பாடல்களை நாம் படிக்க வேண்டும். திரும்பத்திரும்பப் பாடவேண்டும். ஒரு சில பக்தர்களும், படித்தவர்களும், ஒரு சில அபிமானிகளும் ஆதரவாளர்கள் மட்டுமல்லாமல் அனைவரும் படிக்க வேண்டும். அனைவரும் படிப்பது மட்டுமல்லாமல் மக்களிடையில் பரப்ப வேண்டும், படிப்பதிலும், பரப்புவதிலும், நாம் பெருமைப்பட வேண்டும். பலகாலமாகப் பரப்பப்பட்டு வந்த பல தப்பெண்ணங்களை நீக்க வேண்டும். பக்தி இலக்கியங்களையும் பாரதியின் பாடல்களையும் இலக்கியங்களையும் மக்களிலக்கியங்களாக வேரூன்றச் செய்ய வேண்டும். இந்த நோக்கில் இந்த எளிய பணியைச் செய்துள்ளோம்.

சில இடங்களில் இந்த நூலில் சில பாடல்களையும், சில கருத்துக்களையும் திரும்பத்திரும்பக் கூறியிருக்கலாம். ஆண்டவன்

திருநாமத்தை எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் கூறலாம். சில பாடல்கள் முழுமையாகவும் விரிவாகவும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அப்பாடல்களைப் படிப்பவர்கள் முழுமையாகப் படித்துப் புரிந்து கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்திலேயே விரிவான மேற்கோள்கள் எடுத்துக் காட்டிக் கூறப்பட்டிருக்கின்றன.

இந்நூலைச் சரிபார்த்து, அச்சுப் பிழைகள், ஒத்துப் பிழைகளைத் திருத்திய உதவிய எனது மகள் கி. பகீரதி பி.ஏ.பி.எட், எம்.ஏ தமிழ்அவர்களுக்கு நான் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்நூலின் கையெழுத்துப்பிரதியைப்படி எடுக்கவும், எழுதுவதற்கு ஊக்க மூட்டியும், அச்சகத்திற்குக் கொண்டு செல்வதற்குத் துணையாக இருந்த எனது துணைவியார் திருமதி. நாகலட்சுமிக்கும் எனது நன்றி உரித்தாகும்.

எனது முந்திய நூல்களைக் குறிப்பாக, பாரதப் பண்பாட்டு தளத்தில் பாரதி, பாரதியின் புதிய ஆத்திசூடி ஒரு விளக்கவுரை, சிலப்பதிகாரத்தில் வைதீகக் கருத்துக்கள் என்னும் நூல்களை நன்கு ஆதரித்த தமிழ் மக்களுக்கும் எனது நன்றி உரித்தாகும். இந்த நூலை சிறந்த முறையில் அச்சுக் கோர்த்தும் அச்சடித்தும் உதவிய நண்பர்களுக்கும் எனது நன்றியைப் பதிவு செய்து கொள்கிறேன்.

அ.சீனிவாசன்

நூலாசிரியர்

# 1. தோற்றுவாய்

ஆழ்வார்கள் பாரதநாட்டின் பக்தி இயக்கத்தின் முன்னோடிகள். பக்தி இயக்கத்திற்குத் தமிழகம் பாரத நாட்டிற்கே முன்னோடியாக இருந்திருக்கிறது. தமிழகத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தி இயக்கத்தின் இருகண்களாக விளங்குகிறார்கள்.

ஆழ்வார்கள் பாடிய திவ்யப்பிரபந்தம் பாடல்கள், பக்திசுவை, தமிழ்ச்சுவை, மனிதாபிமானம், மனித நேயம், தியாக உணர்வு, அர்ப்பணிப்பு, அன்பு கருணை, அனைத்து மக்களையும், இயற்கை சக்திகளையும் மனித வாழ்கையையும் ஒன்றிணைத்த உலகவியல் தத்துவம், உலகம் முழுவதையும், உலகில் உள்ள பொருள்கள் அனைத்தையும் மகாவிஷ்ணுவின் வடிவில் கண்ட பரந்த ஆன்மீகத் தத்துவம், ஸ்ரீமன் நாராயணனை உலக வடிவில் கண்ட ஒரு உயர்வான நெடிது நோக்கு மக்களுக்கு மகிழ்ச்சியை ஊட்டும் உத்வேகம், மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கை அனுபவங்கள், முதலிய பல்சுவைகளும், ஆழ்ந்த கருத்துக்களும் தத்துவங்களும் நிறைந்தவை.

"சர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்னும் பேருண்மையை ஆதாரமாகக் கொண்டு, அந்த உயர்ந்த தத்துவப்பொருளை மெய்ப் பொருளாகக் கொண்டு, திருமாலையும் திருமாலின் அவதாரப் பெருமைகளையும், அரிய செயல்களையும் ஆழ்வார்கள் தங்கள் பக்திப் பாடல்களில் இணைத்து இனிய தமிழில் இசையுடன் சேர்த்துப் பாடினார்கள்.

உலகம் முழுவதும் ஆண்டவனின் வடிவம் என்னும் மெய்க்கருத்தில், புல்பூண்டு, செடி கொடி, மரம் விலங்குகள் பறவைகள், பூச்சி, புழு முதலிய எண்ணற்ற உயிரினங்களும் மனிதனும், இப்பிரபஞ்சத்தில் உள்ள சகல பொருள்களும் விஷ்ணுவின் வடிவம் என்னும் மகத்தான தத்துவத்தை உள்ளடக்கி

ஆழ்வார்கள் இனிய தமிழ்ச் சுவையுடன் தங்கள் பாடல்களைப் பாடியுள்ளார்கள். அதனால் அப்பாடல்கள் திவ்யப்பிரபந்தம் என்று பெயர் பெற்றது.

இந்தப் பேருலகத்தில் நாம் காணும், சந்திக்கும், உணரும் உயிர்கள் அனைத்தும் மட்டுமல்லாமல் நாம் சந்திக்கும் பஞ்சபூத சக்திகளின் வடிவங்களும் பகுதிகளும் அவைகளின் கோலங்களும் காட்சிகளும், இருளும் ஒளியும் அவைகளின் உணர்வுகளும், செயல்களும் ஆண்டவனின் வடிவங்கள் என, ஆழ்வார்கள் ஸ்ரீமன் நாராயணனைப் பற்றியும் அவனுடைய அவதாரங்களையும், அவதார வடிவங்களையும் அவதாரப் பெருமைகளையும் மகிமைகளையும் பற்றியும் சுவைப்பட பாடினார்கள்.

"சர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்பது சநாதனதர்மத்தின் சித்தாந்தம். எல்லாம் கடவுள் மயம். எல்லாத் தோற்றங்களும், எல்லா வடிவங்களும் எல்லா உருவங்களும் எல்லாக் காட்சிகளும், எல்லாக் கோலங்களும், எல்லா நிலைமைகளும், எல்லா உயிர்களும் எல்லாப் பொருள்களும், எல்லா சக்திகளும் எல்லா நிகழ்ச்சிகளும், எல்லாச் செயல்களும் எல்லாம் ஈசன்மயம். (ஆதலால் எல்லாம் ஒன்றுக்கொன்று சமானம்) என்று பாரதியார் தனது பகவத் கீதை மொழிபெயர்ப்பு நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

ஆழ்வார்கள் திருமாலின் திருவடிவங்களைப் பற்றி விரிவுபடப் பக்தி உணர்வுடன் உள்ளம் உருகிப் பாடியிருக்கிறார்கள். திருமாலின் அவதாரங்களில் இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும பன்முகச் சிறப்புகளைப் பெற்றவை. எனவே ஆழ்வார்கள் அந்த இரு அவதாரச் சிறப்புகளையும் பற்றி மிகவும் விரிவுபடப் பாடியிருக்கிறார்கள்.

திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதிகளையும், திவ்ய தேசங்களையும் அவைகளின் செழிப்பையும் சிறப்புகளையும் அவைகளில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளைப் பற்றியும் ஆழ்வார்கள் மிகவும் சிறப்பாகப் பாடியுள்ளார்கள்.

திருமாலின் இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சகாப்தமாகும். ஒவ்வொரு யுகச் சிறப்பையும் பெற்றதாகும். இந்த அவதாரங்களில் இராமபிரானும், கண்ணபிரானும் செய்யும் செயற்கரிய காரியங்கள் அனைத்தும் மனிதனுடைய தனி வாழ்க்கையுடனும், சமுதாய வாழ்க்கையுடனும் உலகச் செயல்பாடுகளுடனும் மிகவும் நெருக்கமாகத் தொடர்புகள் கொண்டனவாக உள்ளதை ஆழ்வார்கள் மிகவும் தெளிவுபடவும், விரிவுபடவும் பாடியிருக்கிறார்கள்.

திருமாலின் திரு அவதாரச் சிறப்புகளைப் பற்றிக் கண்ணனே பகவத் கீதையில் சிறப்பித்துக் கூறியுள்ள வாசகங்கள் மிகவும் பிரசித்தமானவை.

பாரதியாரின் பகவத் கீதை மொழி பெயர்ப்பில், அவர் தமிழில் அவ்வாசகங்களை மிகவும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார். அந்தப் பிரசித்தி பெற்ற வாசகங்கள் தமிழில்,

"பாரதா, எப்போதெப்போது தர்மம் அழிந்து போய் அதருமம் எழுச்சி பெருமோ, அப்போது நான் என்னைப் பிறப்பித்துக் கொள்கிறேன்."

"நல்லோரைக் காக்கவும் தீயன செய்வோரை அழிக்கவும் அறத்தை நிலைநிறுத்தவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன்" என்பதை உலகம் நன்கறியும்.

தீயோரை மாய்த்து நல்லோரைக் காத்து அறத்தை நிலைநிறுத்தும் அந்த மகத்தான யுகக்கடமை மனித சமுதாயத்திற்கு நம்பிக்கை தறுவதாகும். சோர்வைப் போக்கி, புதிய நம்பிக்கையைக் கொடுத்து செயலில் ஊக்கத்தையும் தெம்பையும் அளித்து மக்களைத்தட்டி எழுப்பும் இந்த மகத்தான வாசகங்கள்

ஆழ்வார்களுக்கும் மகாகவி பாரதிக்கும் மிகுந்த உள்ளக் கிளர்ச்சியையும், செயலூக்கத்தையும் அளித்திருக்க வேண்டும்.

திருமாலின் திருவடிவங்களைச் சிறப்பாக இராமபிரானின் அருஞ்செயல்களைப் பற்றியும் இன்னும் அதிகமாக கண்ணபிரானின் சிறப்புகளைப் பற்றியும் பல வேறுவடிவங்களில் ஆழ்வார்கள் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். ஆண்டவனை நாயகனாகவும் தங்களை நாயகியாகவும் பாவித்து ஆழ்வார்கள் சிருங்கார ரசத்துடன் அற்புதமான பல பாடல்களைப் பாடியுள்ளதைப் பார்க்கிறோம். இன்னும் கண்ணனைக் குழந்தையாகப் பாவித்து அவனுடைய திரு அவதாரச் சிறப்புகளைப் பாராட்டி, அவனை உள்ளங்காலிலிருந்து உச்சிவரையிலும், அவனது அங்கங்களின் அங்க அசைவுகளின் அழகையும் சிறப்புகளையும் அனுபவித்துப் பாடியுள்ளார்கள். கண்ணனின் குழந்தைப் பருவத்தைத் தாலாட்டியும், பாலூட்டியும், சோறூட்டியும் மற்றும் அம்புலிப்பருவமாக, செங்கீரைப் பருவமாக, சப்பாணிப் பருவமாக, தளர் நடைப்பருவமாக, அச்சோப்பருவமாக பாவித்துப் பாடியுள்ளார்கள்.

இன்னும் குழந்தைக் கண்ணனுக்குக் காது குத்தியும், நீராட்டியும், குழல்வாரி விட்டும் பூச்சூட்டியும் பலவேறு இளமை (குழந்தை) விளையாட்டுகள் விளையாடியும் மகிழ்ந்திருக்கிறார்கள். கண்ணனின் கணக்கில்லாத லீலைகளைக் கண்டும் கற்பித்தும் வியந்தும், பாராட்டியும், பக்தியுடன் பாடி பரவசப்பட்டிருக்கிறார்கள்.

பாரதி இன்னும் ஒரு படி மேலே சென்றார். பெரியாழ்வாரின் பாடல்கள் பாரதியை வெகுவாக ஈர்த்திருக்கிறது. கண்ணனைத் தாயாகவும், தந்தையாகவும், தோழனாகவும், குருவாகவும், சீடனாகவும், ஆண்டானாகவும், சேவகனாகவும், காந்தனாகவும், கண்ணம்மாவைக் குழந்தையாகவும், காதலியாகவும் பலவேறு

வடிவங்களில் கண்டும், கற்பித்தும் மிகவும் அபூர்வமான பல அறிய, காலத்திற்கேற்றக் கருத்துக்களையும் வெளிப்படுத்தித் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டும் அர்ப்பணித்துக் கொண்டும் கண்ணனுடன் இரண்டறக் கலந்தும் பாடியுள்ளதைக் காண்கிறோம்.

ஆழ்வார்களும் பாரதியும் கண்ணனைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களில் சில சாகாவரம் பெற்ற கருத்துமிக்கத் தமிழ்ச் சொற்களைச் சந்தித்திருக்கிறோம்.

பெரியாழ்வாரின் "பல்லாண்டு, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா" என்னும் அருமையான சொற்கள் உலகம் உள்ளவும், தமிழ் உள்ளளவும் நிற்கும்.

திருவடி முதல் திருமுடி வரைக்கண்ணனின் திருமேனியழகைப் பெரியாழ்வார் பாடுகிறார்.

"முத்தும், மணியும், வயிரமும் நன்பொன்னும் தத்திப்பதித்துத் தலைப்பெய்தாய்போல, எங்கும் பத்துவிரலும் மணிவண்ணன் பாதங்கள்ஒத்திட்டிருந்தவா காணிரே" என்றும்,

"மண்ணும் மலையும், கடலும் உலகேழும் உண்ணும் திறந்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு வண்ணமெழில்கொள் மகரக் குழையிவை, திண்ணமிருந்தவா காணீரே என்றும் பாடி சிறப்பிக்கிறார்."

பாரதி தனது கண்ணன் பாட்டுகளில், "சாத்திரம் கோடி வைத்தாள், அவை தம்மினும் உயர்ந்ததோர் ஞானம் வைத்தாள்" என்றும், "வேதங்கள் கோத்து வைத்தான், அந்த வேதங்கள் மனிதர் தம்மொழியில் இல்லை" என்றும் "கூலிமிகக் கேட்பார், கொடுத்ததெலாம் தாம் மறப்பார்" என்றும்

கண்ணன் என்னும் அரசன், "வேரும் வேரடி மண்ணும் இல்லாமலே வெந்து போகப் பகைமை பொசுக்குவான், பாரும் வானமும் ஆயிரம் ஆண்டுகள் பட்ட துன்பங்களைக் கணத்திடை மாற்றுவான்" என்றும், "உலகினில் வேண்டிய தொழில் எலாம் ஆசையும் தாபமும் அகற்றியே புரிந்து வாழ்க நீ" என்றும், "சாத்திரங்கள் பல தேடினேன், அங்கு சங்கையில்லாதன சங்கையாம்" என்றும் கண்ணம்மாவிடம், "உன் கண்ணில் நீர்வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி" என்றும், கண்ணன் என்னும் காதலனிடம், "உணவு செல்லவில்லை சகியே உறக்கம் கொள்ளவில்லை, பாலும் கசந்ததடி சகியே படுக்கை நொந்ததடி" என்றும் "சுட்டும் விழிச் சுடர்தான் – கண்ணம்மா சூரிய சந்திரரோ? என்றும், "நெரித்த திரைக் கடலில் நின் முகம் கண்டேன், நீல விசும்பினிடை நின் முகம் கண்டேன்," என்றும் "சொல்லித் தெரிவதில்லை, மன்மதக் கலை" என்றும் "பாயுமொளி நீ எனக்கு, பார்க்கும் விழி நானுனக்கு" வீணையடி நீ எனக்கு மேவும் விரல் நானுனக்கு என்றும், இன்னும் துன்பமும் நோயும் மிடிமையும் தீர்த்துச் சுகமருளல் வேண்டும் என்றும் "துன்பம் இனி இல்லை சோர்வில்லை, தோற்பில்லை அன்பு நெறியில் அறங்கள் வளர்த்திட நின்னைச் சரணடைந்தேன் என்றும் பாரதி கண்ணனிடம் கண்ணம்மாவிடம் கூறும் கருத்து மிக்க பாடல்கள் நாம் படிக்கப்படிக்க நம்மை முழுமனிதனாக்கும். இவை என்றென்றும் நிலை நிற்கும் கருத்துக் கருவூலங்களும் தமிழ் சுவைச் சொற்களுமாகும்.

ஆண்டவனுக்கே பல்லாண்டு பாடிய பெருமை ஆழ்வார்களுக்கே உண்டு. அதனால் தான் வில்லிபுத்தூர் விஷ்ணுசித்தர் பெரியாழ்வார் என்று பெயர் பெற்றார். திருமால் காத்தல் கடவுள் என்று பெயர் பெற்றவராகும். ஆயினும் முத்தொழில்களுக்கும் மூலப்பொருளாகவே அவ்வுலக நாயகனைக் கம்ப நாட்டாழ்வார் குறிப்பிட்டுள்ளார். ஆக்கலும் நிலை பெறுத்தலும்

நீக்கலும் என முத்தொழிலையும் அலகிலா விளையாட்டுடையவராக, அவரைத் தலைவராகவே சிறப்புறக் கம்பநாடர் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

ஆண்டவனை நாம் தேடிச் செல்லவேண்டியதில்லை. கோவிலுக்குப் போவது கூடாது என்பதல்ல. கோவிலுக்குச் செல்லும் போது நமது மனதில் ஒருமைப்பாடு, ஒரு குவிந்த நிலைபாடு ஏற்படுகிறது. ஆயினும் ஆண்டவனே பக்தனைத் தேடிச்செல்வதே வைணவத்தின் தனிச்சிறப்பாகும். இராமபிரான் குகனையும், அகலிகையையும், சுக்கிரீவனையும், சபரியையும், வீடணனையும் தேடிச் சென்றதையும் காண்கிறோம். திருமங்கை மன்னனை ஸ்ரீமன் நாரயணனே தேடிச் சென்று நாராயண நாமத்தைக் கண்டு கொள்ளச் செய்ததைக் காண்கிறோம்.

பக்தனுடைய குரலுக்குச் செவி சாய்க்கும் கண்ணனை, அவன் பெருமையை ஆழ்வார்கள் வியந்து வியந்து பாராட்டியிருக்கிறார்கள். சோதனைகள் என்பது இயற்கையின் விளையாட்டு, அந்தச் சோதனைகளிலிருந்து மனிதனைக் கரை சேர்க்கிறது நாராயண மந்திரம்.

இந்தப் பேருண்மையை உலகிற்குத் தெளிவு படுத்தவே பாரதி பாஞ்சாலி சபதத்தைப் பாடினான். கண்ணனின் சிறப்பை, அக்கண்ணனின் பெருமையை வெளிப்படுத்தக் கண்ணனி –டத்திலேயே தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு, கீதையைத் தமிழில் பாரதி மொழியாக்கம் செய்து அதற்கு ஒரு அற்புதமான முன்னுரையையும் எழுதி திருமாலின் பெருமையை விளக்கிக் கூறுகிறார்.

திருமாலின் தனிச்சிறப்புகளில் ஒன்று அவருடைய நின்ற வண்ணமும் கிடந்த வண்ணமும் ஆகும். சயனம் திருமாலின்

தனிச்சிறப்பு. அவர் ஆழ்ந்த சிந்தனையில் அரிதுயிலில் ஆழ்ந்துள்ளார். எனவே அத்திருமாலை அவருடைய பெருந்துயிலிலிருந்து தட்டி எழுப்ப, அருள் பாலிக்க ஆழ்வார்கள் பள்ளியெழுச்சிப் பாடல்களும், பாவைப் பாடல்களும் பாடியிருக்கிறார்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள், பாரதியின் உள்ளத்தைக் கவர்ந்திருக்கிறது. அவருடைய சிந்தனையைத் தூண்டியிருக்கிறது. எனவே பாரதி ஆழ்வார்களின் வழியில் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி பாடியுள்ளார்.

ஆழ்வார்கள் தங்கள் பக்தி வழி மூலம், பக்தி இயக்கத்தின் மூலம், மக்களை ஒன்றுபடுத்தி, மக்களின் முழு விடுதலைக்குப் பாதை காட்டுகிறார்கள். ஆழ்வார்கள் வாழ்க்கையை ரசித்துப் பாடுகிறார்கள். அது வைணவ தர்மத்தின் தனிச் சிறப்பாகும். வாழ்க்கையைத் துறந்து காட்டிற்குச் சென்று தனிமையாக நின்று வீடு பேற்றிற்குச் செல்ல முயலும்படி வைணவம் கூறவில்லை. வாழ்க்கை யோடிணைந்த பக்தி மார்க்கத்தையே வைணவம் வலியுறுத்திக் கூறுகிறது. நல்ல உணவு, நல்ல ஆடை ஆபரணங்கள், நல்ல வாழ்க்கை இன்பங்கள் அமைந்து மனிதனும் மனித சமுதாயமும் முழுவிடுதலை பெற வேண்டும் என்பதே வைணவத்தின் முயற்சியாகும்.

மக்களைப் பேதங்களின்றி ஒற்றுமைப்படுத்துவது பக்தி மார்க்கத்தின் மற்றொரு தனிச் சிறப்பாகும். மக்களைப் பல்லாயிரக் கணக்கில், பல லட்சக் கணக்கில் திருவிழாக்களிலும் நோன்புகளிலும், பண்டிகைகளிலும், தேரோட்டங்களிலும், உற்சவங்களிலும் ஒன்று திரட்டிக் குவிப்பது பக்தி இயக்கத்தின் சிறப்பான பணிகளில் ஒன்றாகும். அவைகளைத் திறம்படச் செய்து காட்டிட, செய்து முடிக்க ஆழ்வார்களின் அருமையான கவிதைகளும் பாட்டுகளும் வழிகாட்டிகளாக அமைந்திருக்கின்றன.

பக்தி இயக்கமும் பக்தி மார்க்கமும் மனித குல விடுதலை இயக்கத்தின் ஒரு முக்கிய கட்டமாகும். அதற்கு பாரத நாட்டில் குறிப்பாகத் தமிழகத்தில் ஆழ்வார்களும் நாயன் மார்களும் வழி காட்டிகளாக இருந்தார்கள். மன்னராட்சி முறையில் இருந்த சில கொடுங்கோன்மைகளுக்கு எதிராகவும், பல படையெடுப்புகள் காரணமாக ஏற்பட்ட துன்பதுயரங்கள், மற்றும் கொடுமைகளுக்கு எதிராகவும், சாதி வேறுபாடுகள், சாதிக் கொடுமைகளுக்கு எதிராகவும், அஞ்ஞானத்திற்கும் அறியாமைக்கும் எதிராகவும் மக்களைத் தட்டி எழுப்ப ஆழ்வார்கள் குரல் கொடுத்திருக்கிறார்கள். மக்களைத் திரளாகச் சேர்த்தும் ஒன்று திரட்டியும் செயலில் ஈடுபடுத்தியிருக்கிறார்கள்.

பாரதி, நாடு அடிமைப்பட்டிருந்த காலத்தில், நாட்டு மக்களுக்கு விடுதலை உணர்வை ஊட்டி, அச்சத்திலிருந்தும் அறியாமையிலிருந்தும் விலகி விழிப்படையச் செய்து செயலில் ஈடுபடுத்த ஆழ்வார்களின் வழியையும் பின்பற்றி காலத்திற்கு ஏற்றவாறு காலத்திற்கு ஏற்ற வகையில் அவ்வழிகளைப் பின்பற்றிப் பயன்படுத்தியிருக்கிறார்.

ஆழ்வார்கள் தலை சிறந்த கர்ம யோகிகளாக வாழ்ந்து பக்தி மார்க்கத்தைச் செயல்படுத்தியிருக்கிறார்கள். பாரதி இருபதாம் நூற்றாண்டின் கர்ம யோகியாக மக்கள் அனைவரையும் கர்மயோக நிலைக்குக் கொண்டு செல்லும் வழிகாட்டியாக ஆழ்வார்களின் தொடர்ச்சியாகத் திகழ்வதைக் காண்கிறோம்.

வேதங்களின் சாரமாகவும், விளக்கமாகவும் ஆழ்வார்களின் பாசுரங்கள் கருதப்படுகின்றன. ஸ்ரீமத் பாகவதத்தின விளக்கமாக ஆழ்வார்களின் பாசுரங்கள் விளங்குகின்றன. பாரதி தனது கவிதைகளுக்கும் கவிதைகளின் கருத்துக்களுக்கும் பாரதத்தின் பண்டயப் பண்பாடுகளையும் பகவத் கீதையையும் வழிகாட்டியாகக் கொண்டுள்ளார் என்று கூறலாம்.

## 2. உலகப் பெருவடிவம்

உலகம் முழுவதையும் நாராயண வடிவமாகவும், நாராயணனை உலக வடிவமாகவும் காண்பது ஆழ்வார்களுக்கும் பாரதிக்கும் பொதுவானதாகும்.

“பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு,
பலகோடி நூறாயிரம்,
மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா உன்,
செவ்வடி செவ்வித்திருக்காப்பு”

“அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு,
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு
படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே”

என்று வில்லிபுத்தூர் பட்டர்பிரான் திருப்பல்லாண்டு பாடினார். தான் மட்டும் பல்லாண்டு பாடவில்லை. தன்னோடு சேர்ந்து உலகோர் அனைவரையும் பல்லாண்டு பாட அழைக்கிறார்.

அனந்தமே திருமாலின் வடிவம். அனந்தத்தோடு எது சேர்ந்தாலும் அதுவும் அனந்தமே. பல்லாண்டும் பல்லாண்டும் பல்லாயிரத்தாண்டும் பல கோடி நூறாயிரமும் அனந்தமே. அடியாரும்

அனந்தனும் அவன் மங்கையும் அவனது ஆழியும் சங்கும் அனந்தமே. அனந்தமே உலக வடிவமும் ஆகும்.

பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு பாடல்கள் உலகில் தனிச்சிறப்பு பெற்றதாகும். "எல்லையொன்றின்மை" என்னும் பொருளைக் கம்பன் தனது குறிகளால் காட்டிட முயலும் முயற்சியைப் பாரதி சுட்டிக் காட்டுகிறார்.

திருமாலைப் பற்றிப் பாற்கடல் பள்ளியான் ஞானச்சுடர் என்று நம்மாழ்வார் கூறுகிறார். நம்மாழ்வாரின் திருவாய் மொழி வேதப் பொருளாகும். திருமாலின் ஞானவடிவை, உலகவடிவைப் பல பாடல்களிலும் குறிப்பிடுகிறார், எல்லாப் பொருள்களும் தன்னுள் ஒடுங்கி நிற்கும் ஞானப் பொருளே பாற்கடற் பள்ளியான் என்று கூறுகிறார்.

"எவரும், யாவரும் எல்லாப் பொருளும் கவர்வின்றித் தன்னுள் ஒடுங்க நின்ற பவர் கொள் ஞான வெள்ளச் சுடர் மூர்த்தி அவர் எம் ஆழியம் பள்ளியாரே" என்று நம்மாழ்வார் திண்ணன் வீடு என்னும் தலைப்பில் கண்ணன் பெருமையைப் பற்றிக் கூறுகிறார்.

உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் கண்ணன் என்றும், கண்ணனே எல்லாப் பொருள்களும் என்றும் குறிப்பிடும் கருத்தை மிகவும் அற்புதமான முறையில் இனிய தமிழ்ச் சுவைமிக்க பாடல்களில் பாடியுள்ளார். அப்பாடல்களின் சிகரமாக " புகழும் நல்ஒருவன் என்கோ" என்று தொடங்கும் இனிய பாசுரங்கள் அமைந்துள்ளன. நம்மாழ்வார் பெருமானின் அப்பாடல்களை எத்தனை தடவை பாடினாலும் திகட்டாது, தெவிட்டாது. அப்பல் சுவைப் பாசுரம்.

"புகழுநல் ஒருவன் என்கோ
பொருவில் சீர் பூமியென்கோ

திகழும் தண் பரவையென்கோ
தீயென்கோ! வாயுவென்கோ!
நிகழும் ஆகாசம் என்கோ!
நீள்சுடர் இரண்டும் என்கோ!
இகழ்வில் இவ்வனைத்தும் என்கோ!
கண்ணனைக் கூவுமாறே! ”

இப்பூமியும், தண்ணீரும் தீயும், வாயுவும் ஆகாயமும் ஆகிய பஞ்ச பூதங்களும், சூரியன், சந்திரன் ஆகிய சுடர்கள் இரண்டும் ஆகிய அனைத்தும் கண்ணனையே குறிக்கின்றன என்று கூறி மேலும் தொடர்கிறார்.

“ கூவு மாறறிய மாட்டேன்
குன்றங்கள் அனைத்து மென்கோ!
மேவு சீர்மாரியென்கோ!
விளங்கு தாரகைகள் என்கோ!
நாவியல் கலைகள் என்கோ!
ஞான நல்லாவி யென்கோ!
பாவுசீர் கண்ணன் எம்மான்
பங்கயக் கண்ணனையே!”

இவ்வுலகில் ஓங்கி நிற்கும் மலைகள் அனைத்தும், அம்மலைகளின் சுவடுகளிலும் வானம் முழுவதிலும் அசைந்து செல்லும் மேகக் கூட்டங்களும், அவை பொழியும் மழைப் பெருக்கமனைத்தும், விண்ணில் ஒளி வீசும் நட்சத்திரங்கள் அனைத்தும், நாவில் வெளிப்படும் கலைகள் அனைத்தும்,

அக்கலைகளால் பண்படும் ஞானமனைத்தும், எனது இனிய கண்ணனேயாகும் என்று கூறி மேலும் தொடர்கிறார்.

ஆழ்வார் கண்ணனின் பேரழகில் ஈடுபட்டு மெய்மறந்து பாடுகிறார். அந்த சங்கு சக்கரத்தானை எப்படி விவரிப்பேன் எனக்கூறி,

" பங்கயக் கண்ணன் என்கோ!
பவளச் செவ்வாயன் என்கோ!
அங்கதிர் அடியன் என்கோ!
அஞ்சன வண்ணன் என்கோ!
செங்கதிர் முடியன் என்கோ!
திருமறுபார்பன் என்கோ!
சங்கு சக்கரத்தன் என்கோ!
சாதி மாணிக்கத்தையே!"

என்று பாடிக் கொண்டே மேலும் தொடர்கிறார்.

கண்ணனை சாதி மாணிக்கம், பொன்முத்து, நல்வயிரம் என்றெல்லாம் கூறி மகிழ்கிறார்.

"சாதி மாணிக்கம் என்கோ!
சவிகொள் பொன்முத்தம் என்கோ!
சாதி நல்வயிரம் என்கோ!
தவிவில் சீர் விளக்கமென்கோ!
ஆதியஞ் சோதியென்கோ!
ஆதியம்புருடன் என்கோ!
ஆதுமில் காலத் தெந்தை
அச்சுதன் அமலனையே!

என்று பாடுகிறார். இன்னும் நமக்கு ஏற்படும் தீதுகளைப் போக்கும் மருந்தாகவும், நமது நலன்களைப் பெருக்கும் அமுதமாகவும், சுவைமிக்க கட்டிகளாகவும், அறுசுவை மிக்க ஆகாரமாகவும், நெய்ச்சுவைத் தேறலாகவும் கனியாகவும் பாலாகவும் கண்ணனைக் கற்பித்துப் பாடுகிறார்.

மனிதனுக்குச் சில நேரங்களில் எத்தனையோ கேடுகளும் தீதுகளும் நோய்களும் தீவினைகளும் சேர்கின்றன. அவைகளைத் தடுக்கவும் தீர்க்கவும் மருந்துகள் தேவைப்படுகின்றன. அத்தகைய நோய் தீர்க்கும் மருந்தாக இருக்கிறான் கண்ணன். நோய் தீர்ந்தால் மட்டும் போதாது. நோய் வாய்ப்பட்ட சமுதாயமும் தீதுகள் வாய்ப்பட்ட சமுதாயமும் பலவீனப்பட்டிருக்கும். நோய் தீர்ந்த பின்னரும் நோயின் விளைவால் ஏற்பட்ட பலவீனம் தொடரும். அந்த பலவீனத்தைப் போக்க நல்ல சத்துள்ள உணவு தேவைப்படுகிறது. எனவே அமுதமாக, அறுசுவை அடிசிலாக (உணவாக) நெய்யாகக் கனியாகப் பாலாகக் கண்ணனைக் காண்கிறார் ஆழ்வார்.

அச்சுதன் அமலன் என்கோ!
அடியவர் வினை கெடுக்கும்
நச்சுமா மருந்தம் என்கோ!
நலம் கடல் அமுதம் என்கோ!
அச்சுவைக்கட்டி என்கோ!
அறுசுவை அடிசில் என்கோ!
நெய்ச்சுவைத் தேறல் என்கோ!
கனியென்கோ பாலென்கோ!

என்று பாடுகிறார்.

பால் எனப்படுவது ஆவின் பால் என்பது மட்டுமல்ல. வேதத்தின்

பயனும் பாலேயாகும். எனவே ஆழ்வார் சடகோபனார் கண்ணனை நான்கு வேதப் பயனாகவும், சமய நீதியின் நூல்களாகவும், கேள்வி ஞானங்களாகவும் இசையாகவும் வினையின் (நற்செயல்களின்) பயன்களாகவும் கண்டு உவகை கொள்கிறார். வினையும் வினையின் பயனும் நமது தத்துவ ஞானத்தின் கூறுகளாகும் எனவே!

"பாலென்கோ நான்கு வேதப்

பயன் என்கோ! சமய நீதி

நூலென்கோ நுடங்கு கேள்வி

இசையென்கோ! இவற்றுள் நல்ல

மேலென்கோ! வினையின் மிக்க

பயனென்கோ! கண்ணன் என்கோ!

மாலென்கோ மாயன் என்கோ!

வானவர் ஆதியையே"

என்று நெஞ்சுருகப் பாடுகிறார்.

கண்ணனை ஆழ்வார் வானவர் ஆதி எனக் குறிப்பிடுகிறார். வானவர் என்றால் மேலானவர், மேன் மக்கள் என்றும் பொருள் கொள்ளலாம் மேலானவர்களின் ஆதியாக ஆதிமூலமாகக் கண்ணனைக் காண்கிறார்.

"வானவர் ஆதி என்கோ!

வானவர் தெய்வம் என்கோ!

வானவர் போகம் என்கோ!

வானவர் முற்றுமென்கோ!

ஊனமில் செல்வம் என்கோ!

ஊனமில் சுவர்க்கம் என்கோ!

ஊனமின் மோக்கம் என்கோ!

ஒளிமணி வண்ணனையே!"

என்று நம்மாழ்வார் பாடுவது சிறப்பாகும்.

செல்வத்தையும் சுவர்க்கத்தையும் மோட்சத்தையும் குறிப்பிடும் ஆழ்வார்பிரான், ஊனமில் என்னும் அடைமொழியுடன் பேசுகிறார். செல்வம் என்பது ஊனமில்லாததாக இருக்க வேண்டும். அதே போல் சுவர்க்கமும் மோட்சமும் ஊனமில்லாததாக இருக்க வேண்டும்.

"திறமை கொண்ட தீமையற்ற

தொழில் புரிந்து யாவரும்

தேர்ந்த கல்வி ஞானமெய்தி

வாழ்வம் இந்த நாட்டிலே!"

என்று பாரதி பாடுகிறார். தீமையற்ற தொழில் புரிவது என்றே பாரதி குறிப்பிடுகிறார்.

"வேண்டா தனைத்தையும் நீக்கி

வேண்டிய தனைத்தையும் அருள்

வதுன் கடனே"

என்று பாரதி வேண்டுகிறார்.

இன்னும்,

"கோதகன்ற தொழில் உடைத்தாகி" என்றும் "வஞ்சமற்ற தொழில் புரிந்து உண்டு வாழும் மாந்தர்" என்றும் "சக்தி பெற்று நல்ல தொழில் செய்யும்" எனவும் பாரதியார் பாடுகிறார்.

“தீமையற்ற தொழில்கள் மூலம்தான் ஊனமில்லாத செல்வத்தைச் சேர்க்க முடியும். நல்வழியில் செல்வம் சேர்ப்பதையே ஆழ்வார்களும் அவர் வழியில் பாரதியும் எடுத்துக் கூறியுள்ளனர்.

அத்துடன் சுவர்க்கமும், மோட்சமும் ஊனமில்லாதிருக்க வேண்டும். இதில் சுவர்க்கம் என்பது மகிழ்ச்சியான வாழ்க்கையும், மோட்சம் என்பது முழுமையான விடுதலையுமாகும். அதில் அரைகுறையோ ஊனமோ இருப்பதில் ஆழ்வாருக்கும் பாரதிக்கும் உடன்பாடு இல்லை.

கண்ணனே மும்மூர்த்திகளின் முழுவடிவம் என்றும் சமயசமரசமும் உடன்பாடும் காண்கிறார் ஆழ்வார்.

“ஒளிமணி வண்ணன் என்கோ!
ஒருவனென்றேத்த நின்ற
நளிர் மதிச் சடையன் என்கோ!
நான்முகக் கடவுள் என்கோ!
அளி மகிழ்ந்துலகமெல்லாம்
படைத்தவை ஏத்த நின்ற
களிமலர்த்துளவ னெம்மான்
கண்ணனை மாயனையே!”

என்றும்,

“கண்ணனை மாயன் தன்னைக்
கடல்கடைந்து அமுதம் கொண்ட
அண்ணலை அச்சுதன் தன்னை
அனந்தனை அனந்தன் தன்மேல்
நண்ணி நன்குறைகின்றானை
ஞால முண் டுமிழ்ந்த மாலை

எண்ணு மாறறிய மாட்டேன்

யாவரும் எவரும் தானே!"

எனப் பாடுகிறார். அதைத் தொடர்ந்து கண்ணனை அறிவின் உணர்வு நிலையின் முழுவடிவமாக ஆழ்வார் காண்கிறார். ஆவியும் உயிருமாக அதிலும் பற்றில்லாதவனாகக் கண்ணனைக் காண்கிறார்.

"யாவையும் யவரும் தானாய்

அவரவர் சமயம் தோறும்

தோய்விலன் புலன் ஐந்திற்கும்

சொலப்படான் உணர்வின் மூர்த்தி

ஆவிசேர் உயிரின் உள்ளால்

ஆது மோர் பற்றிலாத

பாவனை அதனைக் கூடில்

அவனையும் கூடலாமே!

என்று பாடி முடிக்கிறார்.

பராங்குச நாயகி தன்னை எம்பெருமானாகவே கருதிப் பேசுவதாகக் கற்பித்துக் கூறும் பாடல்களில் ஆழ்வார் மிகவும் அற்புதமாகக் கடல் வண்ணனின் முழுவடிவத்தைக் காட்டுகிறார்.

"கடல் ஞாலம் செய்தேனும்,

கடல் ஞாலம் ஆவேனும்

கடல் ஞாலம் கொண்டேனும்

கடல் ஞானம் கீண்டேனும்

கடல் ஞானம் உண்டேனும்"

“கற்கும் கல்விக் கெல்லையிலனே
கற்கும் கல்வியாவேனும்
கற்கும் கல்வி செய்வேனும்,
கற்கும் கல்வி தீர்ப்பேனும்
கற்கும் கல்விச் சாரமும்”

“காண்கின்ற நிலமெல்லாம்
காண்கின்ற விசும்பெல்லாம்
காண்கின்ற வெந்தீயெல்லாம்
காண்கின்ற க்காற்றெல்லாம்
காண்கின்ற கடலெல்லாம்”

“செய்கின்ற கிதியெல்லாம்,
செய்வா நின்றனகளும்
செய்து முன்னிறந்தவும்
செய்கைப் பயனுண் பேனும்
செய்வார்களைச் செய்வேனும்,”

“திறம்பாமல் மண் காக்கின்றேன்
திறம்பாமல் மலை யெடுத்தேனே
திறம்பாமல் அசுரரைக் கொன்றேனே
திறம் காட்டி அன்று அவரைக் காத்தேனே
திறம்பாமல் கடல் கடைந்தேனே!”

“இனவேய் மலை ஏந்தினேன்
இனவேறுகள் செற்றேனும்

இனவான் கன்று மேய்த்தேனும்
இனவானிரை காத்தேனும்
இனவாயர் தலைவனும் யானே!"

"உற்றார்கள் எனக்கில்லையாரும்
உற்றார்களெனக்கிங் கெல்லாரும்
உற்றார்களைச் செய்வேனும்
உற்றார்களை அழிப்பேனும்
உற்றார்களுக்குற்றேனும்"

"உரைக்கின்ற முக்கட்பிரான்
உரைக்கின்ற திசைமுகன்
உரைக்கின்ற அமரரும்
உரைக்கின்ற அமரர் கோன்
உரைக்கின்ற முனிவரும்"

"கொடிய வினையாதுமிலனே
கொடியவினை யாவேனும்
கொடிய வினை செய்வேனும்
கொடிய வினை தீர்ப்பேனும்
கொடியான் இலங்கை செற்றேனே"

" கோலங் கொள் சுவர்க்கமும்
கோலிமில் நரகமும்
கோலம் திகழ் மோக்கமும்
கோலம் கொள் உயிர்களும்
கோலம் கொள் தனி முதல்"

ஆகிய அனைத்தும் கடல் வண்ணன் வடிவமும் செயலுமாகும் என்று கண்ணனின் உலகப் பெருவடிவை ஆழ்வார் பெருமான் அகல விரித்துக் காட்டுகிறார்.

ஒப்பிலியப்பன் கோயிலில் குடிகொண்டிருக்கும் சீனிவாசக் கண்ணனின் ஒப்பில்லாத உலக வடிவத்தைப் பற்றி நம்மாழ்வார் பாடும் பாடல்கள் நெஞ்சை நெகிழ்விப்பன.

"நல்குரவும் செலவும்
நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும்
விடமும் அமுதமுமாய்
பல்வகையும் பரந்த பெரு
மான் என்னை ஆள்வானை
செல்வம் மல்கும் குடித்திரு
விண்ணகர் கண்டேனே!"

என்று தொடங்கி,

"கண்ட வின்பம் துன்பம்
கலக்கங்களும் தோற்றமுமாய்
தண்டமும் தண்மையும்
தழலும் நிழலுமாய்
கண்டு கோடற்கரிய
பெருமான் என்னை ஆள்வான்"

என்றும்,

" நகரமும் நாடுகளும்
ஞானமும், மூடமுமாய்

நிகரில் சூழ் சுடராய் இரு
ளாய் நிலனாய் விசும்பாய்"

என்றும்,

"புண்ணியம் பாவம்
புணர்ச்சி பிரிவென்றிவையாய்
எண்ணமாய் மிறப்பாய் உண்
மையாய் இன்மையாய் அல்லனாய்"

என்றும்,

"கைத்தவம் செம்மை
கருமை வெளுமை யுமாய்
மெய், பொய், இளமை
முதுமை, புதுமை பழமையுமாய்"

என்றும்,

"மூவுலகங்களுமாய்
அல்லனாய் உகப்பாய் முனிவாய்
பூவில் வாழ்மகளாய்த்
தவ்வையாய் புகழாய்ப் பழியாய்"

என்றும்,

"பரஞ்சுடர் உடம்பாய்
அழுக்குப் பதித்த உடம்பாய்
கரந்தும் தோன்றியும் நின்றும்
கைதவங்கள் செய்தும்"

என்றும்

"வன்சரண் சுரர்க்காய்
அசுரர்க்கு வெங்கூற்றமுமாய்
தன் சரண் நிழற்கீழ்
உலகம் வைத்தும் வையாததும்"

எனவும்

" என்னப்பன் எனக்காயிகுளாய்
என்னைப் பெற்றவளாய்
பொன்னப்பன், மணியப்பன்
முத்தப்பன் என் அப்பனுமாய்"

எனவும்,

" நிழல் வெயில் சிறுமை பெருமை
குறுமை நெடுமையுமாய்
சுழல் வன நிற்பன மற்று
மாய் அவை அல்லனுமாய்"

எனவும், பலவாறாக கண்ணனின் உலகளாவிய அனைத்தளாவிய தன்மையை ஆழ்வார் மிக அற்புதமாகக் கூறுவதை மெய்மறந்து பாடுவதைக் காண்கிறோம்.

உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் என்றும் திருக்கோளூர் எம்பிரானைப் பற்றிப்பாடும் போது நம்மாழ்வார் கூறுவதையும் காண்கிறோம்.

" நீராய், நிலனாய், தீயாய்க் காலாய்
நெடுவானாய்,
சீரார் சுடர் களிரண்டாய்ச்
சிவனாய், அயனாய்,

கூரார் ஆழிவெண் சங்கேந்திக்
கொடியேன் பால்
வாராய் ஒரு நாள் மண்ணும்
விண்ணும் மகிழவே"

என்று ஆழ்வார் கூறுகிறார். கண்ணனைப் பஞ்சபூதங்களின் வடிவாய் சூரிய சந்திரர்களின் வடிவாய் சிவன் அயன் வடிவாய்ப் பல பாடல்களிலும் ஆழ்வார் குறிப்பிடுவதை காண்கிறோம். அதுவே உலகப் பெரு வடிவமாகும்.

பஞ்ச பூதங்களும், இரு சுடர்களும் முத்தொழிலும் அடங்கியதே உலகம் என்பதே ஆழ்வார்களின் தத்துவ ஞானத்தின் அடிநாதமாகும். இவையனைத்தையும் கண்ணனாகவும் பரம் பொருளாகவும் காண்பதே ஆழ்வார்கள் காணும் காட்சியாகும். கம்ப நாட்டாழ்வாரின் கடவுட் கொள்கைப் பாடல்களும் இக்கருத்துக்களை வெளிப்படுத்துவதைக் காணலாம்.

மாயா, வாமனனே, என்னும் தலைப்பில் நம்மாழ்வார் மேலும் பாடுகிறார்.

"மாயா! வாமன னே! மது
சூதா! நீ யருளவாய்,
தீயாய், நீராய், நிலனாய்,
விசும்பாய்க் காலாய்
தாயாய்த் தந் தையாய் மக்களாய்
மற்றுமாய் முற்றுமாய்
நீயாய் நீ நின்ற வாறிவை
யென்ன நியாயங்களே!"

என்றும்,

"அங்கண் மலர்த்தண்டு ழாய் முடி
அச்சுதனே! அருளாய்
திங்களும் ஞாயிறுமாய்ச் செழும்
பல்சுடராய் இருளாய்
பொங்கு பொழி மழையாய்ப் புக
ழாய்ப் பழியாய்ப் பின்னும் நீ
வெங்கண் வெங்கூற்றமுமாம் இவை
யென்ன விசித்திரமே!"

என்றும் இயற்கை சக்தியின் வடிவங்களாய் மாயனைப் பற்றிப் பாடுகிறார். மாயா என்றால் மருட்சியல்ல, மாயா என்றால் சக்தி என்று பொருள். மாயன் என்றால் சர்வ வல்லமை மிகுந்த சக்தியுடையோன் என்று பொருளாகும்.

திருமழிசையாழ்வார் அருளிச் செய்த திருச்சந்த விருத்தம் மற்றுமொரு அருமையான பாடல் தொகுப்பாகும். பரந்தாமனைத் தத்துவ நிலையில் கண்டும், வழிபாட்டு நிலையில் பார்த்தும், செயல் வடிவில் உணர்ந்தும், பலவாறாகப் பாடுகிறார். திருமாலின் உலக வடிவைப்பாடும் போது பஞ்ச பூத வடிவாய்க் குறிப்பிடுவதைக் காணலாம்.

"பூ நிலாய வைந்துமாய்ப்
புனற் கண் நின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச்
சிறந்த காலிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி
வேறு வேறு தன்மையாய்

நீ நிலாய வண்ண நின்னை
யார் நினைக்க வல்லரே?"

எனவும்

"ஆதியாதி யாதிநீயொ
ரண்ட மாதி யாதலால்
சோதியாத சோதி நீ அ
துண்மையில் விளங்கினாய்
வேதமாகி வேள்வியாகி
விண்ணினோடு மண்ணுமாய்
ஆதியாகி யாயமாய
மாயமென்ன மாயமோ?"

எனவும்

" ஊனின் மேய ஆவிநீ
உறக்க மோடு உணர்ச்சிநீ
ஆனில் மேய ஐந்தும் நீ
அவற்றுள் நின்ற தூய்மைநீ
வானினோடு மண்ணும் நீ
வளங்கடற் பயனும் நீ
யானும் நீயதமன்றி யெம்பி
நானும் நீ யிராமனே!"

எனவும் மனமுருகிப் பாடியுள்ளார்.

திருமங்கையாழ்வார் தனது பாடலில்,

"மஞ்சாடு வரையேழும் கடல்கள் ஏழும்
வானகமும் மண்ணகமும் மற்று மெல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின் மேலோர்
இளந்தளிரில் கண் வளர்ந்த ஈசன் தன்னை"

எனக் குறிப்பிட்டு மலைகளும், கடல்களும் வானமும், மண்ணும் மற்றுமெல்லாம் அடங்கிய வடிவமாகக் கோபாலனைப் பாடுகிறார்.

மேலும், திருமங்கையாழ்வார் தனது பாடல்களில்,

"யாவருமாய் யாவையுமாய் எழில் வேதப் பொருள்களுமாய் மூவருமாய் முதலாய மூர்த்தி எனவும்,

"வானாடும் மண்ணாடும்
மற்றுள்ள பல்லுயிரும்
தானாய யெம்பெருமான்"

எனவும்,

"அண்டமும் இவ்வலை கடலும்
அவனிகளும் குலவரையும்
உண்ட பிரான் . . . . . எனவும்,

திருமாலின் உலகப் பெருவடிவைப் பாடுகிறார்.

"ஏழுலகும் தாழ் வரையும் எங்குமூடி
எண்டிசையும் மண்டலமும் மண்டி
அண்டம் மோழை எழும் தாழிமிகும்
ஊழி வெள்ளம் முன்னகட்டில்
ஒடுக்கிய வெம் மூர்த்தி கண்டீர்"

என்றும் பாடுகிறார்

"குன்றமும் வானும் மண்ணும்
குளிர் புனல் திங்களோடு
நின்ற வெஞ்சுடரும் அல்லா
நிலைகளும் ஆய எந்தை"

என்று பஞ்சபூதங்களின் வடிவமாக இறைவனைப் பாடுகிறார்.

திருவிண்ணகர், ஒப்பிலியப்பனைப் பாடும் போது திருமங்கை யாழ்வார்,

"நிலவோடு வெயில் நிலவிரு சுடரும்
உலகமும் உயிர்களும் உண்டொருகால்
கலைதரு குழவியின் உருவினையாய்
அலைகடல் ஆலிலை வளர்ந்தவனே,

எனவும்,

பாரெழு, கடலெழு, மலையெழுமாய்ச்
சீர்கெழுமிவ்வுல கேழுமெல்லாம்
ஆர்கெழு வயிற்றினில் அடக்கி நின்றங்
கோரெழுத்தோருரு வானவனே

என்றும்,

கார்கெழு கடல்களும், மலைகளுமாய்
ஏர்கெழும் உலகமும் ஆகி முத
லார்களும் அறிவரு நிலையினை யாய்ச்
சீர் கெழு நான் மறையானவனே

என்றும் பாடி திருமாலின் அருளை வேண்டுகிறார்.

பகலும் இரவும் தானே யாய்ப்
பாரும் விண்ணும் தானேயாய்

நிகரில் சுடராய் இருளாகி
நின்றார் ...... என்றும்,

திருவழுந்தூர்ப் பெருமாளைப் பாடுகிறார்.

"பெருநீரும் விண்ணும் மலையும் உலகேழும்
ஒருதார நின்னுள் ஒடுக்கிய நின்னை
யல்லால் "

என்று திருக்கண்ணபுரத்துப் பெருமாளைப் பாடுகிறார்.

திருமங்கையாழ்வார் அருளிச் செய்த நெடுந்தாண்டகப் பாசுரங்களில் எம்பெருமானின் முழு வடிவத்தைக் காட்டிப் பாடுவதைக் காண்கிறோம். அற்புதமான அந்தப் பாடல் வரிகள் திருமாலின் உலகப் பெரு வடிவை நமக்குக் காட்டுகிறது.

"மின்னுருவாய் முன்னுருவில்
வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த
திங்கள் தானாய்
பின்னுருவாய் முன்னுருவில்
பிணி மூப்பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே
எண்ணாது எண்ணும்,

பொன்னுருவாய் மணியுருவில்
பூதம் ஐந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில்
திகழும் ஜோதி

தன்னுருவாய் என்னுருவில்
நின்ற எந்தை
தளிர் புரையும் திருவடியென்
தலைமேல வ்வே”

என்றும்,

“பாருருவில் நீரெரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
இமையவர் தம் திருவுரு வேறெண்ணும் போது
ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்துகின்ற
மூவுருவும் கண்ட போதொன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவம்தானே

என்று பாடுகிறார் இன்னும்,

“திருவடிவில் கருநெடுமால் சேயன் என்றும்,
திரேதைக் கண் வளையுருவாய்த்
திகழ்ந்தானென்றும்,
பெருவடிவில் கடலமுதம் கொண்ட காலம்
பெருமானைக் கருநீல வண்ணன் தன்னை,
ஒருவடிவத் தோருரு வென்று உணரலாகா,
ஊழிதோறூழி நின்றேத்தல் அல்லால்
கருவடிவில் செங்கண்ண வண்ணன் தன்னைக்
கட்டுரையே யாரொருவர் காண்கிற்போரே? ”

என்றும்,

"இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இருநிலம் கால் தீநீர் விண் பூதம் ஐந்தாய்
செந்திறத்த தமிழோசை வட சொல்லாகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறாகி
அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா
அந்தணனை அந்தணர் மாட்டந்தி வைத்த
மந்திரத்தை, மந்திரத்தால் மறவாதென்றும்,
வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே"

என்றெல்லாம் ஆழ்வார் பெரு மகிழ்ச்சி கொண்டு திருமாலின் பெருமைதனைப் பாடுகிறார்.

இன்னும் பொய்கை ஆழ்வார், தனது முதல் திருவந்தாதியில்,

"இறையும் நிலனும் இருவிசும்பும் காற்றும்
அறைபுனலும் செந்தீயுமாவான்"

என்றும்,

"வானாகித் தீயாய் மற் கடலாய் மாருதமாய்
தேனாகிப் பாலாம் திருமாலே"

என்றும் பாடுகிறார்.

இன்னும் பேயாழ்வார் அருளிச் செய்த மூன்றாம் திருவந்தாதியில்,

"வருங்கால் இருநிலனும் மால் விசும்பும்
காற்றும் நெருங்கு தீ நீருவுமானான்"

என்றும்,

"இறையாய் நிலனாகி எண் திசையும்
தானாய், மறையாய், மறை பொருளாய்,
வானாய்" என்றும்,

"உலகமும், ஊழியும், ஆழியும் ஒண்கேழ்
அலர்கதிரும் செந்தீயுமாவான்"

என்றும், மனமாரப் போற்றிப் பாடுகிறார்.

திருமழிசையாழ்வார் தனது திருவந்தாதியில்,

"வானுலவு, தீவளி, மாகடல், மாபொருப்பு
தானுலவு வெங்கதிரும் தண்மதியும் மேனிலவு
கொண்டல் பெயரும் திசையெட்டும் சூழ்ச்சியும்
அண்டந்திருமால் அகைப்பு" என்றும்,
"பாட்டும் முறையும் படுகதையும் பல்பொருளும்
ஈட்டிய தீயும் இருவிசும்பும் கேட்ட
மனுவும் சுருதி மறை நான்கும், மாயன்
தன்மாயையிற் பட்டதற்பு"

என்றும் பாடியுள்ளார்.

நம்மாழ்வார் தனது பெரிய திருவந்தாதியில்,

நாழால் அமர் முயன்ற வல்லரக்கன் இன்னுயிரை
வாழா வகைவலிதல் நின் வலியே ஆழாத
பாரும்நீ, வானும்நீ, காலும்நீ, தீயும்நீ
நீரும் நீயாய் நின்றநீ என்றும்

ஐம்பெரும் பூதங்களும் நீயே என்று திருமாலைக் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

## ஆழ்வார்களின் தத்துவ தரிசனம்

ஆழ்வார்களின் இனிய பாசுரங்கள் மூலம் அவர்களுடைய தத்துவ தரிசனத்தை நாம் காணமுடிகிறது. இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அதாவது இந்தப் பேருலகம் இந்தப் பேரண்டம் முழுவதும் இயற்கையாகும். இதில் அடங்கியுள்ள பஞ்ச பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகாயம் ஆகியவைகளும் இருகோள்களான சூரியனும் சந்திரனும், இதர கிரகங்களும் சுடர்களும், இப்பூவுலகில் பஞ்சபூதங்களின் பலவேறு சேர்க்கையினால் ஆன பலவகையான எண்ணற்ற உயிர்ப் பொருள்களும் சடப் பொருள்களுமான தாவரங்கள், பறவைகள், விலங்குகள், மனிதன், கல்மண், கனி, கடல், கடல்வாழ் உயிரினங்கள் முதலிய அனைத்தும் கண்ணுக்குப் புலப்படுபவவை புலப்படாதவை, ஐம்புலன்களான மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவகைளால் உணரப்படுபவை, அறிவால் அறியப்படுவன, ஆராய்ச்சி மூலம் கண்டு கொள்ளப்படுவன, முதலிய சகலவிதமான பொருள்களும் அவைகளின் அசைவுகளும் செயல்பாடுகளும் அச்செயல் பாடுகளுக்கான காரணங்களும் அவைகளின் விளைவுகளும் ஆகிய அனைத்துமே திருமாலின் திருவடிவமே, திருமாலின் செயல்களே என்பது ஆழ்வார்களின் தத்துவ தரிசனமே என்பதை அவர்களுடைய குறிப்பிட்ட பாசுரங்களால் நாம் அறிகிறோம்.

ஆழ்வார்கள் தங்கள் ஆழ்ந்த பக்தியின் மூலம் தங்களுடைய சீரிய கருத்துக்களைத் தங்களுடைய இனிய பாடல்களை பாசுரங்கள் மூலம் மக்களை ஈர்த்துத்தங்கள் தத்துவ தரிசனத்தின் மூலம் மக்களை விழிப்படையச் செய்திருக்கிறார்கள். இந்த பக்தி மார்க்கம், ஒரு இயக்கமாக மக்களின் ஒரு பேரியக்கமாக வளர்ந்து பெரிய பெரிய திருவிழாக்களாக, இசை விழாக்களாக மலர்ந்து மக்களுடைய உணர்வையும் ஒற்றுமையையும் வளர்த்து அம்மக்களின் உணர்வு நிலையை, அறிவுத் தெளிவை, உயர்த்தியிருக்கிறது.

ஆழ்வார்களின் கவிதைகளும் கருத்துக்களும் பாடல்களும் பாசுரங்களும் தத்துவதரிசனங்களும் அவர்களுடைய பக்தி உணர்வும் பரவசமும் பாரதியிடம் பெரிய அளவில் தங்கள் செல்வாக்கைச் செலுத்தியிருக்கின்றன. தாக்கங்களை ஏற்படுத்தியிருக்கின்றன. அதன் அடையாளங்களைப் பிரதிபலிப்புகளைப் பாரதியின் கவிதைகளிலும் கருத்துக்களிலும், தத்துவ தரிசனங்களிலும் நாம் காண முடிகிறது. ஆழ்வார்கள் காலத்தால் முந்தியவர்கள். பாரதி காலத்தால் பிந்தியவர். கால வேறுபாடு மட்டுமல்ல. சூழ்நிலையும் சமுதாய வளர்ச்சி நிலையும் மாறுபட்டவை. புதிய சூழ்நிலைகளுக் கேற்பவும், சூழ்நிலை வளர்ச்சியின் தாக்கங்களாலும் சமுதாய வளர்ச்சியின் புதிய தேவைகளின் கட்டாயத்தாலும், பாரதி, பாரதப் பண்பாட்டு தளத்தில் நின்ற மகாகவி பாரதியார் தனது தரிசனத்தில் திருமாலையும் திருமகளையும், கண்ணனையும் நம்மை அடையாளம் காட்டி அவர் தன்னுடைய கருத்துக்களில் நம்மை ஈடுபடுத்துகிறார்.

## பாரதி

பாரதியின் கருத்துப்படி கடமையாவன நான்கு: அவை தன்னைக் கட்டுதல், பிறர் துயர் தீர்த்தல், பிறர் நலம் வேண்டுதல், உலகெலாம் காக்கும் ஒருவனைப் போற்றுதல் என்பதாகும். உலகெலாம் காக்கும் அந்த ஒருவன் யார்?

“விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய், நாராயணனாய், நதிச் சடைமுடியனாய், பிறநாட்டிருப்போர் பெயர் பல கூறி அல்லா, யெகோவா எனத் தொழுது அன்புறும் தேவரும் தானாய், திருமகள், உகந்த வான் பொருளாம்” என்பது பாரதியின் பாடல். இவையனைத்தும் திருமாலின் வடிவமே என்பது ஆழ்வார்களின் கொள்கையெனக் கொள்ளலாம். “சொல்லினுக்கரியனாய், சூழ்ச்சிக் கரியனாய்ப் பல்லுருவாகிப் படர்ந்த வான்பொருளை உள்ளுயிராகி உலகம் காக்கும், சக்தியே தானாம் தனிச்சுடர் பொருளாம்,” என்பது

பாரதியின் பாடல் வரிகளாகும். பாரதி குறிப்பிடும் அத்தனிச் சுடர் பொருளே திருமாலாகும் என்பதை ஆழ்வார்களுடைய பாசுரங்களில் காணலாம்.

"நிழலினும் வெயிலினும் நேர்ந்த நற்றுணையாய்த்
தழலினும் புனலினும் அபாயம் தவிர்த்து
மண்ணினும் காற்றினும் வானினும் எனக்குப்
பகைமை ஒன்றின்றிப் பயம் தவிர்த்தாள்வான்
உள்ளத்தோங்க நோக்குறும் விழியும்
மௌன வாயும் வரந்தருகையும்
உடைய நம்பெருமான் உணர்விலே நிற்பான்,
ஓமெனு நிலையில் ஒளியாய்த் திகழ்வான்
வேதமுனிவர் விரிவாப் புகழ்ந்த
பிருகஸ்பதியும் பிரமனும் யாவும்
தானேயாகிய தனி முதற்கடவுள்
யான் எனது அற்றார் ஞானமேதானாய்
முக்தி நிலைக்கு மூலவித்தாவான்
சத்தெனத் தத்தெனச் சதுர் மறையாளர்
நித்தமும் போற்று நிர்மலக் கடவுள்
ஏழையர்க் கெல்லாம் இரங்கும் பிள்ளை
வாழும் பிள்ளை மணக்குளப்பிள்ளை
வெள்ளாடை தரித்த விட்டுணு வென்று
செப்பிய மந்திரத் தேவனை
முப்பொழு தேத்திப் பணிவது முறையே

என்பது பாரதியின் கவிதையாகும்.

## பாரதியின் வேண்டுதல்

" திருமாலே பரம்பொருள் என்பது ஆழ்வார்களின் கொள்கை. அத்துடன் எல்லா மூர்த்திகளும் திருமாலின் வடிவமாகவே ஆழ்வார்கள் கண்டார்கள்.

நாரணன் முழு வேழுலகுக்கும்
நாதன் வேதமயன்
காரணம் கிரிசை கருமம்
இவை முதல்வன் எந்தை
சீரணங்கமரர் பிறர்பல
ரும்தொழுதேத்த நின்று
வாரணத்தை மருப்பொசித்த
பிரான் என் மாதவனே!

என்பது திருவாய் மொழியில் நம்மாழ்வார் கூறும் மொழியாகும்.

இறைவி இறைவன் இரண்டும் ஒன்றாகித்
தாயாய் தந்தையாய் சக்தியும் சிவனுமாய்
உள்ளொளியாகி உலகெலாம் திகழும்"

" பரம்பொருளேயோ, பரம் பொருளேயோ!
ஆதிமூலமே! அனைத்தையும் காக்கும்
தேவதேவா, சிவனே, கண்ணா!
வேலா, சாத்தா, விநாயகா, மாடா,
இருளா, சூரியா, இந்துவே, சக்தியே
வாணீ, காளீ, மாமக ளேயோ,
ஆணாய்ப் பெண்ணாய் அலியாய் உள்ளது
யாதுமாய் விளங்கும் இயற்கைத் தெய்வமே

வேதச்சுடரே, மெய்யாங்கடவுளே!
அபயம், அபயம், அபய நான் கேட்டேன்
நோவுவேண்டேன் நூறாண்டு வேண்டினேன்,
அச்சம் வேண்டேன், அமைதி வேண்டினேன்
உடமை வேண்டேன், உன் துணை வேண்டினேன்
வேண்டாதனைத்தையும் நீக்கி
வேண்டியதனைத்தும் அருள்வதுன் கடனே!"

என்பது பாரதியின் கவிதையாகும்.

"செஞ்சொல் மறைபொருளாகி நின்ற
தேவர்கள் நாயகனே எம்மானே
எஞ்சலில் என்னுடைய யின்னமுதே
ஏழுலகுமுடையாய்! என்னப்பா
வஞ்ச உருவின் நமன்றமர்கள்
வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது
அஞ்சலை யென்றென்னைக் காக்கவேண்டும்
அரங்கத் தரவணைப் பள்ளியானே!

என்று பெரியாழ்வார் பாடுகிறார்.

இயற்கை சக்திகளைப் பற்றி அவைகளைத் திருமாலின் வடிவமாக ஆழ்வார்கள் பலரும் பலமுறை பாடியுள்ளார்கள். பாரதியும் பலமுறையும் பல இடங்களிலும் இயற்கையின் சக்தியைப் பாடுவதைக் காண்கிறோம்.

"வானமுண்டு, மாரியுண்டு
ஞாயிறும் காற்றும் நல்லநீரும்

தீயும் மண்ணும் திங்களும் மீன்களும்
உடலும் அறிவும் உயிரும் உளவே”

என்று பாரதி தெளிவுபடக் கூறுகிறார்.

பாரதி முருகனைப் பற்றிக் குறிப்பிடும் போது கூட “குரங்கை விடுத்துப் பகைவரின் தீவைக் கொளுத்தியவன் அரங்கத்திலே திருமாதுடன் பள்ளி கொண்டான் மருகா,” என்று குறிப்பிடுகிறார்.

“சொல்லடா ஹரியென்ற கடவுளெங்கே சொல்” என்று இரணியன்தான் உறுமிக்கேட்க,

“நல்லதொரு மகன் சொல்வான் தூணிலுள்ளான்,
நாராயணன் துரும்பிலுள்ளான்”

என்றனன்,

வல்ல பெரும் கடவுளிலா அணுவொன்றில்லை
மகாசக்தியில்லாத வஸ்து இல்லை

என்றும்,

“உயிர்களெல்லாம் தெய்வமன்றிப் பிறவொன்றில்லை.
ஊர்வனவும் பறப்பனவும் நேரே தெய்வம்,
பயிலும் உயிர் வகைமட்டுமன்றியிங்கு
பார்க்கின்ற பொருள் எல்லாம் தெய்வம் கண்டீர்
வெயிலளிக்கும் இரவி, மதி விண்மீன் மேகம்,
மேலும் இங்கு பலபலவாம் தோற்றம் கொண்டே
இயலுகின்ற ஜடப்பொருள்கள் அனைத்தும் தெய்வம்,
எழுதுகோலும் தெய்வம் இந்த எழுத்தும் தெய்வம்.”

என்று கூறுகிறார் பாரதி. உலகனைத்தும், உலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் கடவுளின் வடிவம் என்னும் கொள்கையைப் பாரதி மேலும் விரிவுபடக் கூறியுள்ளார்.

"உலகுதந்தானும், பலவேறு உயிர்கள்
தந்தானும் உள்உற்று
அலைவு இலா உயிர்கள் தோறும்
அங்கங்கே உறைகின்றானும்
மலரினில் மணமும், எள்ளில் எண்ணெயும்
போல எங்கும்,
அலகில் பல்பொருளும் பற்றி முற்றிய
அரிகாண், அத்தா "

என்றும்,

காணினும் உளன் ஓர்தன்மை அணு
வினைச் சதகூறு இட்ட
கோணினும் உளன், மாமேருக்
குன்றினும் உளன், இந்நின்ற
தூணினும் உளன் நீ சொன்ன சொல்
லினும் உளன், இத்தன்மை
காணுதி விரைவின் " என்றான்,

என்று பிரகலாதன் தன் தந்தையிடம் கூறியதைக் கம்பன் தனது கவிதைகளால் காட்டியதையும் இங்கு நினைவு கூறத்தக்கது.

"ரிக் வேதத்திலுள்ள புருஷ சூக்தம் சொல்லுகிறது. இஃதெல்லாம் கடவுள் என்று. இந்தக் கருத்தை ஒட்டியே கீதையிலும் பகவான் "எவன் எல்லாப் பொருள்களிலும் ஆத்மாவையும்,

ஆத்மாவில் எல்லாப் பொருள்களையும் பார்க்கிறானோ அவனே காட்சியுடையான் '' என்கிறார் என்றும், "சர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்பது, சநாதன தர்மத்தின் சித்தாந்தம். எல்லாம் கடவுள் மயம் எல்லாத் தோற்றங்களும், எல்லா வடிவங்களும், எல்லா உருவங்களும் எல்லாக் காட்சிகளும் எல்லாக் கோலங்களும், எல்லா நிலைமைகளும், எல்லா உயிர்களும், எல்லாப் பொருள்களும், எல்லா சக்திகளும் எல்லா நிகழ்ச்சிகளும் எல்லாச் செயல்களும் எல்லாம் ஈசன்மயம் (ஆதலால் எல்லாம் ஒன்றுக் கொன்று சமானம்). "ஈசாவாஸ்யம் ஜகத்" என்று ஈசாவாஸ்யோபநிஷத் சொல்லுகிறது. அதாவது இவ்வுலகத்தில் நிகழ்வது யாதாயினும் அது கடவுள் மயமானது என்று பொருள்படும் எனவும், "எல்லா அறிவும் எல்லா இயக்கமும், எல்லாப் பொருளும் எல்லா வடிவமும், எல்லாம் தானேயாகி நிற்பான், எனவும் பாரதி தனது பகவத் கீதை தமிழாக்கத்திற்கு எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிடுவதை ஏற்கனவே எடுத்துக் காட்டியுள்ளோம்.

பகவத் கீதையின் ஆதர்சமே ஆழ்வார்களுக்கும் சரி, பாரதிக்கும் சரி வழிகாட்டியாக இருந்திருக்கிறது என்பதைக் காண்கிறோம்.

பாரதி கண்ணனைப் பற்றி, கண்ணனின் காட்சியைப் பற்றிப் பாடும்போது தானும் கண்ணனாகவே ஐக்கியமாகி விடுகிறார். அவர் தன்னைப் பிறவித் துன்பத்திலிருந்து விடுவிக்கும் படியாகக் கண்ணனிடம் கோரவில்லை. இந்த உலக வாழ்க்கையிலேயே அனைத்து இன்பங்களும் அமைய வேண்டும் என்றும் இந்த உலக வாழ்க்கையே அத்தனை துன்பங்களிலிருந்தும் முழு விடுதலை பெற வேண்டும் என்று கோருகிறார்.

கண்ணனுடைய வடிவங்களை இயற்கையுடன், சமுதாய நலன்களுடன், தனிமனித நலன்களுடன் (இங்கே தனி மனித நலன் என்பது சுயநலமல்ல) பொதுவான வாழ்க்கை நலன்களுடன் சமுதாய உணர்வுடன் தனி மனித உணர்வுடன் இணைத்துத் தொடர்பு படுத்திப் பாடுகிறார்.

“ காயிலே புளிப்பதென்னே?
கனியிலே இனிப்பதென்னே?
நோயிலே படுப்பதென்னே?
நோன்பிலே உயிர்ப்பதென்னே?
காற்றிலே குளிந்ததென்னே?
கனலிலே சுடுவதென்னே?
சேற்றிலே குழம்பலென்னே?
திக்கிலே தெளிந்த தென்னே?
ஏற்றி நின்னைத் தொழுவதென்னே?
எளியர் தன்னைக் காப்பதென்னே?
போற்றினோரைக் காப்பதென்னே?
பொய்யர் தம்மை மாய்ப்பதென்னே?”

என்றெல்லாம் கண்ணபிரானுடைய வடிவங்களையும் அருஞ்செயல்களையும் போற்றிப் போற்றிப் பாடுகிறார்.

“நெரித்த திரைக் கடலில் நின்முகம் கண்டேன்
நீலவிசும்பினிடை நின்முகம் கண்டேன்
திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்
சின்னக் குமுழிகளில் நின்முகம் கண்டேன்,
பிரித்துப் பிரித்த நிதமேக மளந்தே
பெற்றதுன் முகமன்றிப் பிரிதொன்றில்லை
சிரித்த ஒலியினில் உன்கை விலக்கியே
திருமித்தழுவியதில் நின்முகம் கண்டேன்”

என்றெல்லாம் மிக நுட்பமாகக் கருத்தாழத்துடன் கண்ணம்மாவின் காட்சியைப் பாரதி என்னும் மகா கவிஞன் தனது இனிய கவிதைகளில் காட்டுகிறான். இந்தக் கவிதைகளில், சொல் நயம் பொருள் நயத்துடன் மிக உயர்வானதொரு தத்துவ தரிசனத்தையும் பாரதத்தின் பண்பாட்டு மரபையும் காண்கிறோம்.

“உங்களுடைய சர்வநாராயண சித்தாந்தத்தின துணிவு யாது ” என இந்திரன் கேட்க, “எல்லா வஸ்துக்களும், எல்லா லோகங்களும், எல்லா நிலைமைகளும், எல்லாத் தன்மைகளும், எல்லா சக்திகளும், எல்லா ரூபங்களும் எல்லாம் ஒன்றுக்கொன்று சமானம்” என்று நாரதர் விடை கூறுவதாக பாரதி தனது வசன கவிதையில் குறிப்பிடுகிறார். இந்த வாதத்தின் முடிவாக “சர்வம் விஷ்ணு மயம் ஜகத்” என்று நாரதர் கூறியதை பாரதி எடுத்துக் காட்டித் தனது வசன கவிதையை முடிக்கிறார்.

இவ்வுலகம் இனியது, இதிலுள்ள வானம் இனிமையுடைத்து, காற்றும் இனிது, தீ இனிது, நீர் இனிது, நிலம் இனிது, ஞாயிறு நன்று, திங்களும் நன்று. வானத்துச் சுடர்களெல்லாம் மிக இனியன. மழை இனிது. மின்னல் இனிது. ஆறுகள் இனியன. உலோகமும், மரமும், செடியும், கொடியும் மலரும் காயும் கனியும் இனியன. பறவைகள் இனியன. ஊர்வனவும் நல்லன. விலங்குகள் எல்லாம் இனியவை. நீர் வாழ்வனவும் நல்லன.

மனிதர்கள் மிகவும் இனியர். பெண் இனிது. குழந்தை இன்பம், இளமை இனிது. முதுமை நன்று. உயிர் நன்று. சாதல் இனிது. உடல் நன்று. புலன்கள் மிகவும் இனியன. உயிர் சுவையுடையது. மனம் தேன். அறிவு தேன். உணர்வு அமுதம். உணர்வே அமுதம். உணர்வு தெய்வம்.

மனம் தெய்வம், சித்தம் தெய்வம், உயிர் தெய்வம், காடு, மலை, அருவி, ஆறு, கடல், நிலம், நீர், காற்று, தீ, வான் ஞாயிறு, திங்கள்,

வானத்துச் சுடர்கள், எல்லாம் தெய்வங்கள். உலோகங்கள், மரங்கள், செடிகள், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீந்துவன, மனிதர் இவை அமுதங்கள்.

இவ்வுலகம் ஒன்று. ஆண், பெண், மனிதர், தேவர், பாம்பு, பறவை, காற்று, கடல், உயிர், இறப்பு—இவையனைத்தும் நன்றே. ஞாயிறு, வீட்டுச் சுவர், ஈ, மலை, அருவி, குழல், கோமேதகம்—இவ்வனைத்தும் ஒன்றே. இன்பம், துன்பம், பாட்டு, வண்ணான், குருவி, மின்னல், பருத்தி இஃதெல்லாம் ஒன்று. மூடன், புலவன், இரும்பு, வெட்டுக் கிளி. இவை ஒரு பொருள்.

வேதம், கடல் மீன், புயற்காற்று மல்லிகை, மலர் இவை ஒரு பொருளில் பல தோற்றங்கள், உள்ளதெல்லாம் ஒரே பொருள், ஒன்று, இந்த ஒன்றின் பெயர் "தான்" தானே தெய்வம் "தான்" அமுதம் இறவாதது. எல்லா உயிரும் இன்பம் எய்துக. எல்லா உடலும் நோய்தீர்க. எல்லா உணர்வும் ஒன்றாதல் உணர்க. "தான்" வாழ்க. அமுதம் எப்போதும் இன்பமாகுக.

தெய்வங்களை வாழ்த்துகிறோம், தெய்வங்கள் இன்பமெய்துக, அவை வாழ்க, அவை வெல்க, தெய்வங்களே! என்றும் விளங்குவீர், என்றும் இன்பம் எய்துவீர், என்றும் வாழ்வீர். என்றும் அருள் புரிவீர். வெள்ளையும் காப்பீர் உமக்கு நன்று தெய்வங்களே! என்பது மகாகவி பாரதியின் வசன கவிதைகளாகும். இவைவெறும் சொற்கள் அல்ல. சுவை நிறைந்த, பொருள் நிறைந்த, மின் சக்தி நிறைந்த உணர்ச்சி மிக்க தத்துவக்காட்சி நிறைந்த சொற்களாகும்.

நமது பெரியாழ்வார் ஆண்டவனுக்குப் பல்லாண்டு பாடினார். பாரதி கடவுளுக்கு நல்வாழ்த்து கூறுகிறார். ஆழ்வார்கள் வாழ்க, பாரதி வாழ்க,

## 3. பள்ளியெழுச்சிப் பாடல்கள்

அரங்கனுக்குப் பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடினார் தொண்டரடிப் பொடியாழ்வார். அப்பாடல்கள் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் என்று புகழ் பெற்று விளங்குகின்றன. இந்தத் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் எல்லாப் பெருமாள் கோவில்களிலும் விருப்பமுடன் பாடப்படும் பாசுரங்கள் ஆகும். வைணவர்கள் அனைவரும் பக்தியுடன் பாடும் பாசுரங்களாகும். திருவரங்கத்தில் திருமால் கிடந்த கோலத்தில் பள்ளி கொண்டிருக்கிறார். பாம்பணையில் பள்ளி கொண்டிருப்பது திருமாலின் திருக்கோலங்களில் ஒன்றாகும். அதில் திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) பெரிய கோவில் வைணவ திவ்ய தேசங்களில் முதலிடம் பெறுகிறது. முதலாவதாகக் கூறப்படுகிறது. சயனத்தில் உள்ள பெருமாளை எழுப்ப திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடப்பட்டிருக்கின்றன. தொண்டரடிப் பொடி ஆழ்வார் இத்திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களைப் பாடியுள்ளார். இந்த ஆழ்வார் பாடியுள்ள திருமாலையும், திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் ஆழ்வார்கள் பாடியுள்ள நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் முக்கிய இடம் பெற்றிருக்கின்றன. இவ்விருபாடல் தொகுதிகளும் வைணவப் பெருமக்களுக்கிடையிலும் விரும்பிப் பாடப்படுகின்றன.

தொண்டரடிப் பொடியாழ்வாரின் இந்தச் சிறப்பு மிக்க திருப்பள்ளி எழுச்.சிப் பாசுரங்கள் பாரதியாரை மிகவும் கவர்ந்திருக்கிறது. தூக்கத்தில் இருந்த அரங்கனை எழுப்பப் பக்தர்கள் கூடி நின்று பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடியதை மகாகவி பாரதி நினைத்துப் பார்க்கிறார். சிந்தித்துப் பார்க்கிறார். அவருடைய சிந்தனையில் அரங்கன் பாரத மாதாவின் வடிவத்தில் தோன்றுகிறார். அரங்கன் தூக்கத்தில் உரக்கத்தில் இருப்பதைப் போல பாரத மாதா உரக்கத்தில் இருப்பதைப் போல நினைத்துப் பார்க்கிறார்.

அவர் காலத்தில் பாரத நாடு அடிமைப்பட்டுக் கிடக்கிறது. அன்னிய ஆட்சியின் கீழ் அடங்கிக் கிடக்கிறது. நாட்டு மக்கள் மயங்கி நெடும் தூக்கத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள். நாட்டு மக்களின் தூக்கத்தைப் பாரத தேவியின் பாரத அன்னையின் தூக்கமாகவே பாரதி கருதுகிறார். அரங்கனை எழுப்ப ஆழ்வார் பள்ளியெழுச்சி பாடியதைப் போல பாரத அன்னையை எழுப்ப பாரதியார் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடியுள்ளார்.

ஆழ்வாரின் திருப்பள்ளியெழுச்சிப் பாசுரங்களைப் போலவே பாரதியின் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் நெஞ்சைக் கவர்வதாகும். விழிப்புணர்வையும் எழுச்சியையும் உண்டாக்குவதாகும். ஆழ்வார்களின் மரபு வழியைக் காலத்திற்கேற்ற முறையில் காலத்திற்குத் தேவையானவகையில் பாரதி பாடியுள்ள பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் மிக அற்புதமாக அமைந்துள்ளன.

காலைக் கதிரவன் தோன்றி ஆகாயத்தின் மேலே வந்து கொண்டிருக்கிறான். இரவு நேரத்தின் இருண்ட இருள் அகன்றுவிட்டது. காலைப் பொழுது தோன்றி வெளிச்சம் பரவிவிட்டது. மலர்கள் எல்லாம் மலர்ந்துவிட்டன. மலர்ந்த மலர்களிலிருந்து மது ஒழுகிக் கொண்டிருக்கிறது. வானவர்களும் அரசர்களும் மக்களும் திரண்டு கோயில் வாசலில் குழுமியிருக்கிறார்கள். யானைகளின் கூட்டமும் முரசுகளின் பேரொலியும் எங்கும் நிறைந்து அலை கடல் போல் மக்களும் மற்றவர்களும் திரண்டு நிற்கிறார்கள். அரங்கத்தம்மா! இன்னுமா உரக்கம், பள்ளி எழுந்துவாராய் என்று ஆழ்வார் பாடுகிறார்.

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்
கனவிருள் அகன்றது காலையம் பொழுதாய்
மது விருந்து ஒழுகின மாமலரெல்லாம்

வானவர் அரசர்கள் வந்து வந்தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற்றீட்டமும் பிடியொடு முரசும்,
அதிர்தலில் அலைகடல் போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மா, பள்ளியெழுந் தருளாயே!

என்று ஆழ்வார் பாடுகிறார்.

பக்தனின் அபயக் குரலுக்குச் செவி கொடுத்து உதவி செய்வது திருமாலின் திருவுள்ளம். கஜேந்திரனை முதலை கவ்வ, அந்த யானையின் அபயக் குரலைக் கேட்டு அதன் துயர்துடைத்த அரங்கனைக் கூவி அழைத்துத் தூக்கத்திலிருந்து விழித்தெழுமாறு ஆழ்வார் வேண்டுகிறார்.

"கொழுங்கொடி முல்லையின் கொழு மலரணவிக்
கூர்ந்தது குணதிசை மாருத மிதுவோ
எழுந்தன மலரணைப் பள்ளி கொண்டன்னம்
ஈன்பனி நனைந்த தமிருஞ்சிறகுதறி
விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்,
வெள்ளையிறுறவதன் விடத்தினுக்கனுங்கி
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே!"

என்று ஆழ்வார் பாடுகிறார்.

எல்லாதிசைகளிலும் சூரியனின் ஒளிபரவிவிட்டது. நட்சத்திரங்களின் ஒளியெல்லாம் சுருங்கிவிட்டது. இருள் அகன்றது. கமுகின் பாளைகள் எல்லாம் நறுமணம் வீசத் தொடங்கிவிட்டது. மெல்லிய காலைக் காற்று வீசத் தொடங்கிவிட்டது. ஒளிவீசும்

சக்கராயுதத்தைக் கையில் கொண்டுள்ள அரங்கா! இன்னம் நீ தூங்கிக் கொண்டிருக்கலாமா? விழித்தெழுந்து வந்து அருள் புரிவாயாக என்று! வேண்டுகிறார் அடிப்பொடி ஆழ்வார்.

சுடரொளி பரந்தன சூழ்திசை யெல்லாம்
துன்னியதாரகை மின்னொளி சுருங்கி
படரொளி பசுத்தனன் பனிமதி யிவனோ
பாயிருள் அகன்றது பைம்பொழில் கமுகின்
மடலிடைக் குறிவண் பாளைகள் நாற
வைகரை கூர்ந்தது மாருதமிதுவோ
அடலொளி திகழ்தரு திகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே

என்று அடிப்பொடியார் பாடுகிறார்.

ஆயர்கள் தங்கள் மாடுகளையும் கன்றுகளையும் பத்திக் கொண்டு செல்கின்றனர். அந்த ஆயர்சிறுவர்களின் குழலோசையும் ஆவினங்களின் மணியோசைகளும் திக்கெல்லாம் பரவிக் கொண்டிருக்கின்றன. வயல் வெளிகளில் வண்டுகள் ராகம் பாடிக் கொண்டிருக்கின்றன. இலங்கையர் குலத்தை வாட்டிய அழகனே, வானவர் தலைவா, மாமுனி விஸ்வாமித்திரரின் வேள்வியைக் காத்த அயோத்தியின் அரசே இன்னுமா உரக்கம். பள்ளியெழுந்தருளாயே என்று ஆழ்வார் பாடுகிறார்.

மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்
வேங்குழல் ஓசையும் விடை மணிக்குரலும்
ஈட்டிய இசைதிசை பரந்தன வயலுள்
இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை,

வாட்டிய வரிசிலை வானவர் ஏறே!
மாமுனி வேள்வியைக் காத்து அவர் பிரதம்
ஆட்டிய அடுதிறல் அயோத்தி எம் அரசே
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே

என்று ஆழ்வார் மனமுருகிப் பாடுகிறார்.

பறவைகள் ஆர்ப்பரித்தன. வயல் வெளிகளில் எல்லாம், வெளிச்சம்பரவியது. பொழுது புலர்ந்தது. கீழ்த்திசையில் ஒளி பரவியது. கடலொலி ஓசை வண்டுகளின் சப்தமும் எங்கும் பரவியது. உங்களைப் பணிய தேவர்கள் எல்லாம் வந்து புகுந்து குவிந்து விட்டனர். இலங்கை அரசனை வென்று வெற்றி கொண்ட எம்பெருமானே, இன்னுமா உரக்கம், பள்ளியெழுந்தருள் வீராக!

“புலம்பின புட்களும் பூம்பொழில்களின்வாய்
போயிற்றுக்கங்குல் புகுந்தது புலரி,
கலந்தது குணதிசைக் கனைகடல் அரவம்,
களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கலம் தொடையல் கொண்டடியிணைப் பணிவான்
அமரர்கள் புகுந்தனர் ஆதலின் அம்மா!
இலங்கையர் கோன்வழி பாடு செய் கோயில்
எம்பெருமான், பள்ளியெழுந்தருளாயே”

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடுகிறார்.

சூரியன் தனது தேரில் புறப்பட்டும் உனது கோயில் வாசல் முன் வந்து நிற்கிறான். இறையவரும் அருமுகனும் அவரவர் வாகனங்களில் வந்து நிற்கிறார்கள். தேவர்களும் வசுக்களும் வந்து வாயிலில் குவிந்து கொண்டிருக்கிறார்கள். குதிரைகளில் பலரும்

வந்து ஆடலும் பாடலும் நடந்து கொண்டிருக்கின்றன. பெரும் வெள்ளம் போல் இக்கூட்டம் உனது கோவில் முன் குவிந்திருப்பதைக் காணாயோ! இன்னும் ஏன் உரக்கம். அரங்கத்தம்மா பள்ளியெழுந்துவா! என்று அழைக்கிறார் அடிப்பொடி ஆழ்வார்.

"இரவியர் மணி நெடுந் தேரோடும் இவரோ?
இறையவர் பதினொரு விடையரும் இவரோ?
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ?
மருதரும் வசுக்களும் வந்து வந்தீண்டி
புரவியோடாடலும் பாடலும் தேரும்
குமரதண்டம் புகுந்தீண்டிய வெள்ளம்
அருவரையனைய நின் கோயில் முன் இவரோ?
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே!"

என்று ஆழ்வார் பாடுகிறார்.

தேவர் கூட்டங்களும் முனிவர்களும் மருதர்களும் இந்திரனும் தனது யானையில் வந்து உனது கோயில் வாசலில் குவிந்திருக்கிறார்கள். இன்னும் சுந்தரர்களும் விச்சாதரர்களும் இயக்கரும் குவிந்து உன்னை வணங்குவதற்காக வந்து காத்திருக்கிறார்கள். அரங்கத்தம்மா, பள்ளியெழுந்து வந்து எனக்கு அருள்புரிவாய்!

அந்தரத்து அமரர்கள் கூட்டங்களிவையோ?
அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ?
இந்திரன் ஆனையும் தானும் வந்திவனோ?
எம்பெருமான் உன் கோயிலின் வாசல்
சுந்தரர் நெருக்கவிச்சாதரர் நூக்க
இயக்கரும் மயங்கினர் திருவடி தொழுவான்

அந்தரம் பாரிடமில்லை மற்றிதுவோ
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே!"

என்று பாடுகிறார் அடிப்பொடியாழ்வார்.

இன்னும்,

வம்பவிழ் வானவர் வாயுரை வழங்க
மாநிதி கபிலை யொண் கண்ணாடி முதலா
எம்பெருமான் படிமக்கலம் காண்டற்கு
ஏற்பனவாயின கொண்டு நன்முனிவர்
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ?
தோன்றினன் இரவியும் துலங்கொளி பரப்பி,
அம்பரதலத்தில் நின்றகல்கின்ற திருள்போல்
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே!

என்றும்,

ஏதமில் தண்ணுமை யெக்கம் மத்தளியே
யாழ் குழல் முழவ மோடிசை திசை கெழுமி
கீதங்கள் பாடினார், கின்னரர் கெருடர்,
கந்தருவரவர் கங்கலுக ளெல்லாம்
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயங்கினர் திருவடி தொழுவான்,
ஆதலில் அவர்க்கு நாளோலக்கமருள
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே!

என்றும்,

"கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன இவையோ?
கதிரவன்கனை கடல் முளைத்தனன் இவனோ?

துடியிடையார் சுரிகுழல் பிழிந்து உதரித்
துகிலுடுத் தேளினர் சூழ்புனலரங்கா
தொடையொத்ததுளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி யென்றும்
அடியனை, அளியன் என்றருளி உன்னடி யார்க்கு
ஆட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே!"

என்றெல்லாம் தொண்டரடிப் பொடியாழ்வார் பாடி மகிழ்கிறார்.

திருமலையில் சுப்ரபாதமும் திருவரங்கத்தில் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் பாடுவது நமது மரபாகும். திருவரங்கம் காவிரி சூழ்ந்த ஊராகும். நீரும், கால்வாய்களும் கழனிகளும் வயல் வெளிகளும், சோலைகளும் மரங்களும் அழகிய நந்தவனங்களும் பசுமையும் நிறைந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். காலைப் பொழுதுக்குக் கட்டியம் கூறுவதைப் போல கோழி கூவும். குயில்கள் விழித்தெழுந்து பாடத் தொடங்கும். பறவையினங்கள் கண் விழித்து தங்கள் குஞ்சுகளுடன் இனிய குரல்களை எழுப்பி இரை தேடப் புறப்படும். ஆயர்கள் எல்லாம் தங்கள் ஆவினங்களைக் காணத் தொழுக்களுக்குச் செல்வார்கள். கன்றுகளை அவிழ்த்து விட்டுப் பால் கறந்து தங்கள் பாற் குடங்களை நிறப்புவார்கள். ஆயர்பாடிப் பெண்கள் தங்கள் பாற்குடங்களைத் தூக்கிக் கொண்டு ஊருக்குள் செல்வார்கள். தடாகங்களில் தங்கியுள்ள பறவையினங்கள் தங்கள் சிறகுகளில் உள்ள பனித்துளிகளை உதரிக் கொண்டு பறந்து செல்லத் தொடங்கும்.

பலபலவெனப் பொழுது புலரத் தொடங்குகிறது. காகங்கள் கரந்து சத்தமிட்டுக் கொண்டு கூட்டாகப் பறந்து செல்கிறது. கதிரவன் கடலில் மூழ்கி எழுவதைப் போல தீப்பிழம்பாக

வெளிப்படுகிறான். இருள் அகன்று உலகெலாம் ஒளி பரவத் தொடங்குகிறது. எண்ணற்ற பலவகைப் பறவையினங்கள் பாடிக் கொண்டு கூட்டம் கூட்டமாக வானத்தில் பறந்து செல்கின்றன. வயல் வெளிகளில் உள்ள பசுமையான நெற்பயிர்கள் எல்லாம் அசைந்தாடிக் கொண்டு சூரிய ஒளியின் பக்கம் சாய்கின்றன. மரங்களிலும், செடிகளிலும், கொடிகளிலும் உள்ள மலர்கள் எல்லாம் சூரிய ஒளி பட்டவுடன் மலர்ந்து விரிந்து மணம் பரப்பத் தொடங்குகிறது. தடாகங்களிலும் இதர நீர் நிலைகளிலும் உள்ள தாமரை, அல்லி மலர்களெல்லாம் மலர்ந்து விரிந்து அசைந்தாடத் தொடங்குகிறது. வண்டுகளும் தேனீக்களும் மலர்களைச் சுற்றிக் கொண்டு வந்து தேனைப்பருகி, மதுவுண்ட மயக்கத்தில் ஆடத் தொடங்குகிறது. உலகமே விழிப்படைந்து அசைந்து செல்லத் தொடங்குகிறது. எங்கும் உயிர்த் துடிப்பு ஏற்பட்டு, அனைத்தும் அசைந்தாடத் தொடங்குகிறது.

ஆயர்கள் குழல் ஊதிக் கொண்டு தங்கள் ஆடுகளையும் மாடுகளையும், எருமைகளையும் பசுக்களையும் ஓட்டிச் செல்கிறார்கள். அந்த ஆவினங்களின் கழுத்துகளில் தொங்கும் மணியோசை காலைக் காற்றில் அலை அலையாகச் சென்று கொண்டிருக்கிறது. ஆயர்பாடி மங்கையர் தயிர் கடைந்து ஒலி பெருக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆயர்குலப் பெண்கள் தங்கள் பாற்குடங்கள், தயிர்க்குடங்கள், மோர்க்குடங்களைத் தூக்கிக் கொண்டு ஊருக்குள் சென்று கொண்டிருக்கிறார்கள்.

உழவர்கள் தங்கள் மாடுகளை ஓட்டிக் கொண்டு வயல் வெளிகளை நோக்கிச் செல்கிறார்கள். காலைக் காற்று சிலீரென வீசுகிறது. ஆதவனின் இளவெயில் பட்டு, மரங்களும், செடிகொடிகளும், வயல் வெளிகளும், கூடுகளும், குடிசைகளும் ஒளிவீசத் தொடங்குகின்றன. உலகின் அனைத்து உயிர்களும்

விழித் தெழுந்துத் துள்ளிக்குதித்துத் தங்கள் தங்கள் பணிகளைத் தொடங்கத் தொடங்குகின்றன.

அரங்கநகர்ப் பெண்கள், காவிரியிலும், அதன் கால்வாய்களிலும் தடாகங்களிலும், குளித்துவிட்டு தலைமுடியைப் பிழிந்து உதரிக் கொண்டு, ஈரத்துணியுடனும், இடுப்பில் குடங்களுடனும், அசைந்து நெளிந்து வந்து கொண்டிருக்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. ஆண்களில் பலரும் மலர்வனங்களில் பூத்து நிற்கும் மலர்களையும் துளசி அரும்புகளையும் எடுத்துக் குவித்துத் தொடையளவு மாலைகளைத் தொடுத்துக் கொண்டுக் கோவிலை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள். பலவகைத் தொழில் செய்வோரும் காலையில் எழுந்து தங்கள் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு தங்கள் தங்கள் வேலைகளுக்குச் சென்று கொண்டிருக்கிறார்கள். தெருக்களில் காய்கனிகள், தயிர், மோர், மலர்கள் இலைகள் இதர பொருள்கள் விற்போர் கூவும் சத்தமும் இதர ஒலிகளும் சேர்ந்து இரைச்சல் பெருகிக் கொண்டிருக்கிறது. மக்களின் ஆரவாரங்களும் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது.

மக்கள் கூட்டமும் தேவர்கள் கூட்டமும், இறைவனும், இந்திரனும் அறுமுகனும், மருதரும், வசுக்களும், முனிவர்களும் விச்சாதரர்களும், இயக்கரும், தும்புருவும், நாரதரும், கந்தருவரும், மாதவர்களும், வானவர்களும் சாரணர்களும், மற்றவர்களும், கூட்டம் கூடியும், ஆட்டங்கள் ஆடியும், பாட்டுக்கள் பாடியும் குரலோசை எழுப்பியும், இசைக் கருவிகளின் இன்னிசை எழுப்பியும், தங்கள் தங்கள் ரதங்களுடனும் வண்டிகளுடனும் வாகனங்களுடனும், குதிரைகள், யானைகளுடனும் குவிந்து கோயில் வாசலில் அரங்கனை சேவிக்க முண்டியடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நானும் தொடையளவு துளசி மாலையுடன் உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். அரங்கனே, பள்ளியெழுந்தருள்வாயாக ! என்று

ஆழ்வார், மிக அற்புதமாக ஆண்டவனையே தட்டி எழுப்பும் இந்தத் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் தமிழ்ச் சுவையும், கவிச்சுவையும், பக்திச் சுவையும் நிறைந்த பாடல்களாகும். இத்தகைய அற்புதமான இசை வடிவத்தின், கவிதை வடிவத்தின் வழியில் மகாகவி பாரதி தனக்கே உரித்தான முறையில் பாரதமாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களை இனிமையாக, துடிப்புடன் பாடுகிறார்.

பாரதநாட்டு மக்களாகிய நாம் ஒற்றுமைப்பட்டு நின்று தவம் செய்து வருகிறோம். நமது தவத்தின் பயனாய் பொழுது புலர்ந்துவிட்டது. அதனால் புன்மையிருட் கணங்கள், தீய சக்திகளான இருள் பேய்கள், ஓடிவிட்டன. அறிவு என்னும் ஆதவன் உதித்துவிட்ட காரணத்தால் எல்லா இடங்களிலும் பொன்மயமான அறிவு ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. பாரதத் தாயே, உன்னை வணங்கி வாழ்த்துவதற்கு ஆயிரக் கணக்கான தொண்டர்களாகிய நாங்கள் உன்னைச் சூழ்ந்து நிற்கிறோம். இன்னும் ஏன் உறக்கம். பாரதத்தாயே பள்ளியெழுந்து எங்களுக்கு அருள்புரிவாயாக என்று கவிஞர் மிக அழகாக, அற்புதமாகப் பாடுகிறார்.

பொழுது புலர்ந்ததை, அறிவாகிய சூரியன் ஒளிபரப்ப எழுந்து விட்டதாகவும் தீய சக்திகளான தீய குணங்களான பல புன்மைகளை இருளுக்கும் ஒப்பிட்டு அறிவு என்னும் சூரியன் எழும்போது அறியாமை மடமை என்னும் இருள் நீங்குவதாகக் கவிஞர் பாடியுள்ளது மிகவும் பொருத்தமானதும், நாட்டின் நிலைமைகளுக்கு மிகவும் பொருந்துவதாகவும் உள்ளதைக் காண்கிறோம்.

“பொழுது புலர்ந்தது யாம் செய்ததவத்தால்
புன்மையிருட் கணம் போயின யாவும்
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
எழுந்து விளங்கியது அறிவெனும் இரவி

தொழுதுனை வாழ்த்தி வணங்குவதற்கு இங்குன்
தொண்டர் பல்லாயிரம் சூழ்ந்து நிற்கின்றோம்.
விழி துயில் கின்றனை இன்னும் என்தாயே
வியப்பிது காண், பள்ளியெழுந்தருளாயே ”

என்று கவிஞர் பாடுகிறார்.

பறவைகள் எல்லாம் ஆர்ப்பரித்து குரல் எழுப்பிப் பறந்து செல்கின்றன. முரசுகள் ஒலிக்கத் தொடங்கி விட்டன. சங்குகள் முழங்கத் தொடங்கி விட்டன. எங்கு நோக்கினும் சுதந்திர கீதங்கள் ஒலிக்கத் தொடங்கி விட்டன. பெண்கள் எல்லாம் கூட சுதந்திரக் குரல் கொடுத்துத் தெருக்களுக்கு வந்து விட்டார்கள். அந்தணர்கள் ஓதும் வேதங்கள் கூட, பாரதத்தாயே! உனது பெயர்களை உச்சரித்துத் தான் ஒலிக்கத் தொடங்கியுள்ளன. அன்னையே, இன்னுமா உறக்கம், எழுந்து வந்து எங்களுக்கு அருள் செய்வாயாக என்று பாரதி பாடுகிறார்.

“புள்ளின ஆர்த்தன, ஆர்த்தன முரசம்
பொங்கிய தெங்கும் சுதந்திர நாதம்
வெள்ளிய சங்கம் முழங்கின கேளாய்
வீதியெலாம் அணுகுற்றனர் மாதர்
தெள்ளிய அந்தணர் வேதமும் நின்றன்
சீர்த்திருநாமமும் ஓதி நிற்கின்றார்
அள்ளிய தெள்ள முதன்னை எம்அன்னை
ஆருயிரே பள்ளியெழுந்தருளாயே!

என்று கவிஞர் நெஞ்சுருகப் பாடுகிறார்.

சூரியனின் பேரொளிவானகமெங்கும் பரவிவிட்டது. உலகம் எல்லாம் உன் ஒளிவீசத் தொடங்கியிருக்கிறது. உன் சேவடியில் சமர்ப்பிப்பதற்காக எங்கள் நெஞ்சங்களில் தோன்றுகின்ற அன்பு மலர்களை பாச மலர்களை கனிவோடு நாங்கள் கொண்டு வந்து நிற்கிறோம்.

பாரதத் தாயே! எத்தனை கோடி சுருதிகளைப் படைத்துள்ளாய். எத்தனை கோடி சாத்திர நூல்களைச் செய்துள்ளாய். எத்தனை அறிவோடு எங்களை ஈன்றெடுத்துள்ளாய். கொடியவர்களும் அரக்கர்களும் நடுங்கும் படியாக உன் கையில் சூலாயுதத்தையும் தாங்கிக் கொண்டிருக்கிறாய். இன்னும் தூக்கத்தில் ஆழ்ந்து எங்களை ஏன் தவிக்க விட்டுக் கொண்டிருக்கிறாய். உரக்கத்திலிருந்து எழுந்து எங்களைக் காப்பாயாக என்று அன்னையை பாரதி வேண்டுகிறார்.

வேதங்கள், சாத்திரங்கள், காப்பியங்கள், எண்ணற்ற பல காவியங்கள், சுருதிகள், ஸ்மிருதிகள், புராணங்கள், இதிகாசங்கள், அறநூல்கள், அரசியல் நூல்கள், அறிவியல் நூல்கள், தத்துவ நூல்கள், பக்தி நூல்கள், ஞான நூல்கள் முதலிய கோடிக் கணக்கான அறிவுக் களஞ்சியங்களைப் பெற்றெடுத்தவள் பாரத அன்னை. இந்த அறிவுச் செல்வங்கள் எல்லாம், பாரத மக்களை உயர்த்திப் பாதுகாத்து வந்திருக்கின்றன. இத்தனை வகை அறிவுச் செல்வங்களும் போதாது என்றும் அவைகளை மீறியும் அக்கிரமங்களும் அநியாயங்களும், ஆக்கிரமிப்புகளும் கொடுமைகளும் தோன்றும் போது அவைகளைச் செய்யும் கொடுமைக்காரர்களையும், அரக்கர்களையும், அயோக்கியர்களையும், துஷ்டர்களையும் ஒழித்து உலகைக் காப்பதற்காக அன்னையின் கையில் சூலாயுதமும் இருக்கிறது. அறவழி போதாவிட்டால், பாரதத்தாய் ஆயுதம் எடுப்பதற்கும் தயாராக நிற்பதையும் பாரதி இங்கு நினைவூட்டுகிறார் போலும்.

இங்கு கவிச்சக்கரவர்த்தி கம்பனின் காட்சி ஒன்று நினைவு கூறத் தக்கது.

கைகேயி இராமனை அழைத்து,

“ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள நீ போய்த்
தாழ் இரும் சடைகள் தாங்கித் தாங்கறும் தவம் மேற்கொண்டு
பூழி வெம் கானம் நண்ணிப் புண்ணியத்துறைகள் ஆடி
ஏழிரண்டு ஆண்டில் வா என்று இயம்பினன் அரசன்”

என்று கூறி வனம் செல்லுமாறு கட்டளையிட்டு விட்டாள்

சடைகள் தாங்கி, தவம் மேற்கொண்டு, கானம் போய்ப் புண்ணியத்துறைகள் ஆடி வரும்படி கூறுகிறாள்.

இராமபிரான் சீதையுடனும், இலக்குவனுடனும் காட்டிற்குச் செல்லும் போது

**“தையல் தன் கற்பும் தன் தகவும் தம்பியும்**
**மையறுகருணையும் உணர்வும் வாய்மையும்**
**செய்யதன் வில்லுமே சேமம் ஆகக்கொண்டு**
**ஐயனும் போயினான் அல்லின் நாப்பணே!”**

சீதையின் கற்பு, தனது பெருந்தன்மை, தம்பி இலக்குவன், தனது அருங்குணங்களான கருணை நல்லுணர்வு, வாய்மை ஆகியவைகளைத்துணையாகக் கொண்டும் அவைகளுடன் வில்லும் பாதுகாப்புக்கான துணையாகக் கொண்டு இராமபிரான் நடுஇரவில் காட்டிற்குச் செல்வதற்கான பயணத்தைத் தொடங்கியதாகக் கம்ப நாடர் குறிப்பிடுகிறார்.

சடைகள் - தாங்கி, தவம் மேற்கொண்டு, கானகம் போய்ப் புண்ணியத்துறைகள் ஆடி வருவதற்குக் கற்பும், பெருந்தன்மையும், தம்பியும் தனது கருணையும் நல்லுணர்வும், வாய்மையும் இருக்கட்டும், வில் எதற்கு என்னும் கேள்வி எழலாம். இங்கு இராம பிரானுக்குத் தனது அவதாரக்கடமைகளை நிறைவேற்றுவதற்கு தீயோரை அழித்து நல்லோரைக் காப்பதற்கு கற்பு, பெருந்தன்மை, தம்பி, கருணை, நல்லுணர்வு வாய்மை ஆகியவற்றுடன் தற்காப்பிற்கும் தாக்குதலுக்கும் வில்லும் அவசியமாகிறது. இதை மிகவும் அற்புதமாக மிகவும் நுட்பமாக கம்ப நாடர் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

பாரதி பாரத அன்னையை நிர் மலையே என அழைக்கிறார். அன்னையின் உள்ளத்தில் எந்தக்களங்கமும் இல்லை. சூதும் வாதும் இல்லை. கள்ளம் கபடம் இல்லை. நிர்மலமான தெளிவான தூய உள்ளம் கொண்டவள் பாரத அன்னை. பாரத மக்களின் தூய வடிவத்தைக் கொண்டவளே அந்த நிர்மலை என்பது பாரதியின் வாசகம்.

பரிதியின் பேரொளி வானிடைக் கண்டோம்
பார்மிசை நின்னொளி காணுதற் கலந்தோம்
கருதி நின் சேவடி அணிவதற்கென்றே
கனிவுறு நெஞ்சக மலர்கொடு வந்தோம்
சுருதிகள் பயந்தனை, சாத்திரம் கோடி
சொல்லருமாண்பின ஈன்றனை யம்மே!
நிருதர்கள் நடுக்குறச் சூல் கரத் தேற்றாய்
நிர்மலையே! பள்ளியெழுந்தருளாயே

என்று பாரதி தெளிவு படப் பாடுகிறார்.

அன்னையே! உன் எழில் காண்பதற்கு, விழியருள் காண்பதற்கு உனது அழகிய கண்களின் கருணையைக் காண்பதற்கு நாங்கள் எத்தனை ஆவலுடன் இருக்கிறோம் என்பதை நீ அறிய மாட்டாயா?

வெண்மையான உரைபனி மூடியிருக்கும் சிகரங்களைக் கொண்டிருக்கும், இமயம் பெற்றெடுத்த பெருந்தவப் பயனே, அருந்தவப் பாவாய், உனது அருளைப் பெருவதற்காக என்னென்ன வகைகளில் எல்லாம் தவங்கள் செய்து எத்தனை காலம் ஏங்கிக் கொண்டிருப்போம். இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாயே! உனக்கு இது நன்றாக இருக்கிறதா? எங்கள் ஆருயிர் போன்றவளே! உரக்கத்திலிருந்து எழுந்து வந்து எங்களைக் காப்பாற்று வாயாக என்று கூறுகிறார் பாரதியார்.

நின்னெழிர் விழியருள் காண்பதற் கெங்கள்
நெஞ்சகத்தாவலை நீயறியாயோ?
பொன்னனையாய், வெண் பனிமுடி இமையப்
பொருப்பினன் ஈந்த பெருந்தவப் பொருளே!
என்ன தவங்கள் செய்து எத்தனை காலம்
ஏங்குவம் நின்னருட்கேழையம் யாமே
இன்னமும் துயிலுதியேல் இது நன்றோ?
இன்னுயிரே! பள்ளியெழுந்தருளாயே!

என்பது பாரதியின் அருங்கவிதையாகும்.

குழந்தைகள் தூக்கத்திலிருந்து எழுந்து வந்து எழுப்பும் வரை தாய் தூங்கிக் கொண்டிருக்கலாமா என்று பாரதத் தாயைக் கவிஞர் கேட்கிறார். இது பற்றி இந்த மாநிலத்தை, மாபெரும் பூமியை, மாபெரும் தேசத்தைப் பெற்றவளே, நீ அறிய மாட்டாயா? என்று கவிஞர் கேட்கிறார்.

குழந்தைகள் பேசும் மழலை மொழிக்கு செவிகொடுக்காத தாயும் உலகில் உண்டோ! குழந்தைகளின் குரலுக்கு இரங்காத ஒரு தாய் உலகில் உண்டோ? அதிலும் பெரும் பாரத நாட்டிற்கே அரசியான கோமகளுக்கு அந்த நிலை வருமா? என்று கவிஞர் கேட்கிறார். பாரதி காலத்தின் கணக்குப்படி பாரத மக்களின் மொழிகள் மொத்தம் பதினெட்டு. இன்றும் அம்மொழிகள் பாரத மக்களால் பேசப்பட்டும், வளர்க்கப் பட்டும் வருகின்றன. பாரத மக்கள் தங்களுடைய பதினெட்டு மொழிகளிலும் பாரத அன்னையைப் புகழ்ந்து, பாராட்டிப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய பெருமை வேறு எந்த நாட்டிற்கு இருக்கிறது? அன்புடன் வந்து எங்களை ஆண்டு அருள் செய்வாயாக! ஈன்றவளே! உனது உரக்கத்திலிருந்து எழுந்து வந்து எங்களைக் காப்பாயாக! என்று மகாகவி பாரதி பாடுவது நம் அனைவரின் உள்ளத்தை உருக்குவதாகும்.

மதலையர் எழுப்பவும் தாய் துயில் வாயோ
மாநிலம் பெற்றவள் இஃதுணராயோ?
குதலை மொழிக்கிரங்கா தொரு தாயோ?
கோமகளே! பெரும் பாரதர்க்கரசே!
விதமுறு நின்மொழி பதினெட்டும் கூறி
வேண்டிய வாறுனைப் பாடுதும் காணாய்
இதமுற வந்தெமை ஆண்டருள் செய்வாய்
ஈன்றவளே! பள்ளி யெழுந்தருளாயே!

என்று பாரதி பாடி பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களை உணர்ச்சி பொங்கப் பாடி முடிக்கிறார்.

தொண்டரடிப் பொடி யாழ்வார் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் திருமாலின் திவ்ய தேசங்கள் தோறும் பெருமாளின் ஆலயங்கள் தோறும் பக்தர்களின் வீடுகள் தோறும் பஜனை பாடும் வீதிகள் தோறும், பாடப்பட வேண்டிய பாசுரங்களாகும். பாடிக் கொண்டிருக்கும் பாசுரங்களாகும். அதே போல பாரதியின் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் வீடுகள் தோறும், மேடைகள் தோறும், கல்விச் சாலைகள் தோறும் பலவேறு அரங்குகள் தோறும், அணிகள் தோறும் பாட வேண்டிய பாடல்களாகும். பாரத நாடு அன்னியருக்கு அடிமைப் பட்டிருந்த காலத்தில், அடிமைப்பட்டிருந்த மக்களை உரக்கத்திலிருந்தும், மயக்கத்திலிருந்தும் அறியாமையிலிருந்தும், அச்சத்திலிருந்தும் எழுப்புவதற்காகப் பாடப் பட்டப் பள்ளியெழுச்சிப் பாடல்கள் இவையென்றாலும் எல்லாக் காலத்திற்கும் ஏற்றவைகளாக அவை அமைந்துள்ளன.

நாட்டில் மயக்கமும் அறியாமையும் அச்சமும் அடிமைச் சிறுமதியும் இருக்கும் வரை, அவை நீங்க, மக்களை விழிப்படையச் செய்ய வேண்டியது அவசியமாகிறது. எனவே பாரதியின் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் இன்றைக்கும் பொருள் நிறைந்தனவும், பொருந்துவனவுமாகும். மேலும் அப்பாடல்கள் வரலாற்றில் இடம் பெற்று இப்போது அது ஒரு வரலாற்று ஆவணமாகி விட்டது. அவைகளைப் படித்துப் பயன் பெறுவது மிகவும் அவசியமானதாகி விட்டது.

தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் பாரதியாரின் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும் ஆழ்வார் அரங்கனையும், பாரதியார் பாரத அன்னையையும் நேருக்கு நேராக முன்னிலைப் படுத்தி நின்று பாடும் பாடல்களாகும். ஆழ்வார் பாடல்கள் பத்து – பாரதியாரின் பாடல்கள் ஐந்து. பாரதியார் ஐந்துடன் நிறுத்திக் கொண்டார். அரங்கனின் துக்கம் அரிதுயில் அனந்தசயனம், பாரதத்தாயின் தூக்கம்

தாற்காலிகமானது. ஊழ்வினையினாலோ அல்லது நமது பலவீனத்தினாலோ ஏற்பட்ட தூக்கம். அதனால் தான் பாரதியார் ஐந்து பாடல்கள் போதும் என்று அத்தோடு நிறுத்திக் கொண்டார் போலும்.

ஆழ்வாரின் பாடல்கள் பக்தியின் ஆழ்ந்த பக்தியின் வெளிப்பாடாகும். பாரதியாரின் பாரத மாதா திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் காலத்தின் கட்டாயமாக வெளிப்பட்டவையாகும்.

பாரதியாரின் இந்தப் பள்ளியெழுச்சிப் பாடல்கள் மிகவும் அற்புதமான பாடல்களாக அமைந்துள்ளன. தமிழ்ச்சுவை, தேசபக்த உணர்வு, கருத்துச்செரிவு, அறிவுத்தெளிவும் கூர்மையும் முதலிய அனைத்தும் அடங்கியதாக அமைந்துள்ளது.

பாரதியார் இந்த ஐந்து பாடல்களும் ஐந்து லட்சம் பெறும் ஏன் ஐந்து கோடி பெறும். இந்தப் பள்ளியெழுச்சிப் பாடல்கள் மக்களிடம் விரிவாகச் செல்ல வேண்டும். மக்களிடம் விரிவாகப் பரவ வேண்டும்.

பாரத மக்கள் தூக்கத்தில் இருப்பதையே பாரத அன்னை தூக்கத்தில் இருப்பதாகக் கற்பித்துப் பாரதியார் பாடுகிறார்.

அரங்கனின் துயில் அரிதுயில், மோனத்துயில், தியானத்துயில், சிந்தனைத்துயில், யோகத்துயில், யோகம் என்பது எந்த ஒரு செயலையும் ஊன்றி கவனம் செலுத்தி, ஆழ்ந்து மனதைச் செலுத்தி உள்ளத்தையும் சிந்தனையையும் ஒரு முகப்படுத்தி, ஒரு நிலைப்படுத்தி ஒரு வேலையைச் செய்வதாகும். அவ்வாறு ஈடுபாட்டுடன் ஒரு காரியத்தைச் செய்யாவிட்டால் அக்காரியம் அவ்வேலை பழுது பட்டு விடும்.

எழுதுவதும், படிப்பதும், சமயல் செயவதும், சாப்பிடுவதும், கார் ஓட்டுவதும், கடையில் பொருள்களை விற்பனை செய்வதும்,

பாட்டுக்கள் பாடுவதும் நாட்டியம் ஆடுவதும் வயலில் நடுகை நடுவதும், அறுவடை செய்வதும், மரத்தில் காய் பறிப்பதும், வேட்டையாடுவதும், பேசுவதும் இன்னும் மனிதன் செய்யும் அத்தனை செயல்களும் யோகத்தின் பால் பட்டதேயாகும்.

அப்படி இயல்பாகவே நாம் செய்யும் தொழில் அனைத்தும் யோகத்தின் பால்பட்டதாகவே அமைந்துள்ளன. ஆயினும் அப்படிப் பட்ட செயல்களை உணர்வு பூர்வமாகப் பக்தி சிரத்தையுடன் செய்வது அச்செயலில் ஒரு ஈடுபாட்டுடன் மனம் ஒன்றிக் கடமையுணர்வுடன் செய்வது சிறப்பானதாகும். அப்போது அப்பணியும் சீராக அமைகிறது. அதுவே பக்தியோகமாகிறது. இன்னும் ஒருவர் ஒரு செயலில் ஈடுபடும்போது, ஒரு வேலையைச் செய்யும் போது அதில் அவர் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, அவ்வேலையைச் செய்யும் போது, மனத்தெளிவும், அறிவுத் தெளிவும், அத்தொழில் பற்றிய முழுமையான ஞானத்துடன் உணர்வு பூர்வமாகச் செய்வதும் அப்பணியைச் செய்து முடிப்பதும் ஞான யோகமாகிறது.

அவ்வாறு அரங்கன் யோகத்தில் மோனத்தில் ஆழ்ந்திருப்பதை, உரக்கமாகக் கருதி, தம் சாதாரண மக்களுடைய கருத்தைத் தனது கருத்தாகக் கொண்டு, இரவு கழிந்து விட்டது, இரவி எழுந்து விட்டான். உலகமெல்லாம் ஒளி பரவிவிட்டது, பறவைகள் விழித்தெழுந்து பாடிக் களித்து பறக்கத் தொடங்கிவிட்டன. பயிர் பச்சை, செடிகொடி மரங்கள் எல்லாம் தூக்கத்திலிருந்து எழுந்து அசையத் தொடங்கி விட்டன. மலர்கள் எல்லாம் மலர்ந்து மணம் வீசத் தொடங்கி விட்டன. மக்கள் எல்லாம் எழுந்து நடமாட, செயல் படத்தொடங்கி விட்டார்கள். குழந்தைகள் எல்லாம் எழுந்து, ஓடியாடி விளையாடத் தொடங்கிவிட்டன. ஆடு மாடுகளும் எழுந்து புறப்பட்டு விட்டன. இவையனைத்தின் குரல்களும் ஓசைகளும், ஒலிகளும் ஆகாயமெங்கும் பரவி பெரும் சத்தம் கிளம்பத் தொடங்கி விட்டது. இன்னும் நீ தூக்கத்தில் இருந்தால், அனைத்தையும் இயக்கும்

ஆண்டவனே தூங்கி விட்டால் இயற்கையும் உலகத்து உயிர்களும் செயல் இழந்து விடும் என்னும் அச்சத்தில் ஆழ்வார் தனது ஆழ்ந்த பக்தி உணர்வுடன் அரங்கனைத் துயில் எழுப்புகிறார்.

நாடு அடிமைப்பட்டு விட்டது, நாட்டுமக்கள் சுதந்திரமான வாழ்வை இழந்து விட்டார்கள். அன்னிய ஆட்சியின் அவலங்கள், கொடுமைகள், அலட்சியங்கள் கொள்ளைகள் காரணமாக நமது வயல் வெளிகள் காடுகரைகள் பாழாகி விட்டன. நமது நீர் நிலைகள், ஆலயங்கள், சேதமடைந்து சீர் கெட்டு விட்டன. காடுகளும், மலைகளும், ஆறுகளும், மரங்களும் அழிந்து அரை நாசம் அடைந்து விட்டன. மக்கள் வறுமைப்பட்டு, பசி பட்டினியால் வாடி வதங்கி செத்து மடிகிறார்கள். நோய் நொடிகள் சுலபமாக மக்களைப் பிடித்து விடுகின்றன.

கல்வி நிலையங்கள் கெட்டு அழிந்து விட்டன. கவனிப்பார் இன்றி மங்கிப் போய் விட்டன. மக்கள் கல்வி அறி விழந்து அறிவழிந்து கல்லாமையிலும், அறியாமையிலும், அச்சத்திலும், மூழ்கியிருக்கிறார்கள். இந்த இருள் சூழ்ந்த நிலை மாறத் தொடங்கியிருக்கிறது. பொழுது புலரத் தொடங்கியிருக்கிறது. சூரியன் உதித்தவுடன் சேதனப் பிரகிருதிகள் மட்டுமேயன்றி அசேதனப் பிரகிருதிகளும் புதிய ஜீவனைப் பெற்று, ஒரு புதிய தெம்பையும், உற்சாகத்தையும் பெற்றுத் திகழ்கிறது. என்று பாரதி கூறுவதைப் போல, சூரியோதயம் போல ஒரு புதிய மார்க்கம், ஒரு புதிய இயக்கம், விடுதலை இயக்கம், தேசீய விடுதலை இயக்கம், தோன்றி மக்களின் உள்ளங்களில் புத்துணர்ச்சியும், புத்தெழுச்சியும் தோன்றத் தொடங்கி விட்டன. புன்மையிருட் கணம் தொலையத் தொடங்கி விட்டது. மறையத் தொடங்கி விட்டது. அறிவு என்னும் இரவியின் ஒளிபடரத் தொடங்கிவிட்டது. ஆயிரக்கணக்கான தொண்டர்களும், அறிவாளிகளும், தேசபக்தர்களும், சுதந்திர உணர்வில் விழிப்படைந்து திரளத் தொடங்கியிருக்கிறார்கள். இந்த

நிலையில் விடுதலை இயக்கத்தில் மக்களை மேலும் அதிகமாக ஒன்று திரட்ட வேண்டும். அதற்காக மக்களை மேலும் அதிகமாக விழிப்படையச் செய்ய வேண்டும். அதற்காக பாரத மக்களை பாரத அன்னை வடிவத்தில் காணும் பாரதி, தூக்கத்திலிருந்து அறியாமை இருளிலிருந்து வெளியேறி, விடுதலை ஒளியில் வந்து குவியும்படி மக்களைத் தட்டி எழுப்புகிறார்.

வாழையடி வாழையாக வந்த திருக் கூட்டத்தின் தொடர்ச்சியாக ஆழ்வார்களின் பக்தி வடிவைப் பின்பற்றி அதைத் தனதாக்கிக் கொண்டு பாரதி, பாரத மாதாவைத் தமிழ் மொழியில் பாடித்தட்டி எழுப்புகிறார்.

## 4. சாதி வேறுபாடுகளை நீக்கி மக்களை ஒன்றுபடுத்தும் பணியில்

சாதி வேறுபாடுகளுக்கும், சாதிப் பாகுபாடுகளுக்கும் எதிராக ஆழ்வார்கள் பலரும் பாடியிருக்கிறார்கள். பக்தி இயக்கமே அனைத்து மக்களுடைய ஒற்றுமையைக் குறிக்கும் இயக்கமாகவே வளர்ந்துள்ளது.

சமுதாய முன்னேற்றத்திற்கு சமுதாயத்தின் ஒற்றுமை என்பது ஒரு அவசியமான நிபந்தனை நிலையாகும். சமுதாய ஒற்றுமை சீர்குலைந்தால் அல்லது நிலை குலையுமானால் சமுதாய முன்னேற்றம், மனித குல முன்னேற்றம் தடைபடும். இந்து சமுதாயத்தின் வரலாற்று அனுபவங்களிலிருந்து நாம் படிப்பினைகள் கற்றுக் கொள்வது எதிர் கால முன்னேற்றத்திற்கு மிகவும் அவசியமானதாகும்.

இந்திய நாட்டில் சாதிப் பிரிவினை ஏற்பட்டது என்பது முதலில், வேலைப் பிரிவினையின் அடிப்படையிலாகும் என்பது ஒரு ஆய்வுக் கருத்தாகும். ஆயினும் பின்னர் அந்தப் பிரிவினையைப் பயன்படுத்தி ஆதிக்கத்தில் இருந்தவர்கள், பெரும்பாலான மக்களை அடிமைப்படுத்தவும். தங்கள் ஆதிக்கத்தைத் தக்கவைத்துக் கொள்ளவும் நீடித்து வைத்துக் கொள்ளவும் சாதி வேறுபாடுகளையும் மத வேறுபாடுகளையும் உண்டாக்கி, அதைப் படிப்படியாகக் கெட்டிப்படுத்தி விட்டார்கள். அதனால் ஏற்பட்ட கொடுமைகள் நாளடைவில் இந்திய சமுதாயத்தின் ஒற்றுமையைக் குலைத்து இந்திய நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடையாக அமைந்து விட்டது. இந்தக் கொடுமைகளை எதிர்த்து பக்தி இயக்கம் குரல் கொடுத்திருக்கிறது.

சாதி அமைப்பு இந்திய நாட்டில் தோன்றும்போது, கூட அது பிறப்பால் அமையவில்லை. குணத்தாலும் செய்கையாலும் என்றுதான்

சாதிப்பிரிவுகள் தொடக்கத்தில் ஏற்பட்டன. வர்ணாசிரம தர்மத்தில் வர்ணம் என்பது உடம்பின் தோலின் நிறத்தைக் குறிப்பிடவில்லை. உள்ளத்தின் தூய்மையை அதன் நிறத்தையே குறிப்பனவாக இருந்தன. இராமனும், கண்ணனும் நிறத்தால் கருப்பர்கள் தானே! எனவே பின்னர் நாளா வட்டத்தில் ஆதிக்க சக்திகள் பல போலிச் சுவடிகளைக் கற்பித்து அவைகளைச் சமுதாயத்தின் எண்ணத்தில் சிந்தனையில், வாழ்க்கையின் பழக்கவழக்கங்களில் நடை உடை பாவனைகளில் பிறப்பால் சாதி என்னும் பொய்க் கருத்துக்களை நிலை நிறுத்தி உறுதிப் படுத்திவிட்டார்கள். இதுவே பின்னர் சாதி அமைப்பு முறையில் பலவேறு பிரிவுகள் அதிகப்படவும், நான்கு சாதி நாற்பதினாயிரம் சாதிகளாகப் பிரியவும் அதில் பாகுபாடுகளும், வேறுபாடுகளும், தீண்டாமை, காணாமை போன்ற கொடுமைகளும் தோன்றவும் காரணமாகி சமுதாயத்தைச் சீர்குலைத்துள்ளன. இந்தப் பாகுபாட்டுக் கொடுமைகளை எதிர்த்து இந்திய சமுதாய வரலாற்றில் தொடர்ச்சியாகக் குரல் எழுப்பப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. அதில் பக்தி இயக்கம் ஒரு முக்கிய பங்கை ஆற்றியிருக்கிறது. ஆழ்வார்களின் பல பாடல்களிலும் சில ஆழ்வார்களின் பிறப்பு வளர்ப்பு மற்றும் அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றிலும் அதை நாம் தெளிவாகக் காணமுடிகிறது.

பாரதி, தனது காலத்தில் இருந்த சாதிபாகுபாடுகள், வேறுபாடுகள், கொடுமைகள் ஆகியவற்றைக் கடுமையாகச் சாடியிருக்கிறார். அன்னிய ஆட்சிக்கு எதிராக இந்திய மக்களின் ஒற்றுமை அவசியப்பட்டது. இந்தச் சாதிப் பாகுபாடுகளும் வேறுபாடுகளும் கொடுமைகளும் இந்திய மக்களின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் தடையாக இருந்தன. சமூக நீதியின் அடிப்படையில் அனைத்து மக்களின் முழுமையான சமத்துவமும் சம நீதியும் மக்களின் சமுதாய ஒற்றுமைக்கு மிகவும் அவசியமானதாகும். இதைப் பாரதி மிகவும் அருமையாகவும்

மிகவும் தெளிவாகவும் உறுதியாகவும் தனது கவிதைகளில் பாடல்களில் குறிப்பிடுகிறார்.

**கீதை**யில் கண்ணபிரான், குணத்திற்கும் செய்கைக்கும் தக்கபடி நான் நான்கு வர்ணங்களைச் சமைத்தேன் செய்கையற்றவனும் அழிவற்றவனுமாகிய யானே அவற்றைச் செய்தேன் என்று உணர் என்று நான்காவது அத்தியாயத்தில் பதிமூன்றாவது சுலோகத்திலும், பரந்தபா, பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களுடைய தொழில்கள் அவரர் இயல்பின் படி விளையும் குணங்களின் படி வகுப்புற்றனவாம் என்று பதினெட்டாவது அத்தியாயத்தில் நாற்பத்தி ஒன்றாவது சுலோகத்திலும் கூறியிருப்பதைக் காண்கிறோம். நான்கு வர்ணங்களைப் படைத்தது ஆண்டவன்தான் என்றால் அது பிறப்பால் அல்ல என்று கூறியுள்ளதும் ஆண்டவன்தானே. ஆண்டவன் படைப்பில், மனிதன் மட்டுமல்லாமல் அனைத்து உயிர்களும் சமம் என்பது வைணவ சித்தாந்தத்தின் அடிப்படை ஆதாரமான கோட்பாடாகும்.

பாரதி தனது பகவத் கீதை தமிழாக்க நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில், எனவே கண்ணபிரான் மனிதருக்குள் சாதி வேற்றுமையும் அறிவு வேற்றுமையும் பார்க்கக் கூடாது என்பது பட்டுமேயன்றி எல்லா உயிர்களுக்குள்ளேயும் எவ்வித வேற்றுமையும் பாராதிருத்தலே ஞானிகளுக்கு லட்சணமென்று சொல்கிறார் என்று மிகவும் தெளிவாகவே குறிப்பிடுகிறார்.

இன்னும் பாரதி கண்ணன் பாட்டுகளில் கண்ணன் என் தந்தை என்னும் தலைப்பிலான பாடல் வரிகளில்

நாலு குலங்கள் அமைத்தான் – அதை
நாசமுறப்புரிந்தனர் மூட மனிதர்

சீலம், அறிவு, தர்மம் – இவை
சிறந்தவர் குலத்தினிலே சிறந்தவராம்
மேலவர் கீழவர் என்றே வெறும்
வேடத்தினில் பிறப்பினில் விதிப்பனவாம்
போலிச்சுவடியை யெல்லாம் – இன்று
பொசுக்கி விட்டால் எவர்க்கும்
நன்மை உண்டென்பான்

என்று மிகவும் தெளிவாகவே குறிப்பிட்டுக் கூறுகிறார்.

ஆழ்வார்களில் பொய்கை யாழ்வார் பூதத்தாழ்வார், பேயாழ்வார், ஆண்டாள் ஆகிய நால்வர் பிறப்பில் சாதியில்லை. பொய்கையாழ்வார், பொய்கையில் பொற்றாமரையில் பிறந்ததாகவும், பூதத்தாழ்வார் மல்லிகைப் புதரின் நடுவில் நீலோத் பல மலரிலும், பேயாழ்வார் கோவில் கிணற்றில் செவ்வல்லிமலரிலும், ஆண்டாள் கோயில் நந்தவனத்தில் துளசிச் செடியின் கீழ் அவதரித்ததாகவும், ஆழ்வார்களின் அவதாரச் சிறப்புகள் குறிப்பிடுகின்றன. இனி திருப்பாணாழ்வார் பஞ்சமர் குலத்திலும், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் சதுர்த்தவருணத்தில் அதாவது நாலாம் வருணமாகிய சூத்திரர் குலத்தில் பிறந்ததாகவும் குலசேகராழ்வார் அரசகுலத்தில் பிறந்ததாகவும், மதுரகவியாழ்வார் பெரியாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார் ஆகியோர் முன் குடுச் சோழியர் குலத்தில் பிறந்ததாகவும் ஆழ்வார்களின் வரலாறுகள் குறிப்பிடுகின்றன. எனவே ஆழ்வார்களின் பிறப்பே, சாதி சமத்துவத்தையும் சாதி ஒற்றுமையையும் பெண்பால் பெருமையையும் குறிப்பதாக உள்ளது.

ஆழ்வார்களில் திருப்பாணாழ்வாருடைய வரலாற்றுக் கதை மிகவும் சிறப்பும் தனித்தன்மையும் கொண்டதாக உள்ளது.

திருப்பாணாழ்வார் உறையூரில் செந்நெற்பயிரில் அவதரித்தார். பிறவாது பிறந்த அக்குழந்தையை பஞ்சமர் சாதியில் பிறந்த பாணர் ஒருவர் எடுத்து வளர்த்தார். பாணர் வளர்த்ததால் திருபாணாழ்வார் எனப் பெயர் பெற்றார்.

திருப்பாணாழ்வார் அரங்கநாதர் மேல் பாடல்கள் பாடிக் கொண்டு தொண்டு செய்யும் எண்ணத்துடன், தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தவராதலால் ஆற்றைத்தாண்டித் திருவரங்கத்திற்குள் செல்லாமல் காவிரியாற்றின் தென் கரையில் நின்று கொண்டே அரங்கன் கோயிலை நோக்கித் தொழுது கொண்டே யாழ் வாசித்துப் பாடி மகிழ்ந்தார். நாள் தோறும் அவர் திருவரங்கனை நோக்கி, மெய் மறந்து பாடிக் கொண்டிருந்தார். ஒருநாள் திருவரங்கநாதனை ஆராதிப்பவரான உலோக சங்கர முனிவர், காவிரியில் நீராடிவிட்டு, திருமண் அணிந்து கொண்டு, துளவமாலை, தாமரை மணி மாலைகள் அணிந்து கொண்டு, திருவரங்கநாதன் திருமஞ்சனத்திற்கு நீர் கொண்டு செல்லக் குடத்தைக் கையிலேந்திக் கொண்டு வந்த போது, திருப்பாணரை எதிரில் கண்டு கை தட்டிக் கூவி அப்பாற்செல் என்று சாதியைக் குறிப்பிட்டு சத்தம் கொடுத்தார். திருப்பாணர் மெய்மறந்து நின்று பாடிக் கொண்டிருந்தமையால் முனிவர் கூறியதை கவனிக்கவில்லை. முனிவர் கோபங்கொண்டு ஒரு கல்லை எடுத்துப் பாணர் மீது எரிந்தார். கல் பாணருடைய நெற்றியில் பட்டு காயமடைந்து ரத்தம் கசியத் தொடங்கியது. அப்போது பாணர் உணர்வு பெற்று விழித்தபோது முனிவர் எதிரில் நிற்பதைக் கண்டு பதைத்து அவ்விடத்தை விட்டு அகன்று சென்று விட்டார்.

உலோக சாரங்க முனிவர் குடத்தில் நீர் எடுத்துக் கொண்டு கோவிலுக்குள் சென்றபோது அரங்கநாதன் நெற்றியில் காயமுற்று இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. காரணம் அறியாமல் முனிவரும் ஆர்ச்சகர்களும் வருந்தினர். அரசனிடம் முறையிட்டனர். விசாரணை நடத்தியும் விடை கிடைக்கவில்லை. அந்நாளில் இரவில் உலோக

சங்கரருடைய கனவில் அரங்கநாதர் தோன்றி திருப்பாணரை இழி குலத்தவர் எனக் கருதாமல் உம்முடைய தோள் மீது அமரச் செய்து என் முன்பாகச் சந்நிதிக்குள் கொண்டு வரும் படி கூறினார்.

முனிவர் கண் விழித்துக் கனவை நினைத்து, கடவுளின் கட்டளையை நிறைவேற்றக் காவிரியின் தென் கரைக்கு வந்து, திருப்பாணாழ்வாரைக் கண்டு அவரைக் கோவிலுக்குள் வரும்படி அழைத்தார். திருப்பாணாழ்வாரோ, நான் நீச குலத்தில் வளர்ந்தவனாகையால் கோவிலுக்குள் வர இயலாது என்று கூற, முனிவரும் அர்ச்சகர்களும் அவரைத் தொட்டுத் தூக்கி முனிவரின் தோள்களில் அமரச் செய்து, கோயிலுக்குள் கொண்டு சென்று அரங்கநாதன் முன் நிறுத்தினர். அரங்கநாதன் நெற்றியில் இருந்த காயம் மறைந்து விட்டது. இவ்வாறு சிறப்பான முறையில் அரங்கனே அருள் கொண்டு பாணரின் ஆலயப் பிரவேசம் நடை பெற்றது. இந்த நிகழ்ச்சி வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும்.

திருப்பாணர் அரங்கனை உச்சி முதல் உள்ளங்கால் வரை கண்டு களித்து பாட்டுக்கள் பாடி திருபாணாழ்வார் என்று பெயர் பெற்று விளங்கினார் என்பது ஆழ்வார்களின் வரலாற்றுச் செய்தியாகும்.

திருப்பாணாழ்வார், யாழ் மீட்டி, பண் இசைத்து அழகிய பத்து பாடல்கள் பாடியுள்ளார். அவை நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தின் பகுதியாக உள்ளது.

“அமலனாதிபிரான் அடியார்க்
கென்னை ஆட்படுத்த
விமலன், விண்ணவர் கோன் விரை
யார் பொழில் வேங்கடவன்

நிமலன், நின்மலன் நீதிவானவன்
நீள்மதில் அரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என் கண்ணில்
உள்ளன வொக்கின்றதே!"

என்றும்,

" ஆலமாமரத்தினிலை மேல்ஒரு பாலகனாய்
ஞாலமேழும் உண்டான் அரங்கத்
தரவின் அணையான்,
கோலமாமணி யாரம் முத்துத்தாமமும்
முடிவில்லதோர் எழில்
நீலமேனியையோ, நிறைகொண்டதென்
நெஞ்சினையோ "

என்றும்,

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோனணியரங்கன் என் அமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே"

என்றும் அமைந்துள்ள அருமையான தேன்சுவைப் பாடல்கள் அதன் பகுதியாகும். திருப்பாணாழ்வாரின் பத்து பாடல்களும் வைணவப் பெருமக்களால் விரும்பிப் பாடப்படுபவைகளாகும்.

தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியுள்ள திருமாலைப் பாசுரங்கள் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களுள் முக்கியமான ஒரு பகுதியாகும்.

நாலாயிரம் பாசுரங்களைப் பாட முடியாவிட்டாலும் திருமாலையாகிய நாற்பத்தைந்து பாசுரங்களைப் பாடினால், அது நாலாயிரம் பாசுரங்களைப் பாடியதற்கு ஈடாகும் என்பது வைணவப் பெருமக்களின் நம்பிக்கை.

தொண்டரடிப் பொடியார் பிராமண குலத்தில் பிறந்தவராயினும், திருமால் அடியார்கள் எக்குலத்தவராயினும் அவர்கள் நம் குலத்தோரே என்றும், அதே சமயம் சாதி அந்தணர்களாயினும் அரங்கனைப் பழித்தால் அவர்கள்தான் புலையராகும் என்று பாடினார்.

"பழுதிலா ஒழுகலாற்றுப்
பல சதுப்பேதிமார்கள்
இழிகுலத்தவர்களேனும்
எம்மடியார்களாகில்
தொழுமினீர் கொடுமின் கொள்மின்
என்று நின்னோடுமொக்க
வழிபட அருளினாய் போன்
மதிள்திருவரங்கத்தானே"

என்றும்,

"அமரவோ ரங்கமாறும்
வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவராய
சாதி அந்தணர்களேனும்
நுமர்களைப் பழிப்பாராகில்
நொடிப்பதோரளவில், ஆங்கே

அவர்கள்தாம் புலையர் போலும்,

அரங்காமா நகருளானே”

என்றும் தெளிவான அழகு தமிழில் இனிமையாகப் பாடியுள்ளார்.

கண்ணபிரான், “மனிதருள் சாதி வேற்றுமையும் அறிவு வேற்றுமையும் பார்க்கக் கூடாது என்பது மட்டுமன்றி எல்லா உயிர்களுக் கிடையிலும் வேற்றுமை பார்க்கலாகாது” என்பதை வலியுறுத்திக் கூறுவதைப் பாரதி எடுத்துக் கூறியுள்ளதை மீண்டும் மீண்டும் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில் பாடியுள்ள திருவரங்கனைப் பற்றிய பாசுரங்களில், ஏழை ஏதலன் என்று தொடங்கி, துளங்கு நீண்முடி என்று தொடங்கும் ஒன்பது பாடல்களிலும், அரங்கன், சாதி வேற்றுமையும் உயிரின வேற்றுமையும் பாராமல் அனைவருக்கும் அருள் புரிந்துள்ளதை மிகவும் அற்புதமாகப் பாடியிருப்பதைக் காண்கிறோம்.

குகனைத் தோழமை கொண்டவன் என்றும், வானரத்தைத் துணையாகக் கொண்டு, அவர்களுடன் சேர்ந்து உணவு உண்டவன் என்றும், கஜேந்திரனைக் காப்பாற்றியவன் என்றும், சுமுகன் என்னும் நாக குமாரனைக் காத்தவன் என்றும் கோவிந்தசாமி என்னும் அந்தணனையும் மார்க்கண்டேயனையும், மற்றும் சாந்தீபினி வைதிகன், தொண்டை மன்னன் ஆகியோருக்கும் எந்த விதமான வேற்றுமையும் பாராட்டாமல் அருள்புரிந்தாய் என்றும் ஆழ்வார் அருமையாகப் பாடுகிறார்.

“ஏழை ஏதலன் கீழ் மகன் என்னா

திரங்கி மற்றவர்க்கின்னருள் சுரந்து

மாழைமான் மட நோக்கியுன் தோழி

உம்பி எம்பி என்றொழிந்திலை, உகந்து

தோழன் நீயெனக்கிங்கொழி என்ற
சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட
ஆழ்வண்ண நின் அடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே"

என்பது ஆழ்வாரின் முதல் பாசுரம்.

குகனிடத்தில் எந்தவிதமான சாதிப்பாகுபாடும் காட்டாமல் அவனைத் தன் சகோதரன் எனத்தழுவி, சீதையைக் காட்டி, இவள் உன் கொழுந்தி என்றும், இலக்குவனைக் காட்டி இவன் உன் தம்பி என்றும் கூறியதை நினைவுபடுத்தி அதே போல் என்னையும் நீ ஆட்கொள்வாயாக என்று ஆழ்வார் மனமுருகிப் பாடுகிறார்.

" வாதமா மகன்மர்க்கடம் விலங்கு
மற்றோர் சாதியென் றொழிந்திலை உகந்து,
காதல் ஆதரம் கடலினும் பெருகச்
செய்த தகவினுக்கில்லை கைம்மாறென்று
கோதில் வாய்மையினாயொடு முடனே
உண்பன் நான் என்ற ஒண்பொருள் எனக்கும்
ஆதல் வேண்டுமென்றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மாளே!

என்று ஆழ்வார்ப் பாடுகிறார்.

வாயுவின் புத்திரனான அனுமனை வேறு சாதி என வேறுபாடு காட்டாமல் அன்புப் பெருக்குடன் கட்டித் தழுவிக் கொண்டு உனக்குக் கைம்மாறு என்ன செய்வேன் எனக்கூறி அனுமனைத் தன்னுடன் இணைத்துக் கொண்டதைப் போல என்னையும்

உன்னுடன் இணைத்துக் கொள்ள அருள்புரிய வேண்டும் என்று அரங்கனை ஆழ்வார் வேண்டுகிறார்.

"குகனோடு ஐவர் ஆனோம் முன்பு
பின்குன்று சூழ்வான்
மகனோடு அறுவர் ஆனோம் எம்உழை
அன்பில் வந்த
அகன் அமர் காதல் ஐய, நின்னொடும்
எழுவர் ஆனோம்,
புகல் அரும்கானம் தந்து புதல்வரால்
பொலிந்தான்நுந்தை"

என்று இராமபிரான் குகனையும் சுக்கிரீவனையும் வீடணனையும் குல வேற்றுமை பாராட்டாமல் உடன்பிறந்தோராகப் போற்றியது இங்கு நினைவு கூறத்தக்கது.

அத்துடன் அனுமனை இராமன் கட்டித்தழுவி,

மாருதி தன்னை ஐயன்மகிந்து இனிது
அருளின் நோக்கி
ஆர் உதவிடுதற்கு வுத்தார் நீ அலால்
அன்று செய்த
பேர் உதவிக்குயான் செய்செயல் பிறிது
இல்லை பைப்பூண்
போர் உதவிய திண்தோளாய் பொரு
ந்துறப்புல்லு கென்றான்"

என்னும் கம்பனுடைய சிறந்த கவிதை வரிகளும் இங்கு நினைவு கூறத்தக்கதாகும்.

ஆழ்வார்களில் போற்றுதற்குரிய நம்மாழ்வார், நாலாயிரம் பாடல்களில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார். அவர் திருவாய் மொழியில் பயிலும் சுடரொளி எனத் தொடங்கும் பாடல்களில்,

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழ்கழிந்து, எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்
டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல்
மணிவண்ணற் காளென்றுள்
கலந்தார், அடியார் தம்மடி
யார் எம் அடிகளே,"

என்றும் பாடுகிறார்.

நான்கு குலங்களிலும் தாழ்த்தப்பட்டு, மிகவும் இழிவாகக் கருதப்பட்டு, எத்தகைய நலன்களும் இல்லாமல் மனித வாழ்க்கையில் கடைசியில் வாழும் சண்டாளர்களுக்கும் சண்டாளர்களாக இருப்பினும், அவர்கள், வலப்புறத்தில் சக்கரத்தைத் தாங்கி நிற்கும் மணிவண்ணனான திருமாலின் அடியார்களாகில் அவர்களுக்கு அடியார்களாக இருப்போம் என்று சாதி வேறுபாடுகளை மறுத்து, திருமால் அடியார்கள் அனைவரும் ஒன்று என்னும் கருத்தை வலியுறுத்தி, நம்மாழ்வார் மிகவும் அருமையானதொரு பாடலைப் பாடியுள்ளார்.

திருமங்கையாழ்வார் அருளியுள்ள "திருவெழுகூற்றிருக்கை" என்னும் பிரபந்தப் பாசுரங்களில்,

"நெறிமுறை நால்வகை வருணமும் ஆயினை
மேதகு ஐம்பெரும் பூதமும் நீயே,

அறுபதம் முரலும் கூந்தல் காரணம்
ஏழ்விடையடங்கச் செற்றனை அறுவகைச்
சமயமும் அறிவரு நிலையினை ஐம்பால்
ஓதியை ஆகத்திருத்தினை, அறமுதல்
நான்கவையாய் மூர்த்தி மூன்றாய்
இருவகைப் பயனாய் ஒன்றாய் விரிந்து நின்றனை"

என்று குறிப்பிடுகிறார்.

நாலுவகை வருணங்களும், ஐம்பெரும் பூதங்களும், அறுவகைச் சமயங்களும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்காயும் மூன்று மூர்த்திகளாயும், இருவகைப் பயன்களாகவும், அனைத்தும் ஒன்றாக நின்றாய் என்று திருமாலைக் குறிப்பிடுகிறார். இதில் நால்வகை வருணங்களும் ஒன்று என்னும் கருத்தை ஆழ்வார் வலியுறுத்திக் கூறியுள்ளதைக் காண்கிறோம்.

சாதி வேற்றுமைகளையும் சாதிப் பாகுபாடுகளையும் பாராமல் அனைவரும் ஒன்று என்னும் கொள்கைகளில் ஆழ்வார்கள் அழுத்தமாக நின்றார் என்பதைக் காண்கிறோம்.

மகாகவி பாரதி சாதிப் பாகுபாடுகளையும், வேறுபாடுகளையும் சாதி அமைப்பையும் கடுமையாகச் சாடினார். நாட்டின் ஒற்றுமையை வலியுறுத்தினார் வந்தேமாதரம் பாடலில்,

"சாதிமதங்களைப் பாரோம் – உயர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தின ராயின்
வேதியராயினும் ஒன்றே – அன்றி
வேறு குலத்தின ராயினும் ஒன்றே"

என்று எடுத்த எடுப்பிலேயே குறிப்பிடுகிறார்.

"பாரத தேசம்" என்னும் பாடலில்,

"சாதி இரண்டொழிய வேறில்லை என்றே
தமிழ் மகள் சொல்லிய சொல் அமிழ்த மென்போம்
நீதி நெறியினின்று பிறர்க்குதவும்
நேர்மையர் மேலவர், கீழவர் மற்றோர்"

என்று ஔவையின் தொடர்ச்சியாகப் பாடுகிறார்.

"சாதி இரண்டொழிய வேறில்லை" என்பது ஔவையார் கூறிய வாசகம். அதையே பாரதி "தமிழ் மகள் சொல்லிய சொல்" என்று குறிப்பிடுகிறார். அந்தச் சொல்லை அமிழ்தம் என்று கூறுகிறார். நேர்மையானவர்கள் மேலோர், மற்றவர்கள் எல்லாம் கீழோர் என்று ஔவையின் வழியில் தொடர்கிறார்.

"சாதி நூறு செல்லுவாய் போ, போ, போ" என்று போகின்ற பாரதத்தை விரட்டுகிறார். "எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஓரினம், எல்லோரும் இந்திய மக்கள்" என்று பாரத சமுதாயத்தைப் பற்றி மிகவும் உயர்வாகக் குறிப்பிடுகிறார்.

இந்திய தேசீய விடுதலை இயக்கத்தின் கோரிக்கையாகப் பரிபூரண சுதந்திரம் என்பது, 1920 ம் ஆண்டுகளில் இந்திய தேசீயக் காங்கிரஸில் ஒரு விவாதப் பொருளாக இருந்தது. வீர சவர்க்கார், சிங்காரவேல் செட்டியார் முதலியவர்கள் பரிபூரண சுதந்திரம் என்னும் தீர்மானங்களை முன் வைத்தார்கள். மகாத்மா காந்தியும் அவருடைய ஆதரவாளர்களும் பரிபூரண சுதந்திரம் என்னும் தீர்மானத்தை எதிர்த்தார்கள். அதாவது மாட்சிமை பொருந்திய மன்னர்பிரானின் ஆட்சியிலிருந்து பிரிந்து செல்வது என்பதை எதிர்த்து, இந்திய நாட்டில் ஆங்கிலேயர்களுக்கு ஈடாக இந்தியர்களுக்கு சம உரிமை வேண்டும் என்றே கூறிவந்தார்கள். அந்த நேரத்தில் முழுமையான

விடுதலை, (பரிபூரண சுதந்திரம்) என்னும் கருத்தை முன்வைத்து பாரதியார் மிகவும் அருமையானதொரு பாடலைப் பாடினார்.

விடுதலை விடுதலை விடுதலை
பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை
பரவரோடு குறவருக்கும்
மறவருக்கும் விடுதலை

என்றும்,

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவனுமில்லை சாதியில்
இழிவு கொண்ட மனிதரென்பது
இந்தியாவில் இல்லையே"

என்றும் மிகவும் தனிச்சிறப்பான வரிகளைக் கொண்டப் பாடலைப் பாடினார்.

அரசியல் அடிமைத்தனத்திலிருந்தும் அன்னிய ஆட்சியிலிருந்தும், பொருளாதார ஏற்றதாழ்வுகளிலிருந்தும், ஏழ்மை வறுமை முதலிய கொடுமைகளிலிருந்தும், சமுதாய வேறுபாடுகள் பாகுபாடுகளிலிருந்தும் கொடுமைகளிலிருந்தும், முழுமையான சமூக நீதி கிடைக்கவும் மற்றும் அறியாமையிலிருந்தும் கல்லாமையிலிருந்தும் முழுமையான விடுதலை அதுவே பரிபூரண சுதந்திரம் என்னும் கருத்தை மிகவும் துல்லியமாகப் பாரதி தனது பாடல்களில் முன் வைத்தார்.

"நாலுவகுப்பும் இங்கு ஒன்றே – இந்த
நான்கினில் ஒன்று குறைந்தால்

வேலை தவறிச் சிதைந்தே – செத்து
வீழ்ந்திடும் மானிட ஜாதி"

என்றும்,

" சாதிப் பிரிவுகள் சொல்லி – அதில்
தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்
நீதிப் பிரிவுகள் செய்வார் – அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார், "

"சாதிக் கொடுமைகள் வேண்டாம் – அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்
ஆதரவுற்றிங்கு வாழ்வோம் – தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்"

என்றும் ஊருக்கு நல்லது சொல்வேன் என்று தொடங்கி முரசு கொட்டி பாரதி பாடுகிறார்.

" அறிவை வளர்த்திட வேண்டும் – மக்கள்
அத்தனை பேருக்கும் ஒன்றாய்
சிறியரை மேம்படச் செய்தால் – பின்பு
தெய்வம் எல்லோரையும் வாழ்த்தும்"

என்று சமூக நீதிக் கருத்தை பாரதி மிகவும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார்.

பாப்பாப் பாட்டில் பாரதி இன்னும் ஒருபடி மேலே போய்:

" சாதிகள் இல்லையடி பாப்பா – குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்

நீதி, உயர்ந்த மதி, கல்வி – அன்பு

நிறைய உடையவர்கள் மேலோர் ”

என்று எதிர்காலத்திற்குச் சரியான வழியைக் காட்டுகிறார்.

சாதி அமைப்புகளும் அதில் வேறுபாடுகளும் பாகுபாடுகளும் கொடுமைகளும் எப்போது தோன்றியதோ, அப்போதிருந்தே அவைகளுக்கு எதிர்ப்பும் எதிர்க் கிளர்ச்சிகளும் தோன்றி –யிருக்கின்றன. சாதிப் பாகுபாடுகளுக்கு எதிராக, உயர்வு தாழ்வுக் கொள்கைகளுக்கு எதிராகக் கடுமையான சண்டைகளும் மோதல்களும் ஏற்பட்டிருக்கின்றன. பின்னர் அப்பிரச்சனைகளில் சமரசங்களும் உடன்பாடுகளும் ஏற்பட்டிருக்கின்றன. இதற்கான பல சான்றுகளையும் நமது இலக்கியங்களிலும் வரலாற்று நிகழ்ச்சிகளிலும் நாம் காணலாம்.

விஸ்வாமித்திரருக்கும் வசிட்டருக்கும், ஏற்பட்ட மோதல் சத்திரியர்களுக்கும் பிராமணர்களுக்கும் இடையில் ஏற்பட்ட மோதல் என்பது சரித்திரப் பிரசித்தம். அந்த மோதலின் இறுதியில் சத்திரியர்களின் வலுவை அங்கீகரித்து “வாராய் பிரம்மரிஷி ” என்று வசிட்டர் விசுவாமித்திரரை வரவேற்றும் இருவருக்குமிடையில் சமரசமும் உடன்பாடும் ஏற்படுகிறது என்பதை நமது இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

அதுபோல பரசுராமனுக்கும் இராமனுக்கும் ஏற்பட்ட சந்திப்பு ஒரு யுக சந்தியாகும். மிதிலையில் சிவதனுசுவை முறித்து, சீதையை மணம் முடித்து, இராமன் தனது தந்தையுடனும் பரிவாரங்களுடனும், அயோத்தி திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். பரசுராமன் எதிர் வந்தான். உன் வலுவைக் காண வேண்டும் என்று இராமனிடம் சவால் விடுகிறான்.

தசரதன் பயந்து நடுங்கி, புவனம் முழுவதும் வென்றொரு

முனிவற்கு ஈந்தாய் அருள் புரிவாய், சிவனும் அரி அயனும் அலர் சிறுமானிடர் பொருளோ இவனும் (இராமனும்) எனது உயிரும் உனது அபயம் என்று பரசுராமனிடம் சரணடைந்தான்.

அப்போது பரசுராமன் "உலகெலாம் முனிவற்கு ஈந்தேன், உறுபகை ஒடுக்கிப் போந்தேன், அலகில் மாதவங்கள் செய்து ஒர் அருவரை இருந்தேன்" அப்போது நீ மிதிலையில் சிவதனுசை ஒடித்த சப்தத்தைக் கேட்டேன். அது ஏற்கனவே முறிந்தவில், இதோ என்னிடம் உள்ளது விஷ்ணுதனுசு இதை எடுபார்க்கலாம்" என்று இராமனிடம் சவால்விட்டான். பரசுராமன் பிராமணன். இராமன் சத்திரியன், இராமன் புன்முருவல் செய்து, "நாரணன் வலியின் ஆண்ட வென்றிவில் தருக" என அவ்வில்லை வாங்கி வளைத்தான் சவால் விட்ட பரசுராமனிடம், "பூதலத்தரசையெல்லாம் பொன்றுவித்தனை, என்றாலும், வேதவித்தான மேலோன்மைந்தன் நீ, விரதம் பூண்டவனும் கூட, ஆதலின் உன்னைக் கொல்லல் ஆகாது" ஆயினும் "எனது அம்பிற்கு இலக்கு கூறுக எனக்கேட்டு" எய்த அம்பு இடை பழுது எய்திடாமல் பரசுராமனுடைய தவம் அனைத்தையும் குறியாகக் கொண்டு வாரிக் கொண்டு போய் மீண்டது. பரசுராமன் வலுவிழந்து நின்றான். இராமன் வெற்றி பெற்றான்.

" எண்ணிய பொருளெல்லாம் இனிது முற்றுக, புண்ணிய விடை" என்று கூறி பரசுராமன் இராமனிடம் விடைபெற்றுக் கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றான். இது கம்பர் தரும் அருமையான காட்சியாகும்.

இத்தகைய மோதல்கள் பலவற்றை இந்திய வரலாற்றில் இதிகாசக் கதைகளில் பலவற்றைக் காணலாம். மகாபாரதக் கதையில் கர்ணன் கதை முழுவதுமே சாதிக் கொடுமையை எதிர்த்து நடத்திய போராட்டமேயாகும்.

புத்தரும் மகாவீரரும் சத்திரிய குலத்தில் அரச குலத்தில் பிறந்தவர்கள், வேதங்கள் மற்றும் உபநிடதங்களின் கருத்துக்கள் பலவற்றிற்கும் எதிர்ப்புதெறிவித்து அவர்கள் புத்த சமணசமயங்களைத் தோற்றுவித்தார்கள். அந்த சமயங்கள் பொதுவாக சர்வ ஜன சமத்துவக் கருத்துக்களையும் ஜீவகாருண்யக் கருத்துக்களையும் நாட்டில் வலுவாகப் பரப்பின. இவ்விரு சமயங்களும் இந்திய நாடு முழுவதிலும் பரவின. இவை சாதி அமைப்புகளையும் வலுவாகத் தாக்கியது. அறப்பள்ளிகளும், சங்கங்களும் தோன்றின. இந்தப் பேரியக்கத்தையும் இந்திய வரலாற்றில் சந்தித்தோம்.

புத்த சமணக் கருத்துக்களுக்கும் கொள்கைகளுக்கும் வைசியர்கள் வணிகர்கள் நல்ல ஆதரவு கொடுத்தனர். அதனால் அக்காலத்தில் தோன்றிய பஞ்ச காவியங்கள், தமிழில் ஐம்பெரும் காப்பியங்கள் முதலியவற்றில் முந்திய கால இலக்கியங்களைப் போலல்லாமல் வணிகர்களே காப்பியத் தலைவர்களாக வருவதைக் காண முடிகிறது. இந்த இலக்கியங்களில் அரசர்களுக்கும் வணிகர்களுக்கும் இடையிலான முரண்பாடுகளை இலை மறைவு காயாகக் காணமுடிகிறது.

பின்னர் தோன்றிய பக்தி இலக்கியங்கள் தமிழகத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் சாதி சமத்துவக் கருத்துக்களை வலுவாக முன் வைத்தனர். குறிப்பாக அனைத்து சாதிகளின் ஒற்றுமை என்னும் சமத்துவக் கருத்துக்களை முன் வைத்தனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பிறப்பால் பல சாதிகளைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் வழிபாட்டாலும் பழக்க வழக்கங்களாலும் அனைத்து சாதிகளையும் ஒன்றாகவே கருதினார்கள். ஆண்டவன் படைப்பில் அனைவரும் ஒன்று என்னும் கருத்துக்களையே வலியுறுத்திக் கூறினார்கள்.

பின்னர் இஸ்லாமிய சமயம், கிறிஸ்தவ சமயங்களின் தாக்கங்களும் ஆக்கிரமிப்புகளும், மதமாற்றங்களும் இந்திய சமுதாயத்தில் ஏற்பட்டன. நாடு அடிமைப்பட்ட போது நமது சமுதாயத்தில் வேரூன்றிப் போயிருந்த சாதி வேறுபாடுகளும் பாகுபாடுகளும் பெரும்அளவில் நமது ஒற்றுமையையும் சமுதாய வளர்ச்சியையும் பாதித்தது. இக்காலத்தில் பல சமூக சீர்திருத்த வாதிகளும் இந்திய சமுதாயத்தில் தோன்றி பழய பல உழுத்துப் போன பழக்க வழங்கங்களைச் சாடினர்.

“கண்மூடிப் பழக்கங்கள் எல்லாம் மண் மூடிப் போகட்டும்” என்றும் “கருணையில்லாத ஆட்சி கடுகி ஒழியட்டும்” என்றும் “ஒன்றே குலம் ஒருவனே தேவன்” என்றும் வள்ளலார் தமிழகத்தில் வலுவான சமூக சீர்திருத்தக் கருத்துக்களை நிறுவினர். விவேகானந்தர் மிகச் சிறந்த பணிகளை ஆற்றினார்.

விடுதலை இயக்கம் வீறு கொண்டு எழுந்த காலத்தில் பரிபூரண சுதந்திரம் என்னும் குறிக்கோளும் தேசீய விடுதலை இயக்கம் என்னும் புதிய ஆதர்சமும் பாரதியை முன் நிறுத்தியது. மகாகவி பாரதி நமது நீண்ட உயர்வான பாரம்பரியத்தில், சீரிய சிறந்த மரபுகளின் தொடர்ச்சியாக சாதீயக் கொடுமைகளை எதிர்த்தும், தேசீய ஒற்றுமையை வலியுறுத்தியும் முழுமையான விடுதலை லட்சியத்தை முன் வைத்தும் பல சிறந்த கருத்துக்களையும் பாடல்களில் உறுதிபட முன் வைத்தார்.

அந்தவகையிலும் பக்தி இயக்கத்தையும், ஆழ்வார்கள், நாயன்மார்களையும் பின்னர் வந்த சமூக சீர்திருத்தவாதிகளையும் தொடர்ந்து பாரதி பலவலுவான சமூக சீர்திருத்தக் கருத்துக்களை முன் வைத்து சாதிக் கொடுமைகளை எதிர்த்தும் சமூக சமத்துவக் கருத்துக்களை முன் வைத்திருப்பதைக் காண்கிறோம்.

நீண்ட நெடும் போராட்டங்களின் வளர்ச்சியாக வெற்றியாக நாடு விடுதலை பெற்றது. விடுதலை பெற்றதும் அரசியல் சாசனம் உருவாக்கப் பட்டுள்ளது. நமது அரசியல் சாசனத்தின் படியும், இதர பல சட்டங்களின் படியும் இந்திய மக்கள் அனைவரும் சாதி, மத,இன, மொழி, பால் வேறுபாடியின்றி சமம் என்று நிலை பெற்றிருக்கிறது. சட்டப்படி சமமானாலும், நடைமுறை வாழ்க்கையில் பல பிரச்னைகள் நீடிக்கின்றன. நமது மக்களின் உணர்வு நிலையை உயர்ந்த மட்டத்திற்கு உயர்த்த வேண்டும். அந்த மேலான பணிகளிலும் நாம் வெற்றி வெறுவோம். ஆழ்வார்கள் நாமம் வாழ்க. பாரதியின் வழியில் நாம் முன் செல்வோம்.

## 5. நாடும் மக்களும் நலம் பெற

ஆழ்வார்கள் தலை சிறந்த மனிதர்களாக மனிதப் பண்புகள் நிறைந்தவர்களாக, மனிதாபிமானம் நிறைந்தவர்களாக வாழ்ந்தார்கள். அவர்கள் அன்பும், கருணையும், பண்பும், பக்தியும், அபிமானமும், சீலமும் வாழ்க்கைக் கட்டுப்பாடுகளும், நெறிமுறைகளும், ஒழுக்கமும், உறுதிப்பாடும், வைராக்கியமும், பற்றும், பாசமும் நிறைந்தவர்களாக விளங்கினர். மக்கள் மீது அதிகமான அன்பும், பாசமும் கொண்டிருந்தனர். திருமாலிடம் அளவு கடந்த பக்தி செலுத்தி பிறவித்துன்பத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளவும், உலக மக்களுக்கு வாழ்க்கைத் துன்பங்கள் நீங்கவும் விரும்பினர். அதே சமயத்தில் தங்களுக்கு ஏற்படும் இன்பம் உலக மக்கள் அனைவருக்கும் கிடைக்க வேண்டுமென்று விரும்பினர். ஆழ்வார்கள் மனித வாழ்க்கையை நன்கு அனுபவித்தனர். எல்லோருக்கும் இன்பகரமான நல்வாழ்க்கை அமைய வேண்டும் என்று விரும்பினார்கள்.

"நெய்யிடை நல்லதோர் சோறும்
நியதமும் அத்தாணிச் சேவகமும்
கையடைக்காயும் கழுத்துக்குப்
பூணொடு காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமும்
தந்தென்னை வெள்ளுயிராக்க வல்ல
மையுடை நாகப்பகைக் கொடியானு
க்குப் பல்லாண்டு கூறுதுமே"

என்று பெரியாழ்வார் நயம்படப் பாடியுள்ளார்.

"அன்னமும் மீனருவுமாளரியும் குறளும்
ஆமையுமானவனே! ஆயகர்கள் நாயகனே!
என் அவலம் களைவாய்! ஆடுகசெங்கீரை
எழுலகும் முடையாய்! ஆடுக ஆடுக என்று,
"அன்நடை மடவாள சோதையுகந்த பரிசு
ஆனபுகழ்ப் புதுவைப்பட்டனுரைத்த தமிழ்,
இன்னிசை மாலை களிப்பத்தும் வல்லார் உலகில்
எண்டிசையும் புகழ்மிக்கு இன்பம் எய்துவரே!"

என்று பெரியாழ்வார் பாடுகிறார்.

"உய்ய உலகு படைத்துண்ட மணி வயிறா!" என்று தொடங்கும் பத்து பாடல்களையும் பாடுபவர்கள் எட்டு திசைகளிலும் புகழும் மிக்க இன்பமும் எய்தி மகிழ்வார்கள் எனப் பாடுகிறார்.

சுற்றிலும் ஏரிகளும், குளங்களும், கண்மாய்களும் நீர் நிலைகளும் வயல் வெளிகளும் நிறைந்த திருவில்லிபுத்தூரில் விட்டுசித்தன் என்னும் பெரியாழ்வார் கண்டெடுத்த பாவை கோதை நாச்சியார் என்னும் ஆண்டாள் உலக நன்மை கருதி கண்ணனைப் பாடி மார்கழி நோன்பிருந்து பாடிய பாடல்கள் திருப்பாவை. சங்கத் தமிழ் மாலையாகிய இந்த முப்பது பாடல்களும் தீஞ்சுவைத் தமிழில் அமைந்துள்ளன. அப்பாடல்களில் ஒன்று "உத்தமன் பேர்பாடினால் நாட்டில் உள்ள தீங்குகள் நீங்கும். மாதம் மும்மாரி மழை பொழியும். வயல் வெளிகள் எல்லாம் நீர் நிறைந்து செந்நெல் விளையும். பெரும் வள்ளல்களைப் போன்ற பசுக்கள் எல்லாம் குடம் குடமாய் பால் சுரக்கும். உலகெல்லாம் நீங்காத வற்றாத செல்வம் பெருகி வளமாகும்" என்று ஆண்டாள் பாடுகிறார்.

"ஓங்கியுலகளந்த உத்தமன் பேர் பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும் மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண் படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை பற்றி
வாங்கக் குடை நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்,
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்"

என்று கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழும் ஊர் என்று தன் பிறப்பால் ஊருக்குப் பெருமை சேர்த்த ஆண்டாள் பாடியுள்ளார். மேலும்,

" ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்த வளர
தரிக்கிலானாகி த்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே உன்னை
அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில்
திருத்தக்கச் செல்வமும் சேவகமும் யாம் பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"

எல்லாக் கஷ்டங்களும் தீர்ந்து மிகிழ்ச்சியடைவோம் என்று நெடுமாலை நினைத்துப் பாடுகிறார்.

குலசேகராழ்வார் பாடியது பெருமாள் திருமொழியாகும். அவர் தனது அரச பதவியையும் துறந்து விட்டு திருமால் சேவைக்கு

வந்தவர். வானகமும், அமரர்களும் மண்ணும் மண்ணில் வாழும் மனிதர்களும் உய்ய வேண்டும். நல்வாழ்வு பெற வேண்டும் என்றும் துன்ப துயரங்கள் அகல வேண்டும் என்றும் எந்தவிதமான சோர்வும் இல்லாமல் சுகம் வளர வேண்டும் என்றெல்லாம் பாடுகிறார்.

"வன்பெருவானகமுய்ய அமரர் உய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிசர் உய்ய
துன்பமிகு துயரகல அயர் வொன்றில்லாச்
சுகம் வளர அக மகிழும் தொண்டர் வாழ
அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே யென்று கொலோவிருக்கு நாளே!"

என்று பாடுகிறார்.

திருமழிசைப்பிரான் பாடியுள்ள திருச்சந்த விருத்தத்தில் நன்றாகப் புரிந்து கொண்டு தெளிவாகத் தெரிந்து கொண்டு வாமனனை வணங்கினால் ஞானமும் செல்வமும் கிட்டும், தீவினைகள் நீங்கும் என்று கூறுகிறார். மனிதனுக்கு அறிவும் செல்வமும் கிட்ட வேண்டும் என்பது ஆழ்வாரின் வேண்டுதலாகும்.

அறிந்தறிந்து வாமனன்
அடியினை வணங்கினால்
செறிந்தெழுந்த ஞானமோடு
செல்வமும் சிறந்திடும்
மறிந்தெழுந்த தெண்டிரையுள்
மன்னுமாலை வாழ்த்தினால்

பறிந்தெழுந்து தீவினைகள்

பற்றறுதல் பான்மையே

என்று ஆழ்வார் பாடுகிறார்

உயிரும் உறக்கமும், உணர்வும், ஐம்புலனும் அதனால் அறியப்படும் அறிவுத்தெளிவும் வானோடு மண்ணும் கடலும் அவைகளின் பயனும் நானும் நீயும் எல்லாம் நீயே என்று பாடுகிறார் திருமழிசைப்பிரான். இது ஆழ்ந்த தத்துவக் கருத்துக்கள் நிறைந்ததாகும்.

ஊனின் மேய ஆவிநீ
உறக்கமோடு உணர்ச்சி நீ
ஆனில் மேய ஐந்தும் நீ
அவற்றுள் நின்ற தூய்மை நீ
வானினோடு மண்ணும் நீ
வளங் கடற்பயனும் நீ
யானும் நீய தன்றி எம்பி
ரானும் நீ இராமனே!

என்பது ஆழ்வாரின் பாசுர வரிகள்.

மனித வாழ்க்கையின் காலத்தைப் பொதுவாக நூறாண்டு காலம் என்று நூல்களெல்லாம் கூறுகின்றன. ஆயினும் நூறாண்டு காலம் வாழ்பவர்கள் ஒரு சிலரே. நூறாண்டு காலம் ஒருவர் வாழ்ந்து விட்டால் அது ஒரு முழு வாழ்க்கையாகக் கருதப் படுகிறது. அப்படி நூறாண்டு காலம் ஒருவர் வாழ்வு பெற்றாலும் அந்தக் கணக்குப் படி எடுத்துக் கொண்டாலும் அதில் பாதி காலம் உறங்கிக் போகிறோம். முதல் பதினைந்து ஆண்டுகள் பேதையாய் பாலகனாய்

கழிந்து விடுகிறது. மீதமுள்ள நாட்களில் பசி, பிணி, மூப்பு, துன்பங்கள் இல்லாமல் வாழ முடியவில்லை. எனவே எனக்கு இந்தப் பிறவி வேண்டாம் என்று ஆழ்வார் கூறுகிறார்.

தொண்டரடிப் பொடியாழ்வார் என்று அழைக்கப்படும் விப்ர நாராயணர் ஒரு நல்ல இன்பகரமான முழு வாழ்க்கையை வாழ்ந்து முடித்தவர் தான். ஆயினும் பல சோதனைகளுக்குட்பட்டு சிறை வாசமும் இருந்திருக்கிறார். கடைசியில் அரங்கனின் அருளைப் பெறுகிறார். தொண்டரடிப் பொடியார் சிறந்த கல்வியறிவும் ஆத்மஞானமும் வாழ்க்கை அனுபவமும் நிறைந்தவர். மனித வாழ்க்கை என்பது பேதமையின்றி, பசி, பிணி, மூப்பு, துன்ப துயரங்களின்றி நூறாண்டு காலம் நல்ல மகிழ்ச்சிகரமாக இன்பகரமாக வாழ வேண்டும். பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டும். இறுதியில் முக்தியும் பெற்று திருமாலிடம் சேர வேண்டும் என்பதே ஆழ்வாரின் நோக்கமாகும். அதனையே இப்பாடல் குறிக்கிறது.

வேத நூல் பிராயம் நூறு
    மனிசர்தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப் போகும்
    நின்றதில் பதினை ஆண்டு
பேதை பாலகனதாகும்
    பிணி பசி மூப்பு துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன்
    அரங்கா மா நகருளானே

என்று மெய் மறந்து அரங்கனை நினைந்து அடிப்பொடியார் உள்ளம் உருகிப் பாடுகிறார்.

திருமங்கையாழ்வார் மிகவும் சிறந்த புகழ் மிகுந்த ஆழ்வாராவார். அவருடைய வாழ்க்கை வேகமும் விறுவிறுப்பும் நிறைந்ததாகும். அவருடைய பாடல்களும் வேகமும் விறுவிறுப்பும், ஆழ்ந்த அனுபவ ஞானமும் நிறைந்ததாக இருக்கின்றன. அவர் நாலாயிரத்தில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார். பெரும்பாலான திவ்ய தேசங்களுக்குச் சென்று மங்கள சாசனம் செய்துள்ளார். திருவரங்கத்தில் பெரும் அளவில் திருப்பணிகள் செய்துள்ளார். அவருடைய வாடினேன் வாடி என்று தொடங்கும் பத்து பாடல்களும் முதன்மை பெற்றதாகும். நாராயணாவென்னும் நாமத்தின் உட் பொருளையும் அதன் பெரும் பயனையும் உணர்ந்து அவர் ,அப்பாடல்களை உயிர்த் துடிப்புடன் பாடுகிறார். இந்த நாராயன நாமத்தை உச்சரித்தால் துயர்கள் நீங்கும், நன்மைகள் பெருகும், என்று ஆழ்வார் பாடுகிறார். நாராயணா வென்னும் நாமத்தை உச்சரித்தால் இப்பிறப்பின் பெரும் துயர் தீரும். சேமம் சேரும், தீவினைகள் போகும் என்று கூறுகிறார்.

குலம் தரும் செல்வம் தந்திடும் துயரமெல்லாம் தீரும். நிலம் தரம் செய்யும், நீள் விசும்பருளும் அருளுடன் பெருநிலம் அளிக்கும் வலம் தரும், மற்றும் எல்லா வகை நல்லனவும் செய்யும். பெற்ற தாயைப் போல் நமக்கு அனைத்தையும் அளிக்கும். நலம் தரும் அச் சொல்லே நாராயணா வென்னும் நாமமாகும் என்று ஆழ்வார் உணர்ச்சி பொங்க அழுத்தமாகச் கூறுகிறார்.

குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீண் விசும் பருளும்
அருளோடு பெருநிலம் அளிக்கும்
வலம்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்

நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்

என்று திருமங்கையாழ்வார் பாடுகிறார்.

அட்ட புய கரத்தானைப் பாடும் போது,
கலைகளும் வேதமும் நீதி நூலும்
கற்பமும் சொற் பொருள் தானும் மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினால் அருள் செய்து நீண்ட
மலைகளும் மாமணியும் மலர் மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற,
அலைகடல் போன்றிவரார் கொல் என்ன
அட்டபுயகரத் தேனென்றாரே

என்று பாடுகிறார். ஆழ்ந்த பொருள் நிறைந்த இப்பாடல் மனித குலத்தை உய்விக்க வழி காட்டும் பாடலாகும்.

இன்னும் சடகோபனார் என்னும் நம்மாழ்வார் பாடுகிறார்.

கொன்று உயிர் உண்ணும் வியாதி
பகை பசி தீயன வெல்லாம்
நின்று இவ்வுலகில் கடிவான், நேமிப்பிரான்

என்று, உயிரைக் கொல்லும் வியாதி, பகை, பசி, முதலிய தீயனவெல்லாம் நீங்க வேண்டும் என்று ஆழ்வார் திருமாலை வேண்டுகிறார்.

நம்மாழ்வார் தனது ஆறாம் திருவாய் மொழியில் ஒப்பிலியப்பனைப் பற்றி மிகவும் அழகாகப் பாடியுள்ள பத்து

பாடல்களும் உலகின் அத்தனை நன்மை தீமைகளையும் அறிந்து அந்தத் திருவிண்ணகர் வாழ்வான் நம்மைக் காப்பான் என்று கூறுகிறார்.

நல் குரவும் செலவும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல் பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்
பல்வகையும் பரந்த பெருமாள் என்னை ஆழ்வானை

என்றும்

கண்ட வின்பம் துன்பம்,
கலக்கங்களும் தேற்றமுமாய்
தண்டமும் தண்மையும்
தழலும் நிழலுமாய்
கண்டு கோடற்கரிய
பெருமான் என்னை ஆள்வான்

என்றும்,

நகரமும் நாடுகளும் ஞானமும் மூடமுமாய்
நிகரில் சூழ் சுடராய் இருளாய்
நிலனாய், விசும்பாய்

என்றும்

புண்ணியம் பாவம் புணர்ச்சி
பிரிவு என்றி வையாய்
எண்ணமாய் மறப்பாய் உண்மையாய்
இன்மையாய் அல்லனாய்

எனவும்

கைத்தவம் செம்மை கருமை வெளு
மையுமாய்
மெய், பொய், இளமை, முதுமை புதுமை
பழமையுமாய்

என்றும்

மூவுலகங்களுமாய் அல்லனாய்
உகப்பாய் முனிவாய்
பூவில் வாழ் மகளாய்த் தவ வையாய்
ப்புகழாய்ப் பழியாய்

எனவும்,

பரஞ்சுடர் உடம்பாய்,
அழுக்குப் பதிந்த உடம்பாய்
கரந்தும் தோன்றியும் நின்றும்
கைதவங்கள் செய்தும் விண்ணோர்
சிரங்களால் வணங்கும்
திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

என்றும்

வன் சரண் சுரர்க்காய்,
அசுரர்க்கு வெங் கூற்றமுமாய்
தன் சரண் நிழற் கீ
ழுலகம் வைத்தும் வையாததும்

எனவும்

என்னப்பன் எனக்காய் இகுளாய்

என்னைப் பெற்ற வளாய்

பொன்னப்பன் மணியப்பன்

முத்தப்பன் என் அப்பனுமாய்

எனவும்

நிழல் வெயில், சிறுமை பெருமை

குறுமை, நெடுமையுமாய்

சுழல்வன நிற்பன மற்று

மாயவை அல்லனுமாய்

மழலைவாய் வண்டு வாழ்

திருவிண்ணகர் மன்னுபிரான்

என்றும் போற்றி ஆழ்வார் மனமுருகிப் பாடுகிறார்.

ஆழ்வார் கண்ணனுடன் இணைந்து ஒன்றாகி விடுகிறார். அவ்வாறு கண்ணனோடு ஐக்கியமாகி விடும் போது உலகில் உள்ள அனைத்தும் ஒன்றாகி விடுகிறது. தெருளும், மருளும் மாய்ந்து விடுகிறது. அந்த ஏக நிலையை நம்மாழ்வார் அடைகிறார். அந்த ஒருமை நிலை உலகில் உள்ள அனைவருக்கும் ஏற்பட வேண்டும் என்பது ஆழ்வாரின் விருப்பமாகும்.

உளரும் இல்லை யல்லராய்

உளராயில் லையாகியே

உளரெம் மொருவர் அவர் வந்தென்

உள்ளத்துள்ளே உறை கின்றார்

வளரும் பிறையும் தேய் பிறையும்

போல அசைவும் ஆக்கமும்
வளரும் கடரும் இருளும் போல்
தெருளும் மருளும் மாய்த்தோமே
(–திருவாய்மொழி 8–8)

என்றும் பாடுகிறார்.

ஆழ்வார்களைப் போலவே பாரதியும் உலகின் மீதும், உலக மக்கள் மீதும் மாளாத அன்பு கொண்டு, உலகம் முழுவதிலும், அன்பும் பொறையும் விளங்க வேண்டும், துன்பமும், மிடிமையும் நோவும் சாவும் நீங்கி எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க என்று பாடுகிறார்.

பூமண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக, துன்பமும், மிடிமையும், நோவும்
சாவும் நீங்கிச் சார்ந்த பல்லுயி ரெலாம்
இன்புற்று வாழ்க

என்பேன் என்று பாரதி பாடுகிறார்.

இலக்குமிக்குப் பிரார்த்தனை செய்து,

செல்வம் எட்டும் எய்தி – நின்னால்
செம்மையேறி வாழ்வேன்
இல்லையென்ற கொடுமை – உலகில்
இல்லையாக வைப்பேன்,
முல்லை போன்ற முறுவல் – காட்டி
மோக வாதை நீக்கி

எல்லையற்ற சுவையே – எனை நீ
என்றும் வாழ வைப்பாய்

என்று பாரதி பாடுகிறார். இன்னும்

நாடு மணிச் செல்வமெல்லாம்
நன் கருள் வாய் திருவே!
பீடுடைய வான் பொருளே
பெருங்களியே திருவே!

என்றும்

நீறுபடக் கொடும்பாவம் பிணி பசி
யாவையும் – இங்கு
நீக்கி அடியரை நித்தமும் காத்திடும்
வேலவா

என்றும் பாடுகிறார்.

கட்டுகள் போக்கி விடுதலை தந்திடும்
கண்மணி போன்றவனை – எம்மைக்
காவல் புரிபவனை – தொல்லைக்
காட்டையழிப்பவனைத் – திசை
எட்டும் புகழ் வளர்ந்தோங்கிட வித்தைகள்
யாவும் பழகிடவே – புவி மிசை
இன்பம் பெருகிடவே – பெருந்திரள்
எய்திப் பணிந்திடுவோம் – வாரீர்

என்று பாடுகிறார்

ஆதாரம் சக்தியென்றே அருமறைகள் கூறும்
யாதானும் தொழில் புரிவோம் யாதும் அவன் தொழிலாம்
துன்பமே இயற்கை யெனும் சொல்லை மறந்திடுவோம்
இன்பமே வேண்டி நிற்போம் யாவும் அவள் தருவாள்

என்று ஒரு புதிய கருத்தை முன் வைத்து பாரதி பாடுகிறார்.

நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்
நானிலத்தவர் மேனிலை யெய்தவும்
பாட்டிலே தனி இன்பத்தை நாட்டவும்
பண்ணிலே களி கூட்டவும் வேண்டி, நான்
மூட்டும் அன்புக் கனலோடு வாணியை
முன்னுகின்ற பொழுதில் எலாம் குரல்
காட்டி அன்னை பராசக்தி யேழையேன்
கவிதை யாவும் தனக்கெனக் கேட்கிறாள்.

என்று பாரதி சுவைப்படப் பாடி மகிழ்கிறார்.

பாரதி, நாட்டிலும் உலகிலும் உள்ள எல்லா தெய்வங்களையும் பற்றிப் பாடினார். கடைசியில் அறிவே தெய்வம் என்றும் கூறினார். ஆயினும் பாரதி கண்ணனைப் பற்றி அதிகமான பாடல்களைப் பாடியுள்ளார். ஆழ்வார்கள் திருமாலைப் பற்றி மட்டும் பாடினார்கள். அது அவர்களுடைய தனிச் சமயம். பாரதி அவ்வாறான தனிச் சமயத்திற்கப்பாற் பட்டவராக இருந்தார். ஆயினும் இந்து தர்மத்திற்கும் பாரதப் பண்பாட்டிற்கும் சார்ந்தே அவருடைய தேசபக்தியும் தெய்வ பக்தியும் வழிபாடும் நம்பிக்கையும், ஆன்மீக நிலையும் தத்துவ நிலையும் இருந்தது. கண்ணனைத் தனது குல தெய்வமாக வரித்துக் கொண்டார். சக்தி வடிவத்தைப் போற்றினார். சக்திதாசன் என்று பெயர் பெற்றார். எந்த தெய்வத்தை அவர் குறிப்பிட்டாலும் தேச நலனும் உலக நலனும் அவருக்கு மய்யக் கருத்தாக அமைந்திருந்தது.

ஆழ்வார்களைப் போலவே பாரதியும் கண்ணனிடம் அளவற்ற பக்தி கொண்டு கண்ணனிடம் ஐக்கியமாகி ஒன்றி விட்டார். ஆழ்வார்களின் மரபில் வந்தவர் பாரதி, ஆயினும் பாரதி தனது காலத்திற்கேற்ற வகையில் புதிய நெடிது நோக்குடன் கூடிய குறிக்கோள்களுடன் தனது பாடல்களில் புதிய கருத்துக்களையும் லட்சியங்களையும் முன் வைத்துள்ளார்.

பாரதி தனது சுய சரிதைப் பாடலில்,

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி
அகத்திலே அன்பினோர் வெள்ளம்,
பொறிகளின் மீது தனி யரசாணை
பொழுதெலாம் நினது பேரருளின்
நெறியிலே நாட்டம், கரும யோகத்தில்
நிலைத்திடல் என்றிவை யருள்வாய்
குறிகுணமேதுமில்லா தாய் அனைத்தாய்க்,
குலவிடும் தனிப்பரம் பொருளே!

என்று பாடுகிறார். இதுவே அவருடைய தத்துவ நிலையாகும். ஆழ்வார்களுக்கும் பாரதிக்கும் இந்தத் தத்துவநிலையில் ஒரு ஒற்றுமை இருப்பதைக் காணலாம். இந்திய நாட்டின் இந்தியத்வத்தின் பண்பாட்டு தளத்திற்கும் இதுவே ஆதாரம். கீதையின் இரகசியமும் இதுவே.

கலி நீங்க

கலி நீங்க வேண்டும் என்றும் சத்தியயுகம் – கிருத யுகம் எழ வேண்டும் என்றும் ஆழ்வார்களும் பாரதியும் விரும்பினார்கள். இதைப் பல பாடல்களிலும் ஆழ்வார்களும், பாரதியும் பாடியுள்ளதைக் காண்கிறோம்.

**திருமங்கை** யாழ்வார் தனது பெரிய திருமொழியில் **திருவழுந்தூர்** ஆமருவியப்பனிடம் அடைக்கலம் அடைந்து பாடிய **பாடல்கள் ஒன்**றில் திருமால் பெருமானை நான்கு யுகங்களும் **ஆனவன் என்**று பாடுகிறார்.

**தோ**யா வின் தயிர் நெய்ய முதுண்ணச்
சொன்னார் சொல்லி நகும் பரிசே பெற்ற
**தா**யாலாப் புண்டிருந்தரு தேங்கும்
தாடாளா! தரை யோர்க்கும் விண்ணோர்க்கும்
**சே**யாய் கிரேத திரேத துவாபர,
**க**லியுகம் இவை நான்கு முனானாய்
**ஆ**யா! நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்றவம்மானே!

**என்று** திருமங்கைக் குலவேந்தன் பாடுகிறார்.

நம்மாழ்வார் ஒரு சிறந்த தத்துவ ஞானி. அனைவராலும் **மதிக்கப்** படும் போற்றப்படும் ஒளி விளக்கு. வைணவ தத்துவத்தின் **ஒரு சி**றப்பு என்ன வென்றால் அதன் மூலப் பொருளான திருமாலைத் **தேடிப்** பக்தன் செல்ல வேண்டியதில்லை. திருமாலே தனது பக்தனைத் **தேடி** வருவார் என்பது பிரபலம். பரமபரத்தைத் தேடி பக்தர்களும், **அடி**யார்களும் செல்வது ஒரு பக்கம். மறுபக்கம் பரமபதத்தையே **இந்**த உலகிற்குக் கொண்டு வருவது ஒரு மகத்தான பணியாகும். அத்தகையதொரு மகத்தான பணியை நம்மாழ்வார் செய்யத் துணிகிறார். அவரே திருமாலின் பக்த கோடிகளுக்கு கோடிக்காணக்கான பக்த கோடிகளுக்கு மங்கள சாசனம் செய்கிறார். ஆண்டவனுக்கே பல்லாண்டு பாடிய பெரியாழ்வார் விட்டு சித்தன் வழியில் பக்த கோடிகளுக்கு பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பாடுகிறார் நம்மாழ்வார் பெருமான் சடகோபனார்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களில் வீடு என்னும் மோட்சத்தை, முழு விடுதலையை இந்த உலகத்திற்குக் கொண்டு வருவேன் என்று பாரதி குறிப்பிட்டார். பரமபதத்தை இந்தப் பூலகிற்கே நம்மாழ்வார் கொண்டு வந்து விட்டார்.

ஈசனை சரணாகதி அடைந்து இகலோகத்தில் மோட்ச சாம்ராஜ்யத்தை எய்தி நிகரற்ற ஆனந்தக் களியில் மூழ்கி வாழும் படி வழி காட்டுவதே பகவத் கீதையின் முக்கிய நோக்கம். என்று பாரதியார் தனது பகவத் கீதை தமிழ் மொழி பெயர்ப்பு நூலுக்கு எழுதிய தனது முன்னுரையில் குறிப்பிடுகிறார். நம்மாழ்வாரின் பாடல்களிலும் அக்கருத்தைக் காண்கிறோம்.

அமரத் தன்மையும் எய்தவும்
இங்கு நாம் பெறலாம் இஃதுணர்வீரே!

என்றும் பாரதி குறிப்பிடுகிறார்.

பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை
கலியும்கெடும் கண்டு கொள் மின்,
கடல்வண்ணன் பூதங்கள் மண் மேல்,
மலியப் புகுந்து இசைப் பாடி
யாடியுழி தரக் கண்டோம் (திருவாய்மொழி 5–2)

என்று நம்மாழ்வார் பாடுகிறார்.

கடல் வண்ணனுடைய பூதங்கள் மண்மேல் இந்தப் பூவுலகில் திரண்டு ஒன்று கூடி ஆடியும் பாடியும் வருகிறார்கள். எனவே கலி

நீங்கி விடும் இந்த மண்ணுலகமே விண்ணுலகமாகி விட்டது என்று ஆழ்வார் குறிப்பிடுகிறார். இன்னும்,

திரியும் கலியுகம் நீங்கித்
தேவர்கள் தாமும் புகுந்து
பெரிய கிருத யுகம் பற்றிப்
பேரின்ப வெள்ளம் பெருக
கரியமுகில் வண்ணன் எம்மான்
கடல் வண்ணன் பூதங்கள் மண் மேல்
இரியப் புகுந்திசை பாடி
எங்கும் இடம் கொண்டனவே! (திருவாய்மொழி 5–2)

என்று ஆழ்வார் பாடுகிறார்.

கலியுகம் நீங்கி விட்டது. பெரிய கிருதயுகம் வந்து விட்டது. கடல் வண்ணனுடைய அடியார்கள் இசை பாடி உலகமெல்லாம் நிறைந்து விட்டனர். தேவர்களும், இம்மண்ணுலகத்திற்கு வந்து விட்டனர். நோய் நொடி பகை பசி முதலிய தீயனவெல்லாம் இவ்வுலகிலிருந்து நீங்கி விட்டன. திருமாலின் தொண்டர்கள் நிறைந்து நல்லிசை பாடியும், துள்ளியாடியும், ஞாலம் முழுதும் பரவிக் குவிந்து விட்டனர். இன்னுமுள்ள பாக்கியிடங்களிலும் கண்ணனுடைய கூட்டம் நிரம்பி விட்டால் கலியுகம் என்பதேயில்லை என்று ஆகி விடும் என்று ஆழ்வார் கூறுகிறார்.

மிக்க உலகுகள் தோறும்
மேவிக் கண்ணன் திருமூர்த்தி
நச்சு பிரா னோட யனும்
இந்திரனும் முதலாக

தொக்க அமரர் குழாங்கள்
எங்கும் பரந்தன தொண்டீர்
ஒக்க தொழுகின்றீர் ஆகில்
கலியுகம் ஒன்று மில்லையே!

என்று ஆழ்வார் சடகோபன் பாடுகிறார்

பாரதியார் தனது பாடல்களிலும் கலி நீங்கிக் கிருதயுகம் வருவதாகப் பாடுகிறார்.

வீழ்கக் கலியின் வலியெலாம்
கிருதயுகம் தான் மேவுகவே!

என்று பாரதி கூறுகிறார். இன்னும்,

மெய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன் தெய்வ விதி யஃதே!

எனவும்,

. . . . . . . . . . . . பாரிடை மக்களே!
கிருதயுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதம் நான் கொண்டனன்

என்றும்

கற்ற பல கலைகள் எல்லாம் – அவள்
கருணை நல்லொளி பெறக் கலி தவிர்ப்போம்

எனவும்

சத்தியயுகத்தை அகத்தில் இருத்தித்
திறத்தை நமக்கு அருளிச் செய்யும் உத்தமி!

என்றும்

இடிபட்ட சுவர்போல கலிவிழுந்தான்

கிருதயுகம் எழு மாதோ!

என்றெல்லாம் மகாகவி பாரதியார் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

உலக மக்கள் எல்லாம் எல்லாவிதமான துன்பங்களும் துயர்களும் நீங்கி எல்லா வகையான இன்பங்களையும், நலன்களையும் பெற வேண்டும் என்பதையே குறிப்பிட்டு மகாகவி பாடுவதைக் காண்கிறோம்.

## வையத்தலைமை

கண்ணனைப் பாடினால் எல்லாவிதமான துன்பங்களும் தீரும். அவ்வாறு கேடில்லாத புகழ்மிக்க கண்ணனைப் பற்றி சடகோபனார் பாடிய பாடல்களைப் பாடினால் அவர்களுக்கு மூவுலகுக்குமான தனியொரு தலைமை கிடைக்கும் என ஆழ்வார் கூறுகிறார்.

கேடில் விழுப்புகழ்க் கேசவனைக்குரு

கூர்ச் சடகோபன் சொன்ன

பாடல் ஓர் ஆயிரத்துள் இவை பத்தும்

பயிற்றவல்லார்கட்கு, அவன்

நாடும் நகரமும் நன்குடன் காண

நலனிடையூர்தி பண்ணி

வீடும் பெறுத்தித்தன் மூவுலகுக்கும்

தரும் ஒரு நாயகமே (திருவாய்மொழி 3–10)

என்று ஆழ்வார் பாடுகிறார்.

சத்திரபதி சிவாஜி பாடலில் மகாகவி பாரதி

பாரத பூமி பழம் பெரும் பூமி

நீரதன் புதல்வர், இந்நினைவகற்றாதீர்

பாரத நாடு பாருக்கெலாம் திலகம்

நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்

என்றும்,

பாரத நாட்டிசை பகரயான் வல்லனோ?

நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்

என்று பாடுகிறார்.

பாரதபூமி, நீர் வளமும், நில வளமும், மனித வளமும் நிறைந்த நாடு, பாரத நாட்டின் நீர் வளத்தையும், நில வளத்தையும், மனித வளத்தையும் முழுமையாகப் பயன் படுத்தினால் இந்தியாவைப் போல பத்து இந்தியாவுக்குச் சோறு போட முடியும் என்றும், இந்தியாவைப் போல் பத்து இந்தியாவிற்கு மின்சாரம் கொடுக்க முடியும் என்று நமது நாட்டுப் பொறியியல் வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

நமது மனித வளமும் மனித ஆற்றலும் மகத்தானது. இன்று நமது நாட்டு விஞ்ஞானிகள், பொறியியல் வல்லுனர்கள், டாக்டர்கள், கற்றறிவாளர்கள் இல்லாத பணியாற்றாத பல்கலைக் கழகங்கள் உலகில் இல்லை. பல லட்சக்கணக்கான நிபுணர்கள் உலகின் பல நாடுகளிலும் சென்று பணியாற்றுகிறார்கள்.

கல்வித்துறையில், அறிவியல் தொழில் நுட்பத்துறையில், தகவல் தொழில் நுட்பத்துறையில், இதர விஞ்ஞானத் துறைகளில் பொருளாதாரத்துறைகளில் பாரதம் உலகிலேயே முதலிடம் பெற்று உலகிற்கே வழி காட்டியாக உயரும் வாய்ப்பு உள்ளது.

ஆயுத பலத்தாலும், ஆக்கிரமிப்பு மூலம், வன்முறைகள் மூலமல்லாமல் அன்பினால், ஆதரவால், நட்புறவு மூலம், ஒத்துழைப்பு மூலம் உலக நாடுகளின் நன் மதிப்பைப் பெற்று உலக நாடுகளின் தலைவனாக உயர்வதற்குப் பாரதத்திற்கு வாய்ப்பு உள்ளது. இதைப்

பாரதி நூறு ஆண்டுகளுக்கு முன்னரேயே தனது நெடிது நோக்குப் பார்வையில் கண்டான். பாரதி தனது புதிய ஆத்தி சூடியில் வையத் தலைமை கொள் என்று நமது இளம் தலைமுறையினருக்கு எடுத்துக் கூறுகிறார். வையத்தலைமை எனக்கு அருள்வாய் என்று அன்னையை வேண்டுகிறார்.

பாரதிக்கு முன்னரேயே நம்மாழ்வார், முவுலகுக்கும் ஒரு தனி நாயகம் கிடைக்கும் என்று பாடியருளினார் என்பதைப் பார்த்தோம்.

திருமங்கையாழ்வார், சீர்காழியை, காழிச்சீராம விண்ணகரம் என்றழைத்து அதில் எழுந்தருளியுள்ள திருமாலைப் பரசுராமனாகவும் இராமனாகவும் பாடி அப்பாடல்களைப் பாடியவர்கள் எல்லா நலன்களும் பெற்று உலகத் தலைவர் ஆவர் என்று குறிப்பிடுகிறார்.

செங்கமலத்தயன் அனைய மறையோர் காழிச்
சீராமவிண்ணகரென் செங்கண் மாலை,
அங்கமலத்தடவயல் சூழ் ஆலி நாடன்
அருள் மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்,
கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கை வேந்தன்,
கொற்றேவல் பரகாலன் கலியன் சொன்ன,
சங்கமுகத்தமிழ் மாலை பத்தும் வல்லார்
தடங்கடல் சூழ் உலகுக்குத் தலைவர் தாமே
(பெரியதிருமொழி 3–4)

என்று பாடுகிறார். ஆழ்வாரின் சிந்தனை நோக்கத்தை இப்பாடல் நமக்குத் தெரியப் படுத்துகிறது.

பாரதி தற்காலத்தின் சிந்தனையில் நம்மைக் கொண்டு வந்து விடுகிறார். பாரதி புதிய ஆத்தி சூடியைப் பாடினார். அந்தப் புதிய

ஆத்திசூடி என்பது பள்ளிகளில் படிக்கும் மாணவ மாணவியருக்கு உரியது. அச்சம் தவிர் என்று தொடங்குகிறது. அத்தொகுதியில் நூற்றிப்பத்து ஆத்திசூடிப் பாடல்களை பாரதி பாடியுள்ளார். அதில் வையத்தலைமை கொள் என்பதும் ஒன்றாகும். நமது வருங்காலச் செல்வங்களுக்கு பாரதி காட்டு வழி வையத்தலைமை கொள் என்பதாகும்.

வையத்தலைமைக்கு நாம் உயர வேண்டும். சகல துறைகளிலும் பாரதம் வையத் தலைமையாக வளர வேண்டும், உயர வேண்டும். அத்துடன் பாரதி வையத் தலைமை எனக்கருள்வாய் என்று அன்னையை வேண்டுகிறார். இது பாரதியின் ஒரு அற்புதமான பாடலாகும்.

ஐயம் தீர்ந்து விடல் வேண்டும் – புலை
அச்சம் போயொழிதல் வேண்டும் – பல
பையச் சொல்லுவதிங்கென்னே – முன்னைப்
பார்த்தன் கண்ணன் இவர் நேரா – எனை
உய்யக் கொண்டருள வேண்டும் – அடி
உன்னைக் கோடி முறை தொழுதேன் – இனி
வையத்தலைமை எனக் கருள்வாய் அன்னை
வாழி, நின்னதருள் வாழி

என்பது பாரதியின் பாடலாகும். இந்த உலகத்தின் தலைமை பாரதத்திற்குக் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது பாரதியின் வேண்டுதலாகும். அந்த உணர்வை நமது இளைஞர் சமுதாயம் பெற வேண்டும்.

ஆழ்வார்கள் வாழ்க, பாரதி வாழ்க.

# 6. கண்ணனைப் பற்றி ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் கண்ணனைப் பாடுகிறார்கள். கண்ணனின் பெருமைகளை கண்ணனுடைய லீலைகளைப் பாடுகிறார்கள். கண்ணனின் அவதாரமகிமையைப் பற்றி கண்ணனின் அரும் செயல்களைப் பற்றிப் பாடுகிறார்கள். கண்ணனைக் கடவுளாக குழந்தையாக நாயகனாகப் பாவித்துப் பாடுகிறார்கள். கண்ணனுடைய பிறப்பின் சிறப்புகளைப் போற்றிப் பாடுகிறார்கள். கண்ணனை உச்சி முதல் உள்ளங்கால் வரை வர்ணித்து அவனது அழகைப் புகழ்ந்து பாடுகிறார்கள். கண்ணனின் சாகசங்களைப் பாராட்டிப் பாடுகிறார்கள்.

ஆழ்வார்கள் திருமாலின் பல அவதாரங்களைப் பற்றியும் அவதாரச் சிறப்புகளைப் பற்றியும் பாடுகிறார்கள். ஆயினும் கண்ணனைப் பற்றியும் கண்ணன் பெருமைகளைப் பற்றியும் அதிகமாகப் பாடியுள்ளார்கள்.

பாரதியும் கண்ணணைப் பற்றிப் பெரிதும் பாடியுள்ளார். கண்ணனைத் தோழனாக, தாயாக, தந்தையாக கண்ணனைச் சேவகனாக, அரசனாக, சீடனாக, குருவாக, கண்ணம்மாவைக் குழந்தையாக, கண்ணனை விளையாட்டுப் பிள்ளையாக, காதலனாக, கண்ணம்மாவைக் காதலியாக, கண்ணனை ஆண்டானாக, கண்ணம்மாவைக் குலதெய்வமாக இவ்வாறெல்லாம் பாரதி பாடிப் பரவசப் பட்டுள்ளார். நம்மையெல்லாம் பரவசப் படுத்தியுள்ளார்.

பாரதியின் கண்ணன் பாட்டுத் தொகுதி ஒரு அற்புதமான பாடல் தொகுதியாகும். கருத்துச் செறிவு மிக்கதாகும். கவியாழம் கொண்டதாகும். பாரதியின் கண்ணன் பாட்டு சிறப்பான தத்துவ நிலை கொண்டதாகும். ஈடு இணையற்ற கவிதைத் தொகுப்பாகும்.

கண்ணனைப் பற்றி கண்ணன் பெருமைகளைப் பற்றி அநேகமாக எல்லா ஆழ்வார்களும் பாடியிருக்கிறார்கள். பாரதி தனது

கண்ணன் பாட்டுகளில் மட்டுமல்லாமல் இதர பாடல் தொகுதிகளிலும் கண்ணன் பெருமைகளைப் பற்றிப் பாடுகிறார். இன்னும் பாஞ்சாலி சபதத்தில் கண்ணனின் பெருமைகளைப் பற்றி உச்சத்திற்கு உயர்த்திக் கொண்டு சென்றுள்ளார். பாரதி கண்ணன் பாட்டுகளில் கண்ணனுடன் இரண்டறக் கலந்து பிரம்ம ஞானியாகி விட்டார்.

## பெரியாழ்வார்

பெரியாழ்வார் கண்ணனைப் பல வேறு வடிவங்களில் வர்ணித்துப் பாடுகிறார். மதுரைப் பிரானுக்கு பல்லாண்டு பாடுகிறார். கண்ணனுடைய அவதாரச் சிறப்பைப் பற்றிப் பாடுகிறார். கண்ணனுடைய திருப்பாதம் முதல் கேசம் வரையிலான அவனுடைய அத்தனை அங்கங்களின் அழகையும் அவற்றின் அருஞ் செயல்களையும் பற்றிப் புகழ்ந்து பாடுகிறார்.

கண்ணனைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுவதாக ஆழ்வார் தாலாட்டுப் பாடல் பாடுகிறார். இன்னும் கண்ணனின் அம்புலிப் பருவத்தை, செங்கீரைப் பருவத்தை, சப்பாணிப் பருவத்தை, தளர் நடைப் பருவத்தை, அச்சோப் பருவத்தை, ஆழ்வார் தன்னை யசோதையாகப் பாவித்து மிக அழகாகப் பாடுகிறார். கண்ணன் பின்னால் வந்து தன் முதுகைக் காட்டுவதைப் போல பாவித்துப் பாடுகிறார். கண்ணனை முலைப்பால் உண்ண அழைத்துப் பாடுகிறார்.

கண்ணனுக்குக் காதணி விழா நடத்துவது, நீராட அழைப்பது, குழல் வார அழைப்பது ஆகிய நிகழ்ச்சிகளை நடத்துவதாகக் கற்பித்துப் பாடுகிறார்.

கண்ணனைப் பூச்சூட அழைத்தும், திருஷ்டிப்பட்டு விடாதபடி காப்பிட அழைத்தும் பாடுகிறார். கண்ணன் வெண்ணெய் திருடித் தின்றது பற்றி கண்ணனடைய திருவிளையாடல் தொல்லைகளைப் பற்றிய முறையீடுகளைப் பற்றிப் பாடுகிறார். கண்ணனை முலைப்பால்

உண்ண அழைத்தும் அதே சமயத்தில் அவனுக்கு அம்மம் தர அஞ்சியும் அசோதை அவதிப் படுவதைப் போல் பாவித்து தான் அந்த அனுபவத்தைப் பெறுவதைப் போல பாவித்துப் பாடுகிறார். கண்ணனை ஆநிறை மேய்க்கக் காட்டிற்கு அனுப்பி விட்டு, கல்லும் முள்ளும் நிறைந்த காட்டிற்கு ஏன் அனுப்பினேன் என்று அசோதை வருந்துவதைப் போல பாவித்து ஆழ்வார் மிக அழகாகப் பாடுகிறார்.

கண்ணன் சில நாள் தாய் சொற்படி வீட்டில் தங்கி விட்டு மீண்டும் கன்றுகளை மேய்க்கக் காடு சென்று விட்டுத் திரும்பிய போது அவனுடைய அழகைக் கண்டு ஆயர்பாடிப் பெண்கள் காமுற்றுக் கூறிய அன்பு வார்த்தைகளை ஆழ்வார் கூறிப்பாடி அனுபவிக்கிறார்.

கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து ஆயர்களையும் ஆநிரைகளையும் காத்தது பற்றியும் விரிவாக ஆழ்வார் பாடுகிறார். கண்ணன் குழலோசையின் சிறப்புகளைப் பற்றி ஆழ்வார் பாடியுள்ளார். அந்த இசையின் இனிமையைக் கேட்டு ஆயர் பாடிப்பெண்கள், தேவமாதர்கள் மெய்மறந்து மயங்கி நின்றனர். ஆநிரைகளும், செடிகொடிகளும் மரங்களும் மகிழ்ந்தன. உலகையே அந்த இசை மயக்கியது,. இத்தகையச் சிறப்புகளைப் பற்றியெல்லாம் ஆழ்வார் பெருமான் மன முறுகிப் பாடுகிறார். கண்ணன் மீது மையல் கொண்டுள்ள மகளைப் பற்றித் தாய் இரக்கம் கொண்டு பாடுவதாக பாவித்து ஆழ்வார் மனமிரங்கிப் பாடுகிறார். துவாரகையில் அரியணையிலிருந்து ஆட்சி நடத்திக் கொண்டிருந்த கண்ணனைப் பாடுகிறார். கண்ணனுடைய திருநாமத்தை எந்நேரமும் உச்சரித்துக் கொண்டேயிருக்க வேண்டுமென்று ஆழ்வார் பாடுகிறார்.

மனம், வாக்கு, உடல் ஆகிய மூன்றையும் முக்கரணங்கள் என்று கூறுகிறோம். நாம் ஒரு காரியத்தில் ஒரு செயலில் ஈடுபடும்

போது அதில் முக்கரணங்களையும் செலுத்தி ஈடுபட வேண்டும். அதையே திரி கரண சுத்தியாய் செயலில் ஈடுபடுகிறோம் என்று குறிப்பிடுகிறோம். அதை யோகம் என்று கூறலாம். இவ்வாறு திரிகரண சுத்தியாய் கண்ணனிடத்திலும், அவனுடைய சிறப்புகளிலும் நாம் ஈடுபட்டு நிற்க வேண்டும் என்று ஆழ்வார் தத்துவ விளக்கம் செய்கிறார்.

தேவகி வயிற்றில் பிறந்தவனே! உன்னையும் உன் சிறப்புகளையும் கண்டு கொண்டேன். நீயே என் நோய்களுக்கெல்லாம் மருந்தாவாய் என்று கண்ணனை நினைந்து ஆழ்வார் பாடுகிறார்.

பெரியாழ்வாரின் இந்தப் பாடல்கள் பக்திச்சுவை நிரம்பியவை. தனது மனம், வாக்கு, உடல், சிந்தனை, எண்ணங்கள் அனைத்தையும் முழுமையாக ஈடுபடுத்தி ஆழ்வார் மனமுருகிப் பாடியுள்ளார். இப்பாடல்கள் இனிமையான தமிழ் சுவை நிறம்பியதாக உள்ளன. அத்துடன் இயற்கை வளம், கால்நடைவளம், நிலத்திலிருந்தும் ஆவினங்கள் மூலமும் கிடைக்கும் செல்வங்கள், இல்வாழ்க்கை இன்பங்கள், குழந்தை இன்பங்கள், ஆயர் கூட்டங்களின் சிறப்பு மிக்க கலாச்சாரம், கண்ணன் குடி கொண்டுள்ள கோயில்கள் நிறைந்த ஊர்களின் வளம், அவைகளின் சிறப்புகள், அவற்றின் ஆற்று வளம், நீர் வளம், நில வளம், மலை வளம், கண்ணனின் கருணை, மக்களுக்கு விலங்குகளால், இயற்கைச் சீற்றங்களால், அரக்கர்களால், கொடுங்கோல் மன்னர்களால் ஏற்படும் இன்னல்கள், தொல்லைகள், அந்த இன்னல்களிலிருந்தும், கொடுமைகளிலிருந்தும் மக்களைக் கண்ணன் காப்பாற்றிய கதைகள், பஞ்ச பூதங்களின் செயல்பாடுகள், அவைகளால் ஏற்படும் நன்மைகள், பஞ்சபூதங்களின் பலவேறு சேர்க்கைகளினால் ஆக்கப்பட்டுள்ள பலவகை உயிரினங்கள், அவைகளை உலக நலனுக்காகப் பாதுகாத்தல், மனிதனுடைய

வாழ்க்கை நலன்களைப் பாதுகாத்தல், மனிதனுடைய உடல் அமைப்பில் உள்ள நாடிகள், அவைகளில் வாதம் பித்தம் சிலேத்துமம் ஆகியவற்றின் செயல்பாடுகள், அவைகளில் ஏற்படும் பாதிப்புகளால் உண்டாகும் வியாதிகள், அந்த நோய்களிலிருந்து மனிதனையும், மக்களையும் இதர உயிரினங்களையும் காத்தல் முதலிய எண்ணற்ற விஷயங்களைப் பற்றியெல்லாம் அறிய கருத்துக்கள் நிரம்பிய, தீஞ்சுவைத் தமிழ் பாடல்கள், அவற்றின் இசைச்சிறப்புகள், இலக்கியச் சிறப்புகள், பக்திச்சுவை ஆகிய நிறைகள் நிறைந்த அருமையான பாடல்களாக அமைந்துள்ளன.

## ஆண்டாள்

பெரியாழ்வாரின் திருமகள் ஆண்டாள். அவர் ஆழ்வார்களில் ஒருவர். பெண்பாற் புலவர். அவர் பாடியுள்ள பாடல்களில் திருப்பாவை என்னும் சங்கத் தமிழ்மாலை முப்பதும் மிகவும் பிரபலமானவை. மார்கழி மாதம் நாள் தோறும் ஊர் தோறும், கோயில்கள் தோறும் பாடப் பெறுபவை. திருப்பாவைப் பாடல்களில் கோதை என்னும் ஆண்டாள் திருமாலைப்பற்றி அதில் சிறப்பாகக் கண்ண பிரானைப் பற்றி அதிகமாக ஈடுபட்டுப் பாடியுள்ளதைக் காண்கிறோம்.

கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன் என்றும், ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம் என்றும், கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான் என்றும், மாயனை மன்னு வட மதுரை மைந்தனை என்றும், தூய பெருநீர் யமுனைத் துறைவனை என்றும், ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை எனவும், பேய் முலை நஞ்சுண்டு, கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை எனவும் மாவாய்ப் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவனை எனவும், புள்ளின் வாய்க் கீண்டானைப் பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை என்றும் வல்லானைக் கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனை எனவும்,

அம்பரமே, தண்ணீரே, சோறே அறம் செய்யும் எம் பெருமான் நந்த கோபாலா என்றும், ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள் ஆற்றப் படைத்தான் மகனே, எனவும், பொன்றச்சகடமுதைத் தாய் புகழ் போற்றி என்றும் கன்று குணிலாவெறிந்தாய் கழல் போற்றி குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி என்றும்,

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப் பன்ன நின்ற நெடுமாலே எனவும் கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா எனவும், குறைவொன்றுமி ல்லாத கோவிந்தா எனவும், இற்றைப் பறை கொள்வானன்று காண் கோவிந்தா, என்றெல்லாம் தனது பாவைப் பாடல்களில் கண்ணனைச் சிறப்பித்துப் பட்டர் பிரான் கோதை குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

ஆண்டாள் கண்ணனிடம் பக்தி மட்டும் செலுத்தவில்லை. கண்ணனுடன் இரண்டறக் கலக்கவும், கண்ணனுடன் ஐக்கியமாகி விடவும் விரும்பினாள். கண்ணனையே தன் மணாளனாக விரும்பி அவனை அடைவதற்காக நோன்பிருந்தாள். பூஜை செய்தாள், பாடினாள், ஆடினாள், அவள் எந்த வேலை செய்தாலும் அதில் கண்ணனையே கண்டாள். கண்ணன் மூலம் உலக க்ஷேமத்தை விரும்பினாள். பசுக் கூட்டங்கள் பெருக வேண்டும். பால் பெருக வேண்டும். பாலும் தயிரும் வெண்ணையும் நெய்யும் பெருக வேண்டும். மாதம் மும்மாரி மழை பொழிய வேண்டும். உலக மக்கள் எல்லாம் இன்புற்றிருக்க வேண்டும். நன் மக்களைப் பெற வேண்டும். அத்தனை பாவங்களும் துன்பங்களும் நீங்கி அனைவரும் வைகுண்டம் அடைய வேண்டும் என்று விரும்புகிறாள், பாடுகிறாள். திவ்யப் பிரபந்தப் பாடல்களில் ஆண்டாள் பாசுரங்கள் தனிச் சிறப்பு கொண்டவை.

கண்ணனே நேரில் வந்து தன் கைத்தலம் பற்றித் தன்னைத் திருமணம் செய்து கொள்ளக் கனாக் கண்டதாகத் தன் தோழியிடம் கூறுகிறாள். அது ஒரு அற்புதமான காட்சியாகும்.

வாரண மாயிரம் சூழ வலம் செய்து
நாரண நம்பி நடக்கின்றான் என் எதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புற மெங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன்

தோழி நான் என்று பாடுகிறார்.

இந்திரன் உள்ளிட்டட தேவர் குழாம் எல்லாம்
வந்திருந்து என்னை மகட் பேசி மந்திரித்து
மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக் கண்டேன்

தோழி நான் என்று பாடுகிறார்.

நாற்றிசை தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கி
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லாரெடுத் தேத்தி
பூப்புனை கண்ணிப் புனித னோடென்றன்னை
காப்பு நாண் கட்டக் கனாக் கண்டேன்

தோழி நான் என்று பாடுகிறார்.

மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரை தாழ்ந்த பந்தற் கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் க்னாக் கணாக் கண்டேன்

தோழி நான் என்று பாடுகிறார்.

வாய் நல்லார் நல்ல மறை யோதி மத்திரத்தால்
பாசிலை நாணல் படுத்துப் பாதி வைத்து
காய் சினமா களிறன்றாள் என் கைப் பற்றி
தீ வலம் செய்யக் கனாக் கண்டேன்

தோழி நான் என்று பாடுகிறார்.

குங்குமம் அப்பிக் குளிர் சாந்தம் மட்டித்து
மங்கல வீதி வலம் செய்து மண நீர்
அங்கவனோடு முடன் சென்று அங்கு ஆனை மேல்
மஞ்சன மாட்டக் கனாக் கண்டேன்
தோழி நான் என்று பாடி முடிக்கிறார்.

இந்தப் பாடல்களைப் பாடி மகிழ்வோர்கள் குறிப்பாகப் புது மணத் தம்பதிகள் நன் மக்களைப் பெற்று இன்புறுவார்கள் என்று கோதை கூறுகிறார். இப்பாடல்கள் மிக்க சொல் நயமும், பக்திச் சுவையும், தமிழ்ச் சுவையும், பாரதப் பண்பாட்டுப் பெருமையும் கொண்டதாகும். இதன் வழியில் பாரதி பாடியுள்ள கண்ணம்மா பாடல்களைப் பின்னர் காண விருக்கிறோம்.

கண்ணன் ஊதும், முழக்கமிடும் வெண் சங்கிற்கு பாஞ்ச சன்னியம் என்று பெயர். அது வலம் புரிச் சங்காகும். பாஞ்ச சன்னியத்தின் சங்க நாதம் மூலமாகத்தான் ஒலி எழுப்பி, பல சூழ்ச்சிகளையும் செய்து கண்ணன், பாரதப் போரைப் பாண்டவர்களுக்காக நடத்தி முடித்தான். அந்த வெண் சங்கு மிகுந்த பாக்கியம் பெற்றதாகக் கோதை கூறுகிறார். காரணம் என்ன? கண்ணன் அந்த வெண் சங்கை ஊதும் போதெல்லாம் தன் வாயில் வைத்தல்லவா ஊதுகிறான்? அந்த வாயின் உதடுகளில் படும்போது எப்படி இன்ப மயமாக இருக்கும் எனக் கூறுவாய் சங்கே எனக் கோதை கேட்கிறார்.

கருப்பூரம் நாறுமோ?
கமலப் பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய் தான்
தித்தித்திருக்குமோ
மருப் பொசித்த மாத வன்றன்
வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல் ஆழி வெண் சங்கே!

என்று மிக அழகாக ஆண்டாள் பாடுகிறார்.

## குல சேகராழ்வார்

குலசேகரப் பெருமான் இராமனையும் கண்ணனையும் பற்றிப் பாடுகிறார். ஆய்ச்சியர்கள் கண்ணன் மீது ஆசை கொண்டு அவன் வருகையை எதிர் பார்த்துக் கொண்டு யமுனைக் கரையில் காத்துக் கொண்டிருந்தனர். கண்ணன் வருவதாகச் சொல்லி விட்டு வரவில்லை. அதனால் வெறுப்படைந்து அவர்கள் பலவிதமாகக் கண்ணனைப் பற்றிப் பேசுவதாகக் கற்பித்து ஆழ்வார் மிக அருமையான பாடல்களைப் பாடுகிறார்.

ஆழ்வார் தன்னைத் தேவகியாகக் கற்பித்துக் கொண்டு, கண்ணா, உன்னைப் பெற்றெடுத்தேன். ஆனால் பாலூட்டி வளர்த்து உன் குழந்தை அழகைக் காணும் பாக்கியத்தைப் பெறவில்லை. உனது இளம் பருவத்தைக் காணும் இன்பத்தை நான் பெறவில்லை. அசோதையே அந்த இன்பத்தின் முடிவைக் கண்டாள் என்றெல்லாம் பாடி மகிழ்கிறார்.

## திருமழிசையாழ்வார்

திருமழிசைப் பிரான் தனது திருச் சந்த விருத்தத்தில், ஆதியாகி

ஆயனாய மாயம் என்ன மாயமோ என்றும் அயர் மாதர் பிள்ளையாகி எம் பிரானுமான வண்ணம் என்னவோ? என்றும், கோவியல் வாய முதை உண்டவனே! என்றும் பேய்ச்சி பாலை உண்டாயே எனவும் காளிங்கன் மீது களி நடம் புரிந்தவனே! என்றெல்லாம் கசிந்துருகிப் பாடுகிறார்.

பார் மிகுந்த பார முன்னொ
ழிச்சுவான் அருச்சுனன்
தேர்மிகுத்து மாய மாக்கி
நின்று கொன்று வென்றி சேர்
மாரதர்க்கு வான் கொடுத்து
வையம் ஐவர் பாலதாம்
சீர் மிகுந்த நின்னலால் ஓர்
தெய்வம் நான் மதிப்பனே!

என்று பாடி மகிழ்கிறார்.

## தொண்டரடிப் பொடியாழ்வார்

தொண்டரடிப் பொடியாரின் திருமாலைப் பாசுரங்கள் தனிப் பிரசித்தமான பாடல் தொகுதியாகும். அப்பாசுரங்களில் ஆழ்வார் அரங்கனின் பெருமைகளை விளக்கி மிகவும் உருக்கமாகப் பாடுகிறார். அதில் கண்ணனைப் பற்றி

மற்று மோர் தெய்வ முண்டோ
மதியிலா மானிடர்காள்
உற்ற போதன்றி நீங்கள்
ஒருவன் என்று ணர மாட்டீர்

அற்ற மே லொன்றறி யீர்
அவனல்லால் தெய்வமில்லை
கற்றினம் மேய்த்த வெந்தை
கழலிணை பணிமினீரே

என்று குறிப்பிட்டுப் பாடுகிறார்.

திருப்பாணாழ்வார் தனது அமலனாதி பிரான் பாடல்களில்

ஆல மா மரத்தின் இலை மேல் ஒரு பாலகனாய்,
ஞால மேழும் உண்டான் அரங்கத்தரவின் அணையான்
கோல மா மணி யாரமும் முத்துத் தாமமும்
முடிவில்லதோர் எழில்
நீல மேனியை யோ
நிறை கொண்ட தென் நெஞ்சினையே

என்று பாடிக் கண்ணனைத் தனது நெஞ்சில் நினைவு கொள்கிறார்.

## திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் திருமாலின் பலவேறு வடிவங்களையும் அவதாரங்களையும், அவதாரப் பெருமைகளையும், திருமால் குடி கொண்டிருக்கும், எழுந்தருளியிருக்கும் பல திவ்ய தேசங்களையும் அவைகளின் சிறப்புகளையும் பற்றி மிகவும் சிறப்பாகப் பல பாசுரங்களையும் பாடியுள்ளார். அவர் கண்ணபிரானைப் பற்றியும் தனிச் சிறப்பாக அனுபவித்துப் பாடியுள்ளார்.

திருமங்கையாழ்வார் பெருமான் தனது வாழ்க்கையில் பலவேறு இன்பங்களையும், துன்பங்களையும் அனுபவித்துக் கடைசியில்

நாராயண மந்திரத்தின் உண்மைப் பொருளை உணர்ந்து உணர்ச்சி வேகத்துடன் திருமால் பெருமையைப் பாடி மகிழ்க்கிறார். திவ்ய தேசங்கள் பலவற்றிற்கும் நேரில் சென்று அங்கு எழுந்தருளியுள்ள பெருமாளை வணங்கி வாழ்த்தி மங்கள சாசனம் செய்து மகிழ்கிறார். அவருடைய திவ்ய தேசப் பயணத்தை இமயத்திலிருந்து தொடங்குகிறார்.

திருப் பிரிதியில் எழுந்தருளியுள்ள பிரான் கண்ணபிரான் என்று மனதில் கொண்டு,

துடிகொள் நுண்ணிடைச் சுரி குழல் துளங்கெயிற்
றிளங்கொடி திறத்து – ஆயர்
இடிகொள் வெங்குரலின் விடை யடர்த்தவன்

என்று பாடி மகிழ்கிறார்.

இமய மலையில் திருமால் கோயில் கொண்ட முக்கியமான ஊர், பதரி காசிரமம் எனப் பெயர் பெற்றது. இக்கோயிலில் குடி கொண்டுள்ள பதரி நாதர், பத்ரி நாராயணன் என்று பெயர் பெற்றுள்ள பெருமாள் கோயிலாகும். பேய்ச்சியின் பெருமுலையைக் கடித்துக் கொன்ற கண்ணனின் உறைவிடம் பத்ரி காசிரமம் என்ற ஆழ்வார் பாடுகிறார்.

முற்ற மூத்துக் கோல் துணையா
முன்னடி நோக்கி வளைந்து
இற்றகால் போல் தள்ளி
மெள்ள விருந்தங்கி ளையாமுன்
பெற்றதாய் போல் வந்த
பேய்ச்சி பெருமுலை யூடு உயிரை

வற்ற வாங்கி யுண்ட வாயான்

வதரி வணங்குதுமே!

என்று ஆழ்வார் பாடுகிறார். இன்னும்

பேயிடைக் கிருந்து வந்த மற்றவள் தன்

பெருமுலை சுவைத்திட, பெற்ற

தாயிடைக் கிருத்தல் அஞ்சுவன் என்று

தளர்ந்திட வளர்ந்த வெந்தலைவன்

சேய் முகட்டுச்சியண்டமும் சுமந்த

செம் பொன் செய் விலங்கலில் இலங்கு

வாய் முட்டிழிந்த கங்கையின் கரைமேல்

வதரியாச்சிரமத்துள்ளானே!

என்றும் பாடுகிறார்

திருச்சாளக்கிராமம் என்னும் திருப்பதியும் இமயமலைச் சாரலில் உள்ள திவ்ய தேசமாகும். இங்குள்ள பெருமானை,

விண்ணோர் பெருமான் நண்ணார் முன்

கடுத்தார்த் தெழுந்த பெருமழையைக்

கல்லொன் றேந்தியின நிரை காத்

தடுத்தான்

என்றும்,

தாயாய் வந்த பேய் உயிரும்

தயிரும் இழுதும் உடன் உண்ட

வாயான்

என்றும் கண்ணனாக பாவித்து ஆழ்வார் பாடுகிறார்.

திருவேங்கட முடையானைக் கண்ணனாக பாவித்து,

நின்ற மாமருது இற்று வீழ நடந்த
நின்மலன் நேமியான் என்றும்,
கன்றிமாரி பொழிந்திடக் கடி
தானிரைக் கிடர் நீக்குவான்
சென்று குன்ற மெடுத்தவன் என்றும்
பார்த்தற்காய் அன்று பாரதம் கைசெய்
திட்டு வென்ற பரஞ்சுடர்
கோத்தங்காயர் தம் பாடியில் குரவை
பிணைந்த எம் கோவலன்

என்றும் பாடியுள்ளார்.

வீரராகவப் பெருமாள் குடிக் கொண்டுள்ள திருவள்ளூரைக் கண்ணன் இருக்கும் ஊர் என்றும், பாண்டவர் தூதன் கிடக்கும் ஊர் என்றும், ஏழு எருதுகளை அடக்கியவன் கிடக்கும் ஊர் என்றும், ஏழுலகும் உண்டவன் கிடக்கும் ஊர் என்றும் ஆழ்வார் பெருமான் பாடி மகிழ்கிறார்.

சென்னை திருவல்லி கேணியில் எழுத்தருளியுள்ள பார்த்த சாரதிப் பெருமானை,

விற்பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
வேழமும் பாகனும் வீழ செற்றவன் தன்னை

என்றும்,

பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்றானை

என்றும்,

வஞ்சனை செய்யத் தாயுறுவாகி
வந்த பேய் அலரி மண் சேர
நஞ்சமர் முலையூடுயிர் செக உண்ட
நாதனைத்தானவர் கூற்றை என்றும்,
இந்திரனுக் கென்றாயர் களெடுத்த
எழில் விழ வில் பழ நடை செய்
மந்திர விதியில் பூசனை பெறாது
மழை பொழிந்திட தளர்ந்து, ஆயர்
எந்த மோடின வா நிரை தளராமல்
எம்பெருமான் அருளென்ன
அந்த மில் வரையால் மழை தடுத்தானைத்
திருவல்லி கேணி கண்டேனே!

என்றும் பாடுகிறார்.

இன் துணைப்பது மத்தலர் மகள் தனக்கும்
இன்பன் நற்புவிதனக் கிறைவன்
தன் துணை யாயர் பாவை நப்பின்னை
தனக் கிறை மற்றையோர்க்கெலாம்
வன் துணை, பஞ்ச பாண்டவர்க்காகி
வாயுரை தூது சென்றியங்கும்
என்துணை, எந்தை தந்தை யம்மானைத்
திருவல்லிகேணி கண்டேனே!

எனவும்

அந்தகன் சிறுவன் அரசர் தம் அரசற்
கிளையவன் அணியிழையைச் சென்று
எந்த மக்குரிமை செய் எனத் தரியாது
எம் பெருமானருள் என்ன
சந்தமல் குழலாள் அலக்கண் நூற்றுவர் தம்
பெண்டிரும் எய்தி நூலிழப்ப
இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானைத்
திருவல்லிகேணி கண்டேனே!

என்றும் ஆழ்வார் மனமுருகப் பாடுகிறார்.

மாமல்லபுரம் ஒரு முக்கியமான திவ்ய தேசங்களில் ஒன்று. இவ்வூருக்குத் திருக்கடல் மல்லை என்று ஆழ்வார்கள் குறிப்பிடுவார்கள். அம்மாமல்லபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானைக் கண்ணனாகப் பாவித்து,

பேய்த்தாயை முலையுண்ட பிள்ளை தன்னைப்
பிணைமருப்பில் கருங்களிற்றைப் பிணைமான் நோக்கின்
ஆய்த்தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோவை
அந்தணர் தம் அமுதத்தைக் குரவை முன்னே
கோத்தானை, குட மாடு கூத்தன் தன்னைக்
கோகுலங்கள் தளராமல் குன்ற மேந்திக்
காத்தானை, எம்மானைக் கண்டு கொண்டேன்,
கடிபொழில் சூழ்க் கடல் மல்லைத்தல சயனத்தே!

என்று ஆழ்வார் பாடுகிறார்.

திருக்கோவலூரில் எழுந்தருளியுள்ள பெருமானைத் திருமங்கையாழ்வார்,

உறியார்ந்த நறு வெண்ணெய் யொளியாக சென்றங்கு
உண்டானைக் கண்டாய்ச் சியுரலோடார்க்க
தறியார்ந்த கருங்களிறே போல் நின்று
தடங்கண்கள் பனி மல்கும் தன்மையானை

என்றும்,

இருங்கை மாகரி முனிந்து பரியைக் கீறி
இன விடை களேழடர்ந்து மருதம் சாய்த்து
வரும் சகட மிறவு தைத்து மல்லையட்டு
வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சானாதனை

என்றும்

பாரேறு பெரும் பாரம் தீரப்பண்டு
பாரதத்துத் தூதியங்கி பார்த்தன் செல்வத்
தேரேறு சாரதியா யெதிர்ந்தார் சேனை
செருங் களத்துத் திறல் அழியச் செற்றான் தன்னை

என்றும், அப்பிரானைக் கண்ணனாக பாவித்து மிகவும் அழகான தமிழ்ப் பாவினால் பாடி மகிழ்கிறார்.

திருவயிந்திர புரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானைக் கண்ணனாக பாவித்து,

விரை கமழ்ந்த மென் கருங்குழல் காரணம்
வில்லிறுத்து அடை மழைக்கு
நிரை கலங்கிட வரை குடை எடுத்தவன்

என்றும்,

வேல் கொள் கைத்தலத்தரசர் வெம் போரினில்
விஜயனுக் காய் மணித் தேர்க்
கோல் கொள் கைத்தலத் தெந்தை

எனவும் திருமங்கையாழ்வார் பாடுகிறார்.

திருச் சித்திரக் கூடத்தில் (சிதம்பரம்) எழுந்தருளியுள்ள கோவிந்த ராஜப் பெருமாளைக் கண்ணன் எனப் பாவித்து,

வாட மருதிடை போகி
மல்லரைக் கொன்றொக் கலித்திட்டு
ஆடல் நல் மாவுடைத்தாயர்
ஆநிரைக் கன்றிடர் தீர்ப்பான்
கூடிய மாமழை காத்த
கூத்தன் என வருகின்றான்

எனவும்,

பேய் மகள் கொங்கை நஞ்சுண்ட
பிள்ளை பரிசிது வென்றால்
மாநில மாமகள் மாதர் கேள்வன் இவன்

என்றும்

பண்டிவன் வெண்ணெய் உண்டானென
ஆய்ச்சியர் கூடியிழிப்ப

எண் டிசை யோரும் வணங்க
இணை மருதூடு நடந்திட்டு
அண்டரும் வானத்துவரும்
ஆயிரம் நாமங்களோடு
திண்டிறல் பாட வருவான்

என்றும்,

வளைக் கை நெடுங்கண் மடவார்
ஆய்ச்சியர் அஞ்சி யழைப்ப
தளைத் தவிழ் தாமரைப் பொய்கைத்
தண்டடம் புக்கண்டர் காண
முளைத்த எயிற்றழல் நாகத்
துச்சியில் நின்றது வாட
திளைத்தமர் செய்து வருவான்

என்றும் ஆழ்வார் பாடி மகிழ்கிறார்.

இன்னும் திரு நாங்கூர் எம்பிரானை பூதகியைக் கொன்றவன் என்றும் காணியன் மீது ஏறி நின்று நடனமாடியவன் என்றும், பாராட்டிப் பாடி மகிழ்கிறார். திருநாங்கூர் வைகுண்ட விண்ணகரத்தில் அமர்ந்துள்ள பிரானைக் கண்ணன் என்றும், அக்கோயிலைக் கண்ணன் விரும்பும் கோயில் என்றும் பாவித்து,

பெண்மை மிகு வடிவு கொடு வந்த வளைப்
பெரிய பேயினது உருவு கொடு மாள உயி
ருண்டு, திண்மை மிக மருதொரு நற்

சகட மிறுத்தருளும் தேவனவன் மகிழ்ந்
தினிது மருவியுறை கோயில்

என்றும்

விளங் கனியை யிளங்கன்று கொண்டு
திர வெறிந்து வேல் நெடுங்கண் ஆய்ச்
சியர்கள் வைத்த தயிர் வெண்ணெய்
உளங்குளிர அமுது செய்திவ்வு லகுண்ட
காளை உகந்தினிது நாடோறும் மருவி
றறை கோயில்

என்றும்

ஆறாத சினத்தின் மிகு நரகன் உர
மழித்த அடலாழி தடக்கையன் அலர்
மகட்கும் அரற்கும் கூறாகக் கொடுத்த
ருளும் திருவுடம்பன் இமையோர் குல
முதல்வன் மகழ்ந்தினிது மருவி யுறை
கோயில்

என்றும் பாடியருளியுள்ளார்.

அரிமேய விண்ணகரத்தில் உள்ள கோயிலை கண்ணன் உறையும் கோவில் எனக் குறிப்பிட்டு

உம்பரும் இவ்வேழுலகும் ஏழ் கடலும்
எல்லாம் உண்ட பிரான் அண்டர்கள்

முன் கண்டு மகிழ் வெய்த, குடும்பமிகு மத
யானை மருப் பொசித்துக் கஞ்சன் குஞ்சி
பிடித்தடித்த பிரான் கோயில்

என்றும்

தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில்
திரியும் தேனுகனும் பூதனை தன் ஆரு
யிரும் செகுத்தான், காமனைத் தான்
பயந்த கரு மேனி யுடையம் மான் கருதுமிடம்

எனவும்,

கன்றதனால் விளவெறிந்து கனி யுதிர்ந்த
காளை, காமருசீர் முகில் வண்ணன் காலி
கள் முன் காப்பான், குன்றதனால் மழை
தடுத்துக் குடமாடு கூத்தான் குலவுமிடம்

என்றும்,

வஞ்சனையால் வந்தவள் தன் உயிருண்டு
வாய்த்த தயிருண்டு, வெண்ணெயமுது
ண்டு வலிமிக்க, கஞ்சனுயி ரதுவுமுண்டு
இவ்வுலகுண்ட காளை கருதுமிடம்

என்றும், போற்றிப் பாடுகிறார் ஆழ்வார்.

திருநாங்கூர் திவ்ய தேசங்களுள் ஒன்றான திருவண் புருடோத்தமம் என்னும் திரு ஊரில் அமைந்துள்ள திருமால் திருக்கோயிலை,

பல்லவம் திகழ் பூங்கடம் பேறியக்
காளியன் பண வரங்கில்
ஒல்லை வந்துறப்பாய் ந்தரு நடஞ் செய்த
உம்பர் கோன் உறை கோயில்

என்றும்,

அண்டவர் ஆனவர் வானவர் கோனுக்கென்று,
அமைத்த சோறது வெல்லாம்,
உண்டு கோ நிரை மேய்த்தவை காத்தவன்
உகந்தினிதுறை கோயில்

என்றும்

பருங்கை யானையின் கொம்பினைப்
பறித்ததன் பாகனை சாடிப்புக்கு
ஒருங்கமல்லரைக் கொன்று பின் கஞ்சனை
உதைத்தவன் உறை கோயில்

என்றும்

அங்கையால் அடி மூன்று நீரேற்றயன்
அலர் கொடு தொழு தேத்த
கங்கை போதரக் கால் நிமிர்த்தருளிய
கண்ணன் வந்துறை கோயில்

எனவும் ஆழ்வார் அழகுறப் பாடி மகிழ்கிறார்.

திருநாங்கூர் திவ்ய தேசங்களுள் ஒன்று செம்பொன் செய் கோயில். இக்கோயில் கொண்டானை ஆழ்வார் மனமுருகி அழகாகப் பாடுகிறார்.

வெஞ்சினக்களிறும் வில்லொடு மல்லும்
வெகுண்டிருத் தடர்ந்தவன் தன்னை
கஞ்சனைக் காய்ந்த காளை யம்மானைக்
கருமுகில் திரு நிறத்தவனை
செஞ்சொல் நான் மறையோர் நாங்கை நன்னடுவுள்
செம்பொன்செய் கோயிலினுள்ளே
அஞ்சனக் குன்றம் நின்ற தொப்பானைக்
கண்டு கொண்டேன் அல்லல் தீர்ந்தேனே

என்று பாடுகிறார்.

திருநாங்கூர் திவ்ய தேசங்களுள் ஒன்றான திருத்தெற்றியம் பலத்தில் பள்ளி கொண்டுள்ள பெருமானைப் பற்றி

மாற்றரசர் மணி முடியும் திறலும் தேசும்
மற்றவர் தம் காதலி மார் குழையும் தந்தை
காற்றளையும் உடன் கழல வந்து தோன்றிக்
கதநாகம் காத்தளித்த கண்ணன் கண்டீர்

என்றும்

பொற்றொடித் தோள் மட மகள் தன் வடிவு கொண்ட
பொல்லாதவன் பேய்ச்சி கொங்கை வாங்கி
பெற்றெடுத்த தாய் போல மடுப்ப ஆரும்
பேணா நஞ்சுண்டு கந்த பிள்ளை கண்டீர்

என்றும்,

படல டைத்த சிறு குரம்பை நுழைந்து புக்குப்
பசு வெண்ணெய் பதமாரப் பண்ணை முற்றும்,
அடலடர்த்த வேற் கண்ணார் தோக்கை பற்றி
அலந்தலைமை செய்துழலும் அய்யன் கண்டீர்

என்றும் செழிப்பு மிக்க பசுமை நிறைந்த இளங்கமுகின் முது பாளைகளும் சேற்றளையில் சிந்தும் வெண் முத்துக்களும் நீல மலர்கள் நிறைந்த சூழலில் மது அருந்தப் பாடிவரும் வண்டொலியும் அழகிய நங்கையரின் சிற்றடி மேல் எழும் சிலம் பொலியும் நெடுந்தெங்கின் பழங்கள் விழுந்தும் மாங்கனிகள் திரண்டும், மலர் மணத்துடன் பொங்கிவரும் பொன்னி நீரும், மலர் பொழில்களும் மணி மாடங்களும் நிறைந்த, ரதவீதிகளும் மாட வீதிகளும் உள்ள செங்கலங்கல் வெண் மணல் மேல் பவழும் திருநாங்கூர் திருத்தெற்றியம் பலத்தில் பள்ளி கொண்டுள்ள பெருமாளைக் கண்ணனாக பாவித்து ஆழ்வார் அழகுறப் பாடுகிறார்.

திருநாங்கூருக்குக் கிழக்கே உள்ள திருக்காவளம் பாடி என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தளியுள்ள எம் பெருமானைப் பற்றி,

மல்லரை யட்டு மாளக்
கஞ்சனை மலைந்து கொன்று
பல்லசர விந்து வீழப்
பாரதப் போர் முடித்தாய்

என்றும்

மூத்தவர்க் கரசு வேண்டி
முன் தூது எழுந்தருளி

மாத்தமர் பாகன் வீழ
மத கரி மருப் பொசித்தாய்

என்றும் பாடியுள்ளார்.

திருவெள்ளக் குளத்து சீனிவாசப் பெருமாள் மீது திருமங்கையாழ்வாருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. அப்பெருமானை கண்ணனாகப் பாவித்து,

குன்றால் குளிர் மாரி தடுத்து கந்தானே

என்றும்

கானார் கரி கொம்ப தொசித்த களிறே

என்றும்

கோலால் நிரை மேய்த்த எங்கோவலர் கோவே

என்றெல்லாம் குறிப்பிட்டுப் பாடி மகிழ்ந்தார்.

திருவெள்ளியங்குடி கண்ணபிரான் கோவிலைப் பற்றி
ஆய்ச்சியர் அழைப்ப வெண்ணெய் உண்டொருகால்
ஆலிலை வளர்ந்த வெம் பெருமான்
பேய்ச்சியை முலையுண்டிணை மருதிறுத்துப்
பெருநிலம் அளந்தவன் கோயில்

எனவும்

ஆநிரை மேய்த்து அன்று அலைகடல் அடைத்திட்ட
அரக்கம் தம் சிரங் களை உருட்டி,
கார் நிறை மேகம் கலந்த தோர் உருவக்
கண்ணனார் கருதிய கோயில்

என்றும்,

கடுவிடமுடைய காளியன் தடத்தைக்
கலக்கி முன்னலக்கழித்து அவன்றன்
படமிறப்பாய்ந்து பன் மணி சிந்தப்
பல் நடம் பயின்றவன் கோயில்

என்றும்,

கறவை முன் காத்துக் கஞ்சனைக் காய்ந்த
காள மேகத்திருவுருவன்
பறவை முன் உயர்த்துப் பாற்கடல் துயின்ற
பரமனார் பள்ளி கொள் கோயில்
பாரினை உண்டு, பாரினை உமிழ்ந்து
பாரதம் கையெறிந்து, ஒரு கால்
தேரினையூர்ந்து தேரினைத் துரந்த
செங்கண் பால் சென்றுறை கோயில்

என்றெல்லாம் ஆழ்வார் பிரான் பாடுகிறார்.

திருப்புள்ளம் பூதங்குடியை மருதம் சாய்ந்த கண்ணன் வாழுமிடம் என்றும்

மையார்தடங்கண் கருங் கூந்தல்
ஆய்ச்சி மறைய வைத்த தயிர்,
நெய்யார் பாலோடு அமுது செய்த
நேமியங்கை மாயனிடம் என்றும்,

கறையார் நெடுவேல் மற மன்னர்
வீயவிஜயன் தேர் கடவி

இறையான் கையில் நிறையாத
முண்டம் நிறைந்த எந்தையிடம்

என்றும் பாடி மகிழ்கிறார்.

திருக் கூடலூரில் எழுந்துள்ள பெருமானை,

தாம் தம் பெருமையறியார், தூது
வேந்தர்க் காய வேந்தரூர்

என்றும்,

செறும் திண் திமிலேறுடையபின்னை
பெரும்தண் கோலம் பெற்றாரூர்

என்றும் ஆழ்வார் பாடுகிறார்

திருவரங்கத் திருக்கோயிலில் பள்ளி கொண்டுள்ள அரங்கநாதப் பெருமானைக் கண்ணனாக பாவித்துப் பல பாடல்களையும் ஆழ்வார் பாடுகிறார்.

கலையுடுத்த அகலல்குல் வன்பேய் மகள்
தாயென முலை கொடுத்தாள் உயிருண்ட
வன் வாழுமிடம், என்றும்,
கஞ்சன் நெஞ்சும் கடுமல்லரும் சகடமும்
காலினால் துஞ்ச வென்ற சுடராழியான்
வாழுமிடம், என்றும் பாடுகிறார்.

பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப்
பகவலவன் ஒளி கெட, பகலே
ஆழியால் அன்றங் காழியை மறைத்தான்

என்றும்

பேயினார் முலை யூண் பிள்ளையாய் ஒரு கால்
பெருநிலம் விழுங்கி, அது மிழ்ந்த
வாயனாய், மாலாய் ஆலிலை வளர்ந்து
மணிமுடி வானவர் தமக்குச்
சேயனாய், அடியேற் கணியனாய் வந்தென்
சிந்தனையுள் வெந்துயர் அறுக்கும்
ஆயனாய் அன்று குன்ற மொன்றெடுத்தான்
அரங்க மாநகர் அமர்ந்தானே

என்றும் உள்ளமுருகப் பாடுகிறார்.

திருப்பேர் நகர் என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியுள்ள அப்பக் குடத்தானை,

வெண்ணெய் தானமுது செய்ய
வெகுண்டு மத்தாய்ச்சி யோச்சி
கண்ணியார் குறுங் கயிற்றால்
கட்ட வெட்டொன்றிருந்தான்

என்று பாடி மகிழ்கிறார்.

உப்பலியப்பன் கோயிலில் எழுந்தருளியுள்ள சீனிவாசப் பெருமானைக் கண்ணனாகப் பாண்டவர் தூதனாகப் பாவித்து,

போதார் தாமரை யாள் புல
விக்குல வானவர் தம்
கோதா, கோதில் செங்கோல் குடை
மன்னரிடை நடந்த

தூதா, தூமொழியாய் சுடர்
போல் என் மனத்திருந்த
வேதா நின்னடைந்தேன் திரு
விண்ணகர் மேயவனே

என்று பாடுகிறார்.

திருநறையூரைக் கண்ணன் வாழும் இடமாகக் குறிப்பிட்டு,

உறியார் வெண்ணெயுண்டு ரலோடும் கட்டுண்டு
வெறியார் கூந்தல் பின்னை பொருட்டு
ஆன்வென்றானூர்

என்றும்

விடை யேழ் வென்று மென் தோ
ளாய்ச்சிக் கன் பனாய்
நடையால் நின்ற மருதம் சாய்த்த நாதனூர்

என்றும்

பகுவாய் வன்பேய் கொங்கை
சுவைத்தாருயிர் உண்டு
புகுவாய் நின்ற போதகம்
வீழப் பொருதானூர் என்றும்

வெள்ளைப் புரவித் தேர் விச
யற்காய் விறல் வியூகம்
விள்ள, சிந்துக் கோன் விழ
ஊர்ந்த விமலனூர் என்றும்

பாரையூரும் பாரம் தீரப் பார்த்தன் தன்
தேரையூரும் தேவதேவன் சேருமூர்

என்றும் பாடி மகிழ்கிறார். மேலும்

முலைத்தடத்த நஞ்சுண்டு துஞ்சப் பேய்ச்சி
முதுதுவரைக் குலபதி யாக் காலிப் பின்னே
இலைத்தடத்த குழலூதி யாயர் மாதர்
இனவளை கொண்டான் அடிக் கீழ் எய்தகிற்பீர்
மலைத்தடத்த மணி கொணர்ந்து வையமுய்ய
வளம் கொடுக்கும் வருபுனலம் பொன்னி நாடன்
சிலைத் தடக்கைக் குலச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணி மாடம் சேர்மின் களே!

என்று மனமுருகப் பாடி மகிழ்கிறார்.

இன்னும் நறையூர் நம்பியின் பெருமைகளைக் கண்ணன் வடிவத்திலும் அக்கண்ணன் செய்த அருஞ்செயல்களையும் பாராட்டி பக்தியுடன் ஆழ்வார் பாடுகிறார்.

ஒளியா வெண்ணெயுண்டா னென்று
உரலோ டாய்ச்சி யொண் கயிற்றால்
விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மி அழுதான்

என்றும்

வில்லார் விழவில் வட மதுரை
விரும்பி விரும்பா மல்லடர்த்து

கல்லார் திரடோள் கஞ்சனைக்
காய்ந்தான் பாய்ந்தான் காளியன் மேல்

என்றும்

மிடையா வந்த வேல் மன்னர்
வீய விஜயன் தேர் கடவி
குடையா வரை யொன்றெடுத்தாயர்
கோவாய் நின்றான் கூராழிப் படையான்

என்றும்

பந்தார் விரலாள் பாஞ்சாலி
கூந்தல் முடிக்கப் பாரதத்து
கந்தார் களிற்றுக் கழல் மன்னர்
கலங்கச் சங்கம் வாய் வைத்தான்

என்றும், நான்கு வேதங்களையும் ஐந்து வேள்விகளையும் ஆறு அங்கங்களையும், ஏழு இசைகளையும் நன்கு பயின்று அதில் வல்லவர்களான அந்தணர்கள் வாழும் நறையூர் நின்ற நம்பியின் பெருமைகளைச் சிறப்பாகப் பாடி ஆழ்வார் இன்புற்று மகிழ்கிறார்.

திருநறையூர் நம்பியின் திவ்ய தரிசனத்தைக் கண்ணன் வடிவத்திலும் கிடைக்கப் பெற்றதாக ஆழ்வார் பெரும் மகிழ்ச்சியுடன் பாடுகிறார்.

உம்பர் உல கோடு உயிரெல்லாம் உந்தியில்
வம்பு மலர் மேல் படைத்தானை மாயோனை
அம்பன்ன கண்ணாள் அசோதை தன் சிங்கத்தை
நம்பனை நாடி நறையூரில் கண்டேனே

என்றும்,

கட்டேறு நீள் சோலைக் காண்டவ த்தைத் தீ மூட்டி
விட்டானை மெய்யம் அமர்ந்த பெருமானை
மட்டேறு கற்பகத்தை மாதர்க் காய் வண் துவரை
நட்டானை நாடி நறையூரில் கண்டேனே

என்றும்,

மண்ணின் மீ பாரங் கெடுப்பான் மறமன்னர்
பண்ணின் மேல் வந்த படையெல்லாம் பாரதத்து
விண்ணின் மீதேற விஜயன் தேர் ஊர்ந்தானை
நண்ணி நான் நாடி நறையூரில் கண்டேனே!

என்றெல்லாம் பாடுகிறார்.

திருவழுந்தூர் பிரானைக் கண்ணன் வடிவில் கண்டதாக ஆழ்வார் மெய் மறந்து பாடுகிறார்.

குன்றால் மாரி தடுத்தவனைக் குல வேழ மன்று
பொன்றாமை, அதனுக்கருள் செய்த போரேற்றை
அன்றாவின் நறு நெய்ய மர்தந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை அடியேன் கண்டு கொண்டு நிறைந்தேனே!

என்றும்,

கஞ்சனைக் காய்ந்தானைக் கண்ண
மங்கையுள் நின்றானை
வஞ்சனப் பேய் முனை யூடுயிர் வாய்
மடுத்துண்டானை

செஞ்சொல் நான் மறையோர் தெ
ன்னழுந்தையில் மன்னி நின்ற
அஞ்சனக் குன்றந்தன்னை யடியேன்
கண்டு கொண்டேனே

என்றும் பாடி மகிழ்கிறார். மேலும்,

கும்பமிகு மத வேழம் குலையக் கொம்பு
பறித்து மழவிடையடர்த்துக் குரவைக் கோத்து,
வம்ப விழும் மலர்க்குழலாள் ஆய்ச்சி வைத்த
தயிர் வெண்ணெயுண்டுகந்த மாயோன் காண் மின்,

என்றும் திருவழுந்தூர் பிரானை நினைத்து மகிழ்ந்து பாடுகிறார்.

திருகண்ணபுரம் சௌரிராஜப் பெருமானைக் கண்ணனாகப் பாவித்து,

குன்றால் மாரி பழுதாக்கிக்
கொடி யோ ரிடை யாள் பொருட்டாக
வன்தாள் விடை யேழன்றடர்த்த
வானோர் பெருமான் மாமாயன்
சென்றான் தூது பஞ்சவர்க்காய்த்
திரிகால் சகடம் சின மளித்து
கன்றால் விளங்காய் எறிந்தானூர்
கண்ணபுரம் நாம் தொழுதுமே!

என்று பாடி கண்ணனை ஆழ்வார் வணங்குகிறார்.

திருக்கண்ண புரத்துப் பெருமானின் தசாவதாரப் பெருமையைப் பேசும் ஆழ்வார்பிரான்,

துவரிக் கனி வாய் நில மங்கை
துயர் தீர்ந்துய்யப் பாரதத்துள்
இவரித் தரசர் தடுமாற
இருள் நாள் பிறந்த அம்மானை,
உவரி யோகம் முத்துந்த
ஒரு பால் ஒரு பால் ஒண் செந் நெல்
கவரி வீசும் கண்ண புரத்து
அடியேன் கண்டு கொண்டேனே!

என்று கிருஷ்ணாவதாரப் பெருமையைப் பாடுகிறார்,

திருக் கண்ணங் குடியில் எழுந்தருளியுள்ள சியாமள மேனிப் பெருமாளை,

பன்னிய பாரம் பார் மகட் கொழியப்
பாரத மாபெரும் போரில்
மன்னர்கள் மடிய மணி நெடுந்திண் தேரை
மைத்துனர்க்குய்த்த மாமாயன்

என்று பூபாரம் தீர்க்க வந்த கண்ணனாக பாவித்துப் பாடுகிறார்.

திருக்குறுங்குடி எம் பெருமானை ஆழ்வார்,

கவ்வைக் களிற்று மன்னர் மாளக் கலிமான் தேர்
ஐவர்க்காய் அன்ற மரில் உய்த்தான் ஊர் போலும்,

என்று பாடி மகிழ்கிறார்.

திருமாலிருஞ் சோலை மலையில் வாழும் அழகர்
பெருமானை,

பார்த்தனுக் கன்றருளிப் பாரதத் தொடு தேர்
முன் நின்று

காத்தவன் தன்னை விண்ணோர் கரு மாணிக்க
மாமலையை

தீர்த்தனைப் பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்
சோலை நின்ற

மூர்த்தியைக் கை தொழ என்று பாடுகிறார்.

திருக்கோட்டியூரில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை,

கன்று கொண்டு விளங்கனி யெறிந்து
ஆநிரைக் கழிவென்று, மாமழை
நின்று காத்து கந்தான் நில மாமகட் கினியான்
குன்றின் முல்லையின் வாசமும் குளிர்
மல்லிகை மணமும் அளைந்து இளம்
தென்றல் வந்துலவும் திருக்கோட்டி யூரானே!

என்று அழகாகப் பாடி ஆழ்வார் மகிழ்கிறார்.

திருமங்கை யாழ்வாரும் பெரியாழ்வாரைப் போல, தன்னை யசோதையாக பாவித்துக் கொண்டு, குழந்தை கண்ணனுக்குப் பாலூட்ட அவனை அழைப்பதாக மிக அருமையான பாடல்கள் சுவை மிக்க தமிழில் பாடியுள்ளார்.

தன் மகனாக வன் பேய்ச்சி
தான் முலை உண்ணக் கொடுக்க

வன் மகனாயவள் ஆவி
　　வாங்கி முலையுண்ட நம்பி
நன் மகன் ஆய் மகனோடு
　　நாநில மங்கை மணாளா!
என் மகனே அம்ம முண்ணாய்
　　என்னம்மம் சேம முண்ணாயே

என்று ஆழ்வார் பாடுகிறார்.

மீண்டும் ஆழ்வார் தன்னை யசோதையாக பாவித்துக் கொண்டு கண்ணனைச் சப்பாணிப் பருவத்தில் கண்டு களித்துப் பாடுகிறார்.

பூங்கோதை யாய்ச்சி கடை வெண்ணெய் புக்குண்ண என்று தொடங்கி, நந்தன் மகனே என்றும், பேய்ச்சி பால் உண்டவனே என்றும், சகடம் உதைத்தவனே என்றும் கூறி சப்பாணி கொட்டுமாறு கண்ணனை ஆழ்வார் அழைக்கிறார்.

கண்ணபிரான் ஆயர் பாடியில் அடுத்தவர் வீடுகளுக்குள் எல்லாம் சென்று வெண்ணெயும், பாலும் தயிரும் நெய்யும் எடுத்து உண்டு களித்தான். அதனால் கோபமடைந்த ஆய்ச்சியர் கண்ணனைக் கயிற்றால் கட்டிப் போட்டார்கள். அக்காட்சியை வைத்து திருமால் எத்தனை வல்லமை மிக்கவர், உலகை உண்டவர், இரணியன் வயிற்றைக் கிழித்துக் கொன்றவர், அனைத்து உலகங்களையும் ஈரடியால் அளந்தவர், நெடுவான் அளவுக்கு நீண்டவர், ஆயிரம் மன்னர்களை (கொடுங்கோலர்களை) தனது மழுவாயுதத்தால் அழித்திட்டவர், அரக்கர்களை வென்றவர், இலங்கை மன்னரை வென்றவர், ஏழு மராமரங்களை தனது கணையால் துளைத்தவர், அத்தகைய சர்வ வல்லமை மிக்க சாகசக்காரரா ஆய்ச்சியர்களால் கட்டுண்டார் என்று கேட்கிறார் ஆழ்வார்.

கண்ணன் செய்யும் தீம்புகளையும், வம்புகளையும் பற்றி, ஆய்ச்சியர்கள் அசோதையிடம் புகார் செய்கிறார்கள். பாலை எல்லாம் குடித்து விட்டான். வெண்ணையையெல்லாம் எடுத்து விழுங்கி விட்டான். என் மகளிடம் வம்பு செய்கிறான். இந்திரனுக்கு விழாக் காலத்தில் படைக்கவிருந்த அனைத்தையும் உண்டு விட்டான் என்றெல்லாம் முறையிடுகிறார்கள், என்றும், அதற்கு அசோதை நான் என்ன செய்வேன், அவனைக் கண்டால் எனக்கு அச்சமாக உள்ளது. அவன் பேய்ச்சி முலை உண்டவன், சகடத்தைச் சாடியவன், கஞ்சனைக் கொன்றவன் என்றெல்லாம் அசோதை கூறியதாகக் கற்பித்து ஆழ்வார் அழகு தமிழில் பாடுகிறார். இப்பாடல்களைப் பாடியோருக்கு இடரில்லை, துன்பமில்லை, இன்பமே எய்துவர் என்று பாடி மகிழ்கிறார்.

தன் மகள், கண்ணன் மீது அளவில்லாத காதல் கொண்டுள்ளாள், அவளுடன் வந்து கலக்காமல் கண்ணன் வாளாவிருக்கலாமா? காலம் கடத்தலாமா? என்று கற்பித்துக் கண்ணனை வேண்டும் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பழமொழியுடன் முடிவதாக அமைந்திருக்கிறது.

திருமங்கையாழ்வார் பாடியுள்ள இப்பாடல்கள் ஒரு சிறந்த இலக்கியமாகப் படித்து இன்புறத் தக்கதாக உள்ளது.

பிள்ளை தன் கையில் கிண்ணமே யொக்கப்
பேசுவ தெந்தை பிரானே என்றும்,
முன்றி லெழுந்த முருங்கையில் தேனா
முன் கை வளை கவர்ந்தாயே என்றும்
அங் கையில் வட்டாம் இவள் எனக்

கருதுகிறாயே எனவும்

தொண்டர் கைத் தண்டென்ற வாறே

(பெரிய திருமொழி 10)

எனவும்,

பெரு வழி நாவற் கனியினும் எளியள்

இவள் எனப் பேசுகிறாயே எனவும்

எருக்கிலைக்காக எறி மழு வோச்சல்

என் செய்வ தெந்தை பிரானே எனவும்,

கோழி வெண் முட்டைக் கென் செய்வ தெந்தாய்

குறுந்தடி நெடுங்கடல் வண்ணா

என்றும்,

கவுள் கொண்ட நீராம் இவள்

எனக்கருது கின்றாயே எனவும்,

ஆரழ லோம்பும் அந்தணன் தோட்ட

மாக நின் மனது வைத்தாயே எனவும்

எனது மகளை இத்தனை இளக்காரமாக நினைத்தாயா என்று கண்ணனைப் பார்த்துக் கேட்பதாக அமைந்துள்ள இப்பாடல் நமது நாட்டின் சாதாரண மக்களிடையில் உள்ள பண்பாட்டைச் சுட்டிக் காட்டிக் கண்ணனைத் தன் வசம் கொண்டு வர முயற்சிப்பதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

கண்ணனை நான் அடைய வேண்டும். அதற்காக, திருத்தாய் செம்போத்தே கரையாய் காக்கைப் பிள்ளாய், கூவாய் பூங்குயிலே, கொட்டாய் பல்லிக் குட்டி, சொல்லாய் பைங்கிளியே, கோழி கூவென்னு மால், என்றெல்லாம் செம்போத்தை, காகத்தை, குயிலை, பல்லியை, கிளியை, கோழியை, பரகால நாயகி கேட்பதாக ஆழ்வார் நாயகி

பாவத்தில் பாடும் இப்பாடல்கள் மிக்க இனிமையானவை. இதே போல பாரதியின் கண்ணம்மா பாடல்களிலும் காதலினிமையைக் காணலாம்.

ஆழ்வார் தன்னைப் பிராட்டியாகப் பாவித்துக் கண்ணனையும், இராமனையும் நினைந்து தான் பிரிவு நோயால் வருந்துவதாகக் கற்பித்துப் பாடும் அருமையான பாடல்கள்

குன்ற மொன் றெடுத்தேந்தி, மாமழை
அன்று காத்தவம்மான், அரக்கரை
வென்ற வில்லியார் வீரமே கொ லோ
தென்றல் வந்து தீ விசு மென் செய்கேன்

என்று தென்றல் வந்து தீ போல் வீசுவதாகவும், இன்னும் வாடைக் காற்று தன்னை வாட்டுவதாகவும் திங்கள் வெங்கதிர் (நிலவு) சீறுவதாகவும், பொங்கு மா கடல் புலம்புவதாகவும் மன்மதன் தன் ஆவியை இலக்காக வைத்து அம்பு வீசுவதாகவும், திருத்துழாய் வாசனை தான் தன்னைக் காக்கும் என்றும் பாடுகிறார்.

கண்ணனைக் காணாத கண்கள் கண்களல்ல, கண்ணன் பெருமைகளைக் கேளாத செவிகள் செவிகளல்ல. அவன் பெருமையைப் பேசாதார் பேச்சொன்றும் பேச்சல்ல, அவனைப் பாடாதார் பாட்டொன்றும் பாட்டல்ல. சங்கேந்தும் கையானைத் தொழாத கை கையல்ல, கண்ணனை நினைக்காத உள்ளம் உள்ளமல்ல, அவனுக்கு மலர் இட்டுத் தொண்டு செய்யாத தொண்டு தொண்டல்ல என்றெல்லாம் ஆழ்வார் பாடி மகிழ்கிறார்.

மனித வாழ்க்கையில் பல கஷ்டங்கள் உள்ளன. இன்னல்களும், தொல்லைகளும் நிறைந்துள்ளன. அவைகளிலிந்து ஒரு ஆறுதலும் நிவாரணமும் கிடைக்கவும், அத்தொல்லைகள் நீங்கவும் மனிதன்

அரும்பாடு படுகிறான். ஆண்டவனை வேண்டுகிறான். இந்த வாழ்க்கை அனுபவங்களை ஆழ்வார் நன்குணர்ந்து மிக அருமையான எடுத்துக் காட்டுகளைக் கூறிப் பாடுகிறார்.

வாழ்கையில் ஏற்படும் துன்ப, துயரங்கள் பற்றியும், அபாயங்களைப் பற்றியும், அச்சங்களைப் பற்றியும், ஆற்றங்கரை வாழ் மரம் போல அஞ்சுகிறேன் என்றும், காற்றத்திடைப் பட்ட கலவர் மனம் போல என்றும் இருபாடெரி கொள்ளியினுள் எறும்பு போல் என்றும், வெள்ளத் திடைப்பட்ட நரியினம் போல் என்றும், இடையன் எறிந்த மரமே யொத்திராமே (அரை குறையாக வெட்டப் பட்ட மரம் போல்) என்றும், வேம்பின் புழு வேம்பன்றியுண்ணாது என்றெல்லாம் கூறி எனக்கு உய்யும் வகை கூறுவாய் அருள் புரிவாய் என்று கண்ணனை வேண்டுகிறார்.

திருமங்கையாழ்வார் ஆழ்வார்களில் ஒரு தனித் தன்மையானவர். அவர் ஒரு வீரன். கள்ளன், கொள்ளைக்காரண், பெண் விரும்பி, பெண்ணாசை கொண்டவர், உலக வாழ்க்கையைப் பல வகைகளிலும் நன்கு அனுபவித்தவர். ஆயினும் அவருக்குத் திருமால் திருவருளால் ஞானம் பிறந்தது. நமோ நாராயணா என்னும் திருமந்திரத்தின் உட் பொருளை அறிந்து மிகவும் தீவிரமான திருமால் பக்தராகிறார். திருமாலின் எல்லா வடிவங்களையும் எல்லா பரிமாணங்களையும் அனுபவித்துப் பாடுகிறார், திருமால் குடி கொண்டுள்ள கோயில்களையும் அதன் பெருமைகளையும் அங்கு எழுந்தருளியுள்ள மூர்த்திகளின் அருமை பெருமைகளையும் அக்கோயில்கள் உள்ள திவ்ய தேசங்களின் சிறப்புகளையும் வளங்களையும் பலவாறாகச் சிறப்பித்துப் பாடுகிறார்.

கண்ணனைக் குழந்தையாகவும், நாயகனாகவும், தன் மகள் விரும்பும் மணாளனாகவும், பாவித்து ஆழ்வார் பாடுகிறார், கண்ணனுடைய வலிமை, அவனுடைய அவதார மகிமை, சாகசங்கள்,

லீலைகள், பெருமைகள் அனைத்தையும் மிக விரிவாகப் பல பாடல்களிலும் திரும்பத் திரும்பப் பாடி மகிழ்கிறார். கூறியது கூறலாக பல சொற்கள் இருப்பினும் கண்ணனின் நாமங்களை எத்தனை தடவை கூறினாலும் அதில் அலுப்பு ஏது? உயிர் உள்ளவரை சுவாசிப்பதும் உணவு உண்பதும், தண்ணீர் குடிப்பதும், குளிப்பதும், வேலை செய்வதும் எப்படி வாழ்க்கையின் பகுதியாக அமைந்து விட்டதோ அது போல கண்ணன் நாமத்தை ஆயிரமாயிரம் தடவைகள் கூறினாலும் கூட அதை வாழ்க்கையின் பகுதியாகவே ஒன்றிணைந்த பணியாகவே ஆழ்வார் பாடிப்பாடி மகிழ்ந்துள்ளார். கண்ணன் எல்லா விதமான சாகசங்களும், வல்லமையும் பேராற்றலும் கொண்டவன் ஆனாலும் அவன் தனது பக்தர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டவன் என்பதைத் தெளிவு படுத்தும் வகையில் அசோதை கைகளில் கட்டுப் படுவதையும், பாண்டவர்களின் அன்பிற்கும், பக்திக்கும் கட்டுப்பட்டு, அவர்களுக்குப் போரில் தேரோட்டி அவர்களை வெற்றி பெறச் செய்ததையும், பாஞ்சாலிக்கு மானம் காத்ததையும் ஆழ்வார் குறிப்பிடுகிறார்.

ஆழ்வார் கண்ணனைத் தத்துவப் பொருளாக இப்பேருலகில் உள்ள அனைத்துப் பொருள்களிலும் உள்ள அங்கமாக, வடிவமாக இயக்க. சக்தியாகக் காண்கிறார். இக்காட்சியையே. பாரதியிடமும் நாம் காண்கிறோம்.

## பொய்கை யாழ்வார்

பொய்கை யாழ்வார் காஞ்சி புரத்தில் ஒரு பொய்கையில் தாமரை மலரில் அவதரித்தவர் என்று ஆழ்வார்களின் வரலாறு சிறப்பாகக் குறிப்பிடுகிறது. இக்கால வழக்கில் கூறுவதானால் அதாவது லோக சம்பிரதாயத்தில் கூறுவதானால் ஒரு தாய் தனக்குப் பிறந்த குழந்தையை பொய்கையில் விட்டுச் சென்றாள் என்று கூறுவதாகும். குந்தி கண்ணனைப் பெற்றுக் கங்கையில் விட்டு

விடவில்லையா? பிறப்பால் உயர்வு தாழ்வு கூறப்பட்ட உலகில் பிறப் பறியாமல் பிறந்த ஆழ்வார்களின் ஒருவர் பொய்கை ஆழ்வார். இவர் பக்தியும், ஞானமும் பெற்றுச் சிறந்த ஆழ்வாராக பல அறிய பாடல்களைப் பாடியுள்ளார்.

நன்மையும் அறிவும் எத்திசைத் தெனினும் பாவரே காட்டினும் மற்றவை தழுவி வாழ் வீராயின் அச்சமொன்றில்லை என்று பாரதி பாடிய வரிகள் இங்கு நினைவில் கொள்ளலாம்.

"வையம் தகளியா வார் கடலே நெய்யாக,
வெய்ய கதிரோன் விளக்காக செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே" என்று

பொய்கையாழ்வார் பிரான் தனது பாசுரங்களைத் தொடங்குகிறார்.

எட்டுத்திசைகளையும் அவைகளுக்குரிய தெய்வ சக்திகளையும் அவைகளுக்கிசைவான கருமங்களையும் கண்ணனே படைத்தான் என்னும் கருத்தில்,

"திசையும், திசையுறு தெய்வமும் தெய்வத்
திசையும் கருமங்களெல்லாம் அசைவில் சீர்க்
கண்ணன் நெடுமால் கடல் கடந்த காரோத
வண்ணன் படைத்த மயக்கு."

பாரதப் போரில் அபிமன்னனைக் கொன்ற ஜயத்ரதனை அன்று மாலைக்குள் கொல்லப் போவதாகவும் முடியாவிட்டால் தான் தீயில் குதித்து சாகப் போவதாகவும் அர்ஜுனன் சபதம் கூறினான். கௌரவர்கள் ஜயத்ரதனை ஒளித்து வைத்து விட்டார்கள். பொழுது சாய்வதற்கு முன், கண்ணன் மாயமாகத் தனது சக்கராயுதத்தை

ஏவி சூரியனை மறைத்துவிட்டான். ஆகாயம் இருண்டு விட்டது. அர்ஜுனன் தீயை வளர்த்தான். அவன் தீயில் குதிக்கப் போவதை வேடிக்கை பார்க்க கவுரப்படைகளும் குவிந்தன. ஜயத்ரதனும் வந்தான். கண்ணன் சக்கரத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டான். சூரிய வெளிச்சம் வெளிப்பட்டது. அர்ஜுனன் வில்லை எடுத்து கணை தொடுத்துப் போர் செய்து ஜெயத்ரதனைக் கொன்றான் என்பது பாரதக் கதை. பாண்டவர்களைக் காக்கக் கண்ணன் இவ்வாறு ஒரு அறிய சாகசச் சூழ்ச்சியைச் செய்தான். தருமத்தை நிலை நாட்டக் கண்ணன் பல அரிய செயல்களைச் செய்தான் என்பதும் அவைகளில் இதுவும் ஒன்று என்னும் வகையில் கண்ணனுடைய செயலை வியந்து ஆழ்வார் அருமையாகப் பாடுவதைக் காண்கிறோம்.

"மயங்க வலம்புரி வாய்வைத்து, வானத்
தியங்கும் எறி கதிரோன் தன்னை முயங்கமருள்
தேராழியரால் மறைத்த தென்நீ திருமாலே
போராழிக் கையால் பொருது?"

மண்ணும் விண்ணும் விழுங்கிய உன்வாய் அவ்வளவு பெரியதா என்று வியந்து மண்ணும் மலையும் மாருதமும் விண்ணும் விழுங்கியது மெய்யென்பர் எண்ணில் அலகளவு கண்ட சீராழியாய்க்கு அன்றிவ்வுலகளவும் உண்டோ · உன் வாய்? என்று அதிசயித்துப் பாடுகிறார்.

இன்னும் கண்ணபிரானின் திருவிளையாடல்களையும் அருஞ்செயல்களையும் அதிசயித்து மேலும் பாடுகிறார்.

" நான்றமுலைத்தலை நஞ்சுண்டு உறிவெண்ணெய்
தோன்றவுண்டான் வென்றிசூழ் களிற்றை—ஊன்றி

பொருதுடைவு கண்டானும் புள்ளின் வாய்கீண்டானும்
மருதிடை போய் மண்ணளந்தமால்"

என்று பாடுகிறார்.

"விரலோடுவாய் தோய்ந்த வெண்ணெய்
கண்டு ஆய்ச்சி
உரலோடுறப் பிணித்த ஞான்று–குரலோவா
தேங்கி நினைந்த யலார் காண இருந்திலையே?
ஓங்கோத வண்ணா! உரை!"

எனவும் பாடுகிறார்.

"வரைகுடை தோள் காம்பாக ஆநிரை காத்து ஆயர்
நிரைவிடை யேழ் செற்றவாறென்னே–உரவுடைய,
நீராழியுள் கிடந்து நேரா நிசாசரர் மேல்,
பேராழி கொண்ட பிரான்."

என்று ஆநிரை காத்த அருஞ்செயல்களையும்,

"வானாகித் தீயாய் மறி கடலாய் மாருதமாய்
தேனாகிப்பாலாம் திருமாலே – ஆனாய்ச்சி
வெண்ணெய் விழுங்க நிறையுமே முன்னொரு நாள்
மண்ணை உமிழ்ந்த வயிறு"

என்று வெண்ணெய் திருடி உண்ட லீலைகளையும் வியந்து ஆழ்வார் அழகாகப் பாடுகிறார்.

## பூதத்தாழ்வார்

பூதத்தாழ்வார் மாமல்லபுரம் என்னும் திருக்கடல் மல்லையில் மாதவிப்பந்தலில் உள்ள குருக்கத்தி மலரில் தோன்றியவர் என்பது

வைணவ வரலாறு. இவ்வாழ்வாரும் பிறப்பால் சாதி அறியப்படாதவர். ஞானத்தால் வளர்ந்தவர் தமிழ் அறிந்த தனி ஞானி.

"அன்பேதகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தையிடுதிரியா – நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்"

என்று தனது திருவந்ததாதியைத் தொடங்குகிறார். பூதத்தாழ்வரின் அந்தாதி இரண்டாம் திருவந்தாதி என்று திவ்யப் பிரபந்தத்தில் அழைக்கப்படுகிறது.

பொய்கையாழ்வார் வையத்தைத் தகளியாகவும், கடலை நெய்யாகவும், கதிரோனை விளக்காகவும் வைத்துத் திருமாலைப் பாடி மகிழ்ந்து உலகத்து இடர்களெல்லாம் நீங்க வேண்டும் என்று தனது பாடல்களைத் தொடங்கினார். ஆனால் பூதத்தாழ்வார் ஞானக் கடலாக நின்று அன்பே தகளியாகவும், ஆர்வப் பெருக்கத்தையே நெய்யாகவும் வைத்து இன்பம் உருகும் சிந்தனைகளையே திரியாகவும் கொண்டு ஞானசுடர், விளக்கேற்றி, நாராயணனை, அறிவுச் செல்வமான தமிழால் பாடுவதாகக் கூறுகிறார். இரு ஆழ்வார்களின் தொடக்கமும் மிகவும் அருமையான தொடக்கமாகும். பொய்கையாழ்வாரும் திருமாலைப் பாடிய பல பாடல்களைலும் கண்ணன் பெருமைகளைப் பாடுகிறார்.

"உகந்துன்னை வாஙகி ஒளி நிறங்கொள் கொங்கை
அகம் குளிரவுண்ணென்றான் ஆவி–உகந்து
முலையுண்பாய் போல முனிந்துண்டாய்"

என்றும்,

"அன்றது கண்டஞ்சாத ஆய்ச்சி உனக்கிரங்கி
நின்று முலைதந்த இந்நீர்மைக்கு – அன்று

வரன் முறையால் நீயளந்த மாகடல் சூழ்ஞாலம்
பெருமுறையால் எய்துமோ பேர்த்து"

என்றும் பாடுகிறார்.

"பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய் மணணிரந்து
காத்தனை பல்லுயிரும் காவலனே"

என்றும்

"வழக்கன்று கண்டாய் வலிசகடம் செற்றாய்
வழக்கென்று நீ மதிக்க வேண்டா—குழக்கன்று
தீவிழவின் காய்க்கெறிந்த தீமைதிருமாலே"

என்றும்,

"மலையேழும் மாநிலங்கள் ஏழும் அதிர
குலை சூழ்குரை கடல்கள் ஏழும்—முலை சூழ்ந்த
நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவனென்று
அஞ்சாது என்னெஞ்சே! அழை".

என்றும்

"அழைப்பன் திருமாலை ஆங்கவர்கள் சொன்ன,
பிழைப்பில் பெரும் பெயரே பேசி – இழைப்பரிய
ஆயவனே, யாதவனே, என்றவனை யார்முகப்பும்,
மாயவனே என்று மதித்து," எனவும்,

"ஏறேழும் வென்றடர்த்த எந்தை எரியுருவத்து
ஏறேறிப்பட்ட இடுசாபம்— பாறேறி
உண்டதலைவாய் நிலைய கோட்டங்கை ஒண்குருதி
கண்ட பொருள் சொல்லின் கதை"

எனவும் இன்னும்,

"கதையும் பெரும்பொருளும் கண்ணா! நின்பேரே,
இதயமிருந்தவையே ஏத்தில் – கதையும்
திருமொழியாய் நின்ற திருமாலே உன்னைப்
பருமொழியால் காணப்பணி"

என்றும்,

"கடிது கொடு நரகம் பிற்காலும் செய்கை
கொடி தென்றது கூடா முன்னம் – வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல் வாய்க் கீண்டானைக்
கொங்கைநஞ்
சுண்டானை ஏத்துமினோ உற்று"

எனவும்

"மாலே! நெடியோனே! கண்ணனே விண்ணவர்க்கு
மேலா, வியன் துழாய்க் கண்ணியனே–மேலால்
விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே, என்றன்,
அளவன்றால் யானுடைய அன்பு"

என்றெல்லாம் மனமுருகி ஆழ்வார் பெருமான் பாடி மகிழ்கிறார்.

## பேயாழ்வார்

பேயாழ்வார், மயிலையில் ஒரு கிணற்றில் இருந்த செவ்வல்லிப் பூவில் பிறந்ததாக ஆழ்வார்களின் திவ்ய வரலாறு கூறுகிறது. இவரும் பிறப்பால் சாதியற்றவர் என்பது ஒரு முக்கியமான செய்தியாகும்.

பேயாழ்வார் அருளியுள்ள அந்தாதி மூன்றாம் திருவந்தாதி

எனப்பெயர் பெற்றுள்ளது. இந்த ஆழ்வாரும் ஒரு யோகி எனப் பெயரும் புகழும் பெற்றவராகும்.

“திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன் திகழும்,
அருக்கன் அணிநிறமும் கண்டேன் செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரி சங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன் பால் இன்று”

என்று தனது பாடல்களைத் தொடங்குகிறார்.

“அனடந்த தரவணைமேல் ஐவர்க்காய் அன்று
மிடைந்தது பாரத வெம்போர் – உடைந்ததுவும்
ஆய்ச்சிபால் மத்துக்கே அம்மனே, வாளெயிற்றுப்
பேய்ச்சி பாலுண்ட பிரான்” என்றும்;

“பேய்ச்சி பாலுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து
ஆய்ச்சி முலை கொடுத்தாள் அஞ்சாதே வாய்த்த
இருளார் திருமேனி இன்பவளச் செவ்வாய்
தெருளா மொழியானைச் சேர்ந்து”

எனவும்,

“உலகமும் ஊழியும் ஆழியும் ஒண்கேழ்
அலர்கதிரும் செந்தீயும் ஆவான்–பல கதிர்கள்
பாரித்த பைம்பொன் முடியான் அடியிணைக்கே
பூரித்தென் நெஞ்சே புரி” எனவும்,

"நீயன்றே நீரேற்றுலகம் அடியளந்தாய்
நீயன்றே நின்று நிலை மோய்த்தாய்–நீயன்றே
மாவாயுரம் பிளந்து மாமருதினூடு போய்,
தேவாசுரம் பொருதாய் செற்று"

எனவும்,

"பெற்றம் பிணைமருதம் பேய்முலை மாச்சகடம்
முற்றக் காத்தூடு போய் உண்டு உதைத்து–கற்றுக்
குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான் வெற்றிப்
பணிலம் வாய் வைத்து கந்தான் பண்டு"

எனவும்,

"மண்ணுண்டும் பேய்ச்சி முலையுண்டு மாற்றதாய்
வெண்ணெய் விழுங்க வெகுண்டு ஆய்ச்சி கண்ணிக்
கயிற்றினால் கட்டத்தான் கட்டுண்டிருந்தான்
வயிற்றினோடாற்றா மகன்"

எனவும், பலவாறாகப் பல பாடல்களிலும் கண்ணனைக் குறித்தும் கண்ணன் பெருமைகளையும் கண்ணனுடைய அருஞ்செயல்களையும் குறித்தும் யோக நிலையில் நின்று அருமையாக ஆழ்வார் பாடுகிறார்.

நம்மாழ்வார்

நம்மாழ்வார் ஆழ்வார்களில் முக்கியமானவர். முக்கியமானவர்களில் முக்கியமானவராகப் போற்றப்படுகிறார். வைணவப் பெரியார்களில் ஆழ்வார்கள் என்றும் ஆச்சாரியார்கள் என்றும் இரு பிரிவாக அழைக்கப்படுகிறார்கள். அதில் நம்மாழ்வார் இருபிரிவுகளிலும் சேர்க்கப்பட்டுள்ளார். எனவே அவருடைய

சிறப்புத்தன்மை அதில் வெளிப்படுகிறது. திவ்யப்பிரபந்தத்தின் நாலாயிரம் பாடல்களில் நம்மாழ்வார்தான் மிக அதிகமான பாடல்களைப் பாடியுள்ளார். அவர் பாடியுள்ள மொத்தப் பாடல்கள் ஆயிரத்தி இருநூற்றித் தொண்ணூற்றி ஆறாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

இப்பாடல்கள் நான்கு வேதங்களின் சாரமாகக் கருதப்படுகின்றன. நம்மாழ்வார் பாடிய திருவிருத்தம் ரிக் வேதத்தின் சாரமாகவும், திருவாசிரியம் யஜுர் வேதத்தின் சாரமாகவும், பெரிய திருவந்தாதி அதர்வண வேதத்தின் சாரமாகவும், திருவாய் மொழி சாம வேதத்தின் சாரமாகவும் கருதப்படுகிறது.

நம்மாழ்வாரின் பாடல்களைப் பற்றித் தனி ஆய்வு தேவைப்படுகிறது. அவர் கண்ணனைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களைப் பற்றி மட்டும் இந்நூலில் எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது.

திருமாலின் திரு அவதாரங்களிலும், இராமாவதாரமும், கிருஷ்ணவதாரமும் முறையே பூரணாவதாரமும், பரிபூரணாவதாரமும் ஆகும். அதில் கிருஷ்ணாவதாரம் வாழ்க்கையின் அனைத்தளாவிய தன்மைகளையும், அனைத்துப் பரிமாணங்களையும் கொண்டதாக அமைந்துள்ளது. எனவே கண்ணனைப் பற்றிய பாடல்கள் கருத்தாழம் மிக்கதாகவும் அதிகமாகவும் விரிவு கொண்டவைகளாகவும் உள்ளன. ஆழ்வார்களைத் தொடர்ந்து பாரதியும் கண்ணனைப் பற்றி அதிகமான பாடல்களைப் பாடியுள்ளார் என்பதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அடுத்த அத்தியாயத்தில் பாரதி கண்ணனைப் பற்றிப் பாடியுள்ளதை முழுமையாகக் காண்கிறோம்.

## திருவிருத்தம்

ரிக்வேதத்தின் சாரம் எனக்கருதப்படும் திருவிருத்தம் நூறு பாடல்களைக் கொண்டிருக்கிறது. இப்பாடல்கள் நாயகி நாயக பாவத்தின் பாடப்பட்டிருக்கிறது. ஆழ்வார் தன்னை நாயகியாக

பாவித்து மிகவும் நயமாகவும் நுட்பமாகவும் அகப்பொருளைப் பாடியுள்ளார்.

அகப்பொருளைப் பற்றி தமிழ் இலக்கியங்கள் மிகவும் நயமாகவும், நுட்பமாகவும், அழகியல் நிறைவுடனும், அழகுணர்ச்சியுடனும் விவரித்துக் கூறுகின்றன. இரதியும் மன்மதனும் காதல் தேவதைகள். மற்றவர்கள் உள்ளத்தில் காதல் உணர்வுகளைத் தூண்டக் கூடிய சக்தி படைத்தவர்கள். இரதியும் மன்மதனும் இந்திய இலக்கியங்களின் தனித்தன்மை படைத்தவர்கள். "சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை" என்னும் மிகவும் அழகான மிகச் சிறப்பான சொற்களில் அபூர்வமான கருத்துக்களை மிகவும் நுணுக்கமாக பாரதி குறிப்பிடுகிறார்.

இந்த நுட்பமான சொற்களுக்கு உலக அகப்பொருள் இலக்கியங்களில் ஈடுஇணையேயில்லை. சாதாரண நெருப்பு நெருங்கினால் சுடும், நீங்கினால் விடும் ஆனால் காதல் நெருப்போ நீங்கினால் சுடும், நெருங்கினால் விடும் என்பதை மிகவும் அழகாக, நயமாக நுட்பமாக வள்ளுவப் பேராசான் கூறுவதைக் காண்கிறோம்.

அறம்பொருள் இன்பம் வீடு என்பது மனித வாழ்க்கையின் புருஷார்த்தங்களாகும் என்று இந்து தர்மம் கூறுகிறது. இவைகடினமான உண்மைகள். இவையனைத்தையும் ஆண்டவனோடு இணைத்துப் பக்தர்கள் பரவசப்பட்டுப் பாடியிருக்கிறார்கள். அறத்தோடு, அற வாழ்க்கையோடு இணைத்து ஆண்டவனைப் பாடியிருக்கிறார்கள். உலக வாழ்க்கை, உலக மக்கள் நலன்கள் லௌகீக நலன்கள், வாழ்க்கை, அதற்கான பொருளாயத சௌகர்யங்கள், அறுசுவை உணவும் பால் படைப்புகளும், ஆடை ஆபரணங்கள், நல்ல வீடு வாசல் வசதிகள், நகை நட்டு, குடும்ப நலன்கள் விருத்து உபசாரங்கள், ஆடல் பாடல், இசை, முதலிய பல இனிமையான வாழ்க்கை வசதிகள் பலவற்றையும் ஆண்டவனோடும், கோவில்கள், கோவில் பூசைகள் முதலியவற்றுடனும் இணைத்து

ஆழ்வார்கள் பக்தி உணர்வுடன் பாடல்கள் பலவற்றையும் பாடியிருக்கிறார்கள்.

மனித வாழ்க்கையின் மய்யமாக இருப்பது மகிழ்ச்சிகரமான குடும்ப வாழ்க்கையாகும். சொல்லப் போனால் உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளுக்கும் ஆண் பெண் கூட்டு வாழ்க்கையே மய்யமானதாகும். ஆனால் ஆறு அறிவு படைத்த மனிதன் தனது ஆண் பெண் கூட்டுவாழ்க்கையை முறைப்படுத்தியிருக்கிறான் என்று கூறலாம். அதிலும் இந்திய தர்மம், இந்தியக் குடும்ப வாழ்க்கைக்குத் தனியான இலக்கணம் வகுத்து அதை ஒரு தலை சிறந்த அமைப்பாக சமுதாயத்தின் அனைத்துத் துறைகளுக்கும் அடிப்படையாக நெறிப்படுத்தியுள்ளது.

குடும்ப வாழ்க்கையின் மய்யமாக இருப்பது குடும்பத் தலைவி–தலைவன் ஆகியோரின் இன்பகரமான இணைப்பான நெறிமுறைகளுக்குட் படுத்தப்பட்ட இல்வாழ்க்கையாகும். மனைமாட்சியாகும். இன்னும் நமது பாரத சமுதாயத்தின் குடும்ப அமைப்பு, நமது நாட்டின் பொருளாதாரத்தில் கூட அதாவது உற்பத்தி சேமிப்பு, பராமரிப்பு, வினியோகம் நுகர்வு முதலிய செயல்பாடுகளுக்கும் குடும்ப அமைப்பே அடிப்படை அங்கமாக உருவாக்கப்பட்டிருக்கிறது. இதில் பாரதம் உயர்வான நிலையை எட்டியிருக்கிறது.

இத்தகைய முறையிலான குடும்பத் தலைவி–தலைவரின் நல்லுறவுகளை ஆதரமாக வைத்து அன்பையும் அறனையும், பாசத்தையும் பாசப் பிணைப்பையும் ஆதாரமாக வைத்து ஆழ்வார்கள் ஆண்டவனையும் நாயக–நாயகி பாவத்தில் இசைபடப்பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். குடும்ப உறவுகளுக்கு, மனைமாட்சிக்கு ஒரு புனிதத் தன்மையை உருவாக்கிக் கொடுத்திருக்கிறார்கள்.

நம்மாழ் வாரும் தன்னுடைய திருவிருத்தத்தைத் திருமாலுடன்

கண்ணனுடன் இணைந்து நாயகி–நாயக பாவத்தில் பாடியுள்ளார். நாயகி– நாயக பாவத்தில் மய்யமாக இருப்பது அன்பு, காதல், மோகம், சேர்க்கை, பிரிவு ஊடல், கூடல், தூது, மனைமாட்சி முதலியனவாகும். தலைவி, தலைவனுக்குத் துணையாக தோழி, செவிலி, பாங்கி, தோழன், பாங்கன் ஆகியோரும், தூதாக நெஞ்சமும், மேகமும், பறவைகளும் வருகிறார்கள். பருவகாலங்கள், காலை, மாலை, இரவு, வெயில், குளிர், வெப்பம், தூரல் மேக மூட்டம், தென்றல், குளிர்ந்த காற்று வெப்பமான காற்று, மலர்கள், மணம், முதலிய இன்பமும் துன்பமும் விளைவிக்கின்ற பல காரணிகளும் வருகின்றன. இவையெல்லாம் மிக்க நயமாக, மிகுந்த சுவையுடன் எல்லாவற்றிற்கும் மேலாக பக்திரசம் இணைந்து பாசத்துடன் பாடல்கள் பாடப்படுகின்றன.

எம்பெருமானிடம் ஆழ்வார் விண்ணப்பம் செய்கிறார். அத்துடன் பாடல் தொடங்குகிறது.

"பொய் நின்ற ஞானமும் பொல்லா
வொழுக்கும் அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனிய
முறாமை, உயிரழிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்
தாய் இமையோர் தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளாய், அடி
யேன் செய்யும் விண்ணப்பமே!"

என்று திருமாலிடம் தான் செய்த விண்ணப்பத்தை எடுத்துக் கூறுகிறார்.

"சூட்டு நன்மாலைகள் தூயன
வேந்தி விண்ணோர்கள் நன்னீர்

ஆட்டிய தூபம் தராநிற்க
வேயங்கு, ஓர்மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்
போந்தி மில் எற்றுவன் கூன்
கோட்டிடை யாடினை கூத்து அட
லாயர்தம் கொம்பினுக்கே”

என்று தலைவனை வியந்து கூறுகிறார்.

நானிலம் வாய்கொண்டு நன்னீர்
அறமென்று கோது கொண்ட
வேனிலம் செல்வன் சுவைத்துமிழ்
பாலை, கடந்த பொன்னே!
கால்நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும்,
கண்ணன் வெஃகாவுது அம்பூந்
தேனிளஞ் சோலையப் பாலது, எப்
பாலைக்கும் சேமத்ததே!

என்று கண்ணன் தனது இருப்பிடத்தைக் காட்டுகிறான்.

அன்னம் செல்வீரும் வண்டானம் செல்
வீரும் தொழுதிரந்தேன்
முன்னம் செல்வீர்கள் மறவேல் மினோ
கண்ணன் வைகுந்தனோடு
என்னெஞ்சினாரைக் கண்டால் என்னைச்
சொல்லி அவரிடை நீர்,

இன்னஞ் செல்வீரே, இதுவோ
தகவென்றிசை மின்களே!

என்று தலைவி அன்னத்தையும் வண்டுகளையும் தூது விடுகிறாள். ஆழ்வார் தன்னைத் தலைவியாகப் பாவித்துப் பாடியுள்ளது இப்பாடல்.

“ நியமுயர் கோலமும் பேரும்
உருவும் இவையிவை யென்று
அறமுயல் ஞானச்சமயிகள்
பேசிலும் அங்கெங்கெல்லாம்
உறவுயர் ஞானச் சுடர் விளக்
காய்நின்ற தன்றி யொன்றும்
பெறமுயன்றார் இல்லையால் எம்பி
ரான் தன் பெருமையையே

என்று தலைவி, தலைவனது பெருமையைப் புகழ்ந்து கூறுகிறாள்.

சுருங்கவுறி வெண்ணெய் தொடுவுண்ட
கள்வனை, வையமுற்றும்
ஒருங்கற வுண்ட பெருவயிற்
றாளனை, மாவலி மாட்டு
இருங்குறள் ஆகி இசைய வோர்
மூவடி வேண்டிச் சென்ற
பெருங்கிறி யானையல்லால் அடி
யேன் நெஞ்சம் பேணலதே

என்று தலைவி உறுதியாகக் கூறுகிறாள் மேலும்,

" துஞ்சா முனிவரும் அல்லா
தவரும் தொடர நின்ற
எஞ்சாப் பிறவி இடர்கடி
வான், இமையோர் தமக்கும்
தன் சார்விலாத தனிப்பெரு
மூர்த்தி தன்மாயம் செவ்வே
நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெய்
ஊண் என்னும் ஈனச் சொல்லே"

என்றாலும்,

"ஈனச் சொல்லாயினுமாக
எறிதிரை வையம் முற்றும்,
ஏனத்துருவாய் இடந்த பிரான்
இருங்கற்பகம் சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும்
மற்றெல்லாய வர்க்கும்
ஞானப்பிரானையல் லாலில்லை
நான்கண்ட நல்லதுவே" என்று,

தலைவி தலைவனிடம் உள்ள அன்பின் உறுதியைக் கூறுவதாகப் பாவித்து ஆழ்வார் அழகாகப் பாடுகிறார்.

திருவாசிரியம்

திருமாலின் பெருமைகளையும் குணங்களையும் அனுபவிக்கும் பொருட்டு, அவரைத் தேடி பரமபதம் செல்ல வேண்டியதில்லை. அந்த பகவானே நம்மைத் தேடி வந்து அவனது பெருமைகளையும்

குணங்களையும் நம்மை உணரச் செய்வார் என்பது வைணவ சம்பிரதாயத்தின் சாரமாகும். மனிதன் எல்லா நலன்களையும் பகவானுடைய அருளையும் இவ்வுலகிலேயே பெறலாம். வேறு எங்கோ செல்ல வேண்டியதில்லை என்னும் கருத்து வைணவத்தின் தனிச் சிறப்புமிக்க கருத்தாகும்.

இதையே பாரதி, எல்லா நலன்களையும் இவ்வுலகத்திலேயே, இக வாழ்விலேயே கொண்டு வருவோம் என்று தனது பல பாடல்களிலும் உறுதிப்படக் கூறுகிறார். வீடுபேறு என்பது, முழுவிடுதலை என்பதாகும். அம்முழுவிடுதலை என்பது வேறு உலகில் அல்ல, இவ்வுலகிலேயே இவ்வுலக வாழ்க்கையிலேயே நிலைநாட்ட வேண்டும் என்பது பாரதியின் கொள்கை நிலையாகும்.

ஆழ்வாரும் தனது பாடல்களில் பகவான் பெருமைகளை இவ்வுலகிலேயே காண்கிறார்.

நளிர் மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்
தளிரொளி இமையவர் தலைவனும் முதலா
யாவகையுலகம் யாவரும் அகப்பட
நில, நீர், தீ, கால், சுடர் இரு விசும்பும்,
மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க
ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதும்,
அகப்படக்கரந்து, ஓர் ஆலிலை சேர்ந்தாவம்
பெருமா மாயனையல்லது
ஒருமா தெய்வம் மற்றுடைய மோயாமே!

என்று ஆழ்வார் பாடுகிறார்.

பெரிய திருவந்தாதி

உலக வடிவில் உள்ள கண்ணனையே என் நெஞ்சிற்கண்

அடக்கி வைத்திருக்கிறேன். எனவே என்னை விடப் புகழ் பெற்றோர் யாருமில்லை என்று ஆழ்வார் கூறுகிறார்.

“என்னில் மிகு புகழார் யாவரே பின்னையும் மற்
றெண்ணில் மிகு புகழேன் யானல்லா என்ன
கருஞ்சோதிக் கண்ணன் கடல் புரையும் சீலம்
பெருஞ்சோதிக்கென் னெஞ்சாட் பெற்று!”

என்றும்

“பெற்றதாய் நீயே, பிறப்பித்த தந்தை நீ
மற்றையாரா வாரும் நீபேசில் – எற்றேயோ
மாய! மாமாயவளை மாய முலைவாய் வைத்த
நீயம்மா, காட்டும் நெறி”

என்றும் ஆழ்வார் பாடுகிறார்

கண்ணா! என்னை விட்டு நீங்கப் பார்க்கிறாயா? உன்னை விடமாட்டேன் என்று கூறி,

“நெறி காட்டி நீக்குதியோ, நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ மேனாள்–அறியாமை
என் செய்வானெண்ணினாய் கண்ணனே ஈதுரையாய்
என் செய்தால் என்படோம் யாம்?”

என்று பாடுகிறார்.

கண்ணனுடைய கால்களைப் பற்றிக் கொண்டு அவைகளை வாழ்த்துவேன். அதைவிட வேறு எந்த உபதேசத்தையும் கேட்கமாட்டேன் என்று ஆழ்வார் பேசிக் கொண்டு,

"நீயன்றே ஆழ்துயரில் வீழ்விப்பான் நின்று ழன்றாய்!
போயொன்று சொல்லியென்? போநெஞ்சே நீயென்றும்
காழ்த்துபதேசம் தரினும் கைக் கொள்ளாய் கண்ணன்தாள்
வாழ்த்துவதே கண்டாய் வழக்கு"

என்று பாடுகிறார்.

"சென்றங்கு வெந்நரகில் சேராமல் காப்பதற்கு
இன்றிங்கென் னெஞ்சால் இடுக்குண்ட–அன்றங்குப்
பாருருவும் பார் வளைத்த நீருருவும் கண் புதைய,
காருருவன் தான் நிமிர்த்த கால்"

என்று பாடுகிறார்.

"ஆரானும் ஆதானும் செய்ய அகலிடத்தை
ஆராய்ந்து திருத்தலாவதே? – சீரார்
மனத்தலைவன் துன்பத்தை மாற்றினேன் வானோர்,
இனத் தலைவன் கண்ணனால் யான்

என்று கண்ணனைப் பற்றிக் கொண்டு எனது மனக்கவலைகளையெல்லாம் தீர்த்துக் கொண்டேன் என்று நெஞ்சுருகிப் பாடுகிறார். அத்துடன் கண்ணனுக்கே தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு,

"அவனாம் இவனாம், உவனாம் மற்றும்பர்
அவனாம் அவனென்றிராதே – அவனாம்
அவனே எனத் தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்
அவனே எவனேலும் ஆம்" என்று

பாடுகிறார்.

"வலியம் என நினைந்து வந்தெதிர்த்த மல்லர்,
வலிய முடியிடிய வாங்கி – வலிய நின்
பொன்னாழிக் கையால் புடைத்திடுதி கீளாதே
பன்னாளும் நிற்கும் இப்பார்" என்று,

கண்ணன் கருணையால் இவ்வுலகம் என்றென்றும், தீயோரை நீக்கி நல்லோரைக் காத்து நிலைத்திருக்கும் என்று பாடுகிறார்.

"வானோம் அறிகடலோ மாருதமோ தீயகமோ
கானோ ஒருங்கிற்றும் கண்டில மால்–ஆனீன்ற
கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள் பணிந்தோம்
வன்துயரையாவா மருங்கு" என்று

பாடிக் கண்ணன் தாள் பணிந்தோம், துயர் நீங்கினோம். இனி எந்தக் கவலையுமில்லை என்று கூறுகிறார்.

"என்றும் ஒருநாள் ஒழியாமை யானிரந்தால்
ஒன்றும் இரங்கார் உருக்காட்டார்–குன்று
குடையாக அகாத்த கோவலனார், நெஞ்சே"

புடைதான் பெரிதோ புவி, என்று பாடி குன்றைக் குடையாகப் பிடித்து ஆநிரை காத்த கோவலனுடைய காட்சியை எப்போது காண்பேன் என்று கூறுகிறார்.

"அயர்ப்பாய், அயராப்பாய் நெஞ்சமே! சொன்னேன்
உயப்போம் நெறியிதுவே கண்டாய்–செயற்பால
அல்லவே செய்கிறுதி நெஞ்சமே – அஞ்சினேன்
மல்லர்நாள் வவ்வினனை வாழ்த்தி" எனவும்,
"வாழ்த்தி அவனடியைப் பூப்புனைந்து நின் தலையைத்
தாழ்த்திருகை கூப்பென்றால் கூப்பாது – பாழ்த்தவிதி

எங்குற்றாய் என்றவனை எத்தா தென் நெஞ்சமே
தங்கத்தானா மேலும் தங்கு"

என்றும் கண்ணனை வாழ்த்தி வணங்குகிறார் நம்மாழ்வார் பெருமான்.

## திருவாய்மொழி

நம்மாழ்வார் அருளியுள்ள திருவாய்மொழிப் பாடல்கள் ஆயிரத்திற்கும் மேற்பட்ட அருமையான பாடல்களாகும்.

கண்ணனே தந்தையும் தாயுமாவான் என்று பாடுகிறார்.

"வளவே ழுலகின் முதலாய்
வானோரிறையை அருவினையேன்,
களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட
கள்வா என்பன் பின்னையும்
தளவேழ் முறுவல் பின்னைக்காய்
வல்லான் ஆயர் தலைவனாய்
இளவே றேழும் தழுவிய
எந்தாய் என்பன் நினைந்து நைந்தே"

என்றும்,

"மாயோம் தீய அலவலைப்
பெருமா வஞ்சப் பேய்வீய
தூய குழவியாய் விடப்பால்
அமுதா அமுது செய்திட்ட
மாயென் வானோர் தனித்தலைவன்
மலராள் மைந்தன் எவ்வுயிர்க்கும்

தாயோன் தம்மான் என்னம்மான்

அம்மா மூர்த்தியைச் சார்ந்தே!

என்றும் பாடுகிறார்.

ஆயர்கொழுந்தாகிய கண்ணனே எல்லோருக்கும் நலம் பயப்பவன் என்றும், நம்மைக் காக்கும் நன் மருந்து எனவும் கண்ணனை வழிபட்டு எனது மாயப்பிறவியின் மயக்கம் தீர்ந்தேன் என்றும், கண்ணனை நான் விட மாட்டேன் என்றும், அதேபோலக் கண்ணனுக்கும் என் நெஞ்சை விட்டுப் பிரிய முடியாது என்றும், அல்லும் பகலும் அவனையே பாடி மகிழ்வேன் என்றும் பாடுகிறார். இப்பாடல்களைப் பாடினால் எல்லா நோய்களும் தீரும் என்றும் ஆழ்வார் பாடுகிறார்.

கண்ணபிரான் என்னைச் சுற்றிலும் உள்ளான் என்றும், என் அருகில் வந்தான் எனவும் என் கண்களிலும் இதர புலன்களிலும், நெற்றியிலும் உள்ளான் என் தலை உச்சியில் நிலையாக அமர்ந்துள்ளான் என்றும் இப்பாடல்களைப் பாடினால் கண்ணனடி சேரலாம் எனவும் பாடுகிறார்.

கண்ணா, என்னை விட்டு விடாதே என்று கூறி,

"வேவாரோ வேட்கை நோய் மெல்லாவி உள்ளுலர்த்த
ஓவாதிராப்பகல் உன்பாலே வீழ்த் தொழிந்தாய்
மாவாய்ப்பிளந்து மருதிடை போய் மண்ணளந்த
மூவா, முதல்வா, இனிஎம்மைச் சோரேலே"

என்று பாடுகிறார்.

ஆழ்வார் தன்னை ஒரு தாயின் அன்பு மகளாக பாவித்து, அவளது தாய், தன் மகள் கண்ணனை நினைந்து வருந்துவதாகக் கற்பித்து அழகிய பாடல்களை பாடியுள்ளார்.

கண்ணனது வாய் செம்பவளம், கை, பாதம், கண்கள் தாமரை மற்ற உறுப்புகள் இதழ்கள் என்று கற்பித்து ஆழ்வார் பாடுகிறார்.

"ஆரா அமுதமாய் அல்லாவியுள் கலந்த
காரார்கரு முகில் போல் என்னம்மான் கண்ணனுக்கு,
நேராவாய் செம்பவளம் கண்பாதம்கை கமலம்
பேரார நீண் முடிநாண் பின்னும் இழை பலவே"

என்பது ஆழ்வாரின் பாடலாகும்.

நான் எத்தனை பிறவி எடுத்தாலும், இறந்தபின் சுவர்க்கமோ, நரகமோ எந்த கதி கிடைத்தாலும், கண்ணா உன்னை நான் மறவேன் என்று ஆழ்வார் கூறுகிறார்.

சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக எய்தற்க யானும்
பிறப்பில் பல்பிறவிப் பொருமானை
மறப் பொன்றின்றி என்றும் மகிழ்வேனே

என்று ஆழ்வார் பாடுகிறார்.

உலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் கண்ணனே, ஆன்மாக்கள் அனைத்தும் கண்ணனே என்றும், கண்ணனே எல்லாப் பொருள்களும் ஆன்மாக்களும் என்றும் பொருள்பட "புகழும் நல்லொருவன் என்கோ" என்று தொடங்கி, "யாவையும் யவரும் தானாய்" என்று முடியும் பாடல்கள் பத்தும் தத்துவ ஞானப் பொருள் நிறைந்த பாடல்களாகும். இப்பாடல்கள் ஏற்கனவே முதல் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

கண்ணனின் பெருமை குறித்து மேலும் பாடுகிறார்.

"சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு
ஆதியஞ் சோதி யுருவை அங்கு வைத்திங்கு பிறந்த
வேத முதல்வனைப் பாடி வீதிகள் தோறும் துள்ளாதார்,
ஓதியுணர்ந்தவர் முன்னா என் சவிப்பார் மனிசரே,

"மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப்பிறவி பிறந்த
தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கடல்
சேர்ந்தபிரானை
கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை
அமுதை
முனிவின்றி ஏத்திக் குனிப்பார் முழுதுணர்
நீர்மையினாரே"

"நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்கருள் செய்து நின்று
பார்மல்குசேனை அவித்த பரஞ்சுடரை நினைந்தாடி
நீர்மல்கு கண்ணின ராகி நெஞ்சம் குறைந்து நையாதே
ஊர்மல்கி மோடுபருப்பார் உத்தமர் கட்கென்செய்வாரே"

என்றெல்லாம் ஆழ்வார் ஆனந்தமாகப் பாடி மகிழ்கிறார்.

கண்ணனின் அடியார்கள், கண்ணனைப் பணிவோர்கள், கண்ணனின் அடியார்க்கு அடியார்கள் ஆகியோரே எம்மை ஆள்பவர் என்றும், கண்ணனை நினைப்பவரே எம்மைக் காப்பவர் என்றும் அவர்களே எம்மை உய்விப்பவர் என்றும் ஆழ்வார் பாடுகிறார்.

கண்ணனைப் பாடினால் தட்டுப்பாடு இருக்காது. துன்பங்களே நம்மைத் தொடாது. இடையூறே நமக்கு இல்லை. துயரங்கள் நீங்கும்.

அல்லல்கள் அகலும். துக்கமும் தளர்ச்சியும் இருக்காது. கேடின்றி வாழ்வேன். மூவுலகத்தின் தலைமை எனக்குக் கிடைக்கும், என்று ஆழ்வார் பாடுகிறார்.

பாரதியும் துன்பமும் துயரமும் தீர வேண்டும், அல்லல்கள் அகல வேண்டும். இடையூறுகளும் தட்டுப்பாடுகளும் நீங்க வேண்டும் துக்கமும் தளர்ச்சியும் போக வேண்டும். கேடுகள் அனைத்தும் மாய வேண்டும். உலகத் தலைமை நமக்குக் கிட்ட வேண்டும் என்று பல பாடல்களிலும் குறிப்பிடுகிறார்.

உலகில் எதைக் கண்டாலும் அதைத் திருமாலை, கண்ணனைக் கண்டது போல, ஆழ்வார் காண்பதாகத் தன்மகள் அவ்வாறு காண்பதாகத்தாய் கூறுவதாக இனிய பாடல்களை ஆழ்வார் பாடுகிறார்.

" நின்ற குன்றத்தினை நோக்கி
நேடுமாலே வா என்று கூவும்
நன்று பெய்யும் மழை காணில்
நாரணன் வந்தான் என்றும்,"

"கூத்தர் குட மெடுத்தாடில்
கோவிந்தனாம் என ஓடும்
வாய்த்த குழலோசை கேட்கில்
மாயவன் என்றுமையாக்கும்
ஆய்ச்சிகள் வெண்ணெய்கள் காணில்
அவனுண்ட வெண்ணெயீதென்றும்,
நிறுசெவ்வேயிடக் காணில்
நெடுமால் அடியார் என்றோடும்

நாறுதுளாய் மலர் காணில்
நாரணன் கண்ணியீ தென்னும்"

" திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும்
உருவுடை வண்ணங்கள் காணில்
உலகளந்தான் என்று துள்ளும்
கருவுடைத்தே வில்களெல்லாம்,
கடல் வண்ணன் கோயிலே என்னும்
விரும்பிப் பகைவரைக் காணில்
வியலிடம் உண்டானே என்னும்
கரும்பெரும் மேகங்கள் காணில்
கண்ணன் என்றேறப் பறக்கும்
பெரும்புல ஆநிரை காணில்
பிரானுளன் என்று பின்செல்லும்,"

என்றெல்லாம் கண்ணன் காட்சியை ஆழ்வார் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

கண்ணனைப் பாடுகிறேன். அவன் இருப்பைக் கண்டு இன்புறுகிறேன். எனக்கு ஒரு குறையும் இல்லை. என்னைப் பிடித்த நோய்கள் எல்லாம் அழிந்து விட்டன. மெய் மறந்தேன். தீவினைகள் அழிந்தன. எனக்கு இனி எந்தக் குறையுமில்லை. எல்லையில்லாத இன்பத்தையடைந்தேன் என்றெல்லாம் பாடுகிறார்.

கண்ணன் விரும்பாத நிறமும், நெஞ்சும், அடக்கமும் தளிர் நிறமும், அறிவும் கிளர் ஒளியும், வரிவளையும், மேகலையும், இவ்வுடம்பும் ஆத்மாவும் வேண்டாம் என்று தலைவி கூறுவதாக அருமையான பாடல்களை ஆழ்வார் பாடுகிறார்.

"மாறு சேர்படை நூற்றுவர் மங்க வோரைவர்க்
காய் அன்று மாயப் போர் பண்ணி
நீறுசெய்த எந்தாய்! நிலங்கீண்ட அம்மானே,

என்றும்,

"புள்ளின்வாய் பிளந்தாய் மருதிடை போயினாய்
எருதேழி அடர்த்த, என்,
கள்ளமாயவனே! கருமாணிக்கச் சுடரே,

என்றும் பாடுகிறார்.

"பிறந்தவாறும் வளர்ந்தவாறும்
பெரிய பாரதம் கைசெய்து ஐவர்க்குத்
திறங்கள் சாட்டியிட்டுச் செய்து போன மாயங்களும்

"வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும்
மாய மாவினை வாய் பிளந்ததும்
மதுவைவார் குழலார் குரவை பிணைந்த குழகும்,

"பெய்யும் பூங்குழல் பேய் முலையுண்ட
பிள்ளைத் தேற்றமும் பேர்ந்தோர் சாடிறச்
செய்ய பாத மொன்றால் செய்த நின் சிறுச் சேவகமும்,

"கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப்
புறம் புக்கவாறும் பலந்த சுரரை
உள்ளம் பேதம் செய்திட்டுயிருண்ட உபாயங்களும்
உண்ண வானவர் கோனுக்காயர்
ஒருப்படுத்த அடிசில் உண்டதும்,

வண்ணமால் வரையையெடுத்து மழை காத்ததும்,
மண்ணை முன் படைத்துண்டு மிழ்ந்து
கடந்திடந்து மணந்த மாயங்கள்,

"நின்றவாறும், இருந்த வாறும், கிடந்தவாறும்
நினைப்பரியென
ஒன்றலா உரு வாய் அருவாய நின் மாயங்கள்,

என்றெல்லாம் கண்ணனின் மாயங்களையும் உபாயங்களையும் புகழ்ந்தும் வியந்தும் ஆழ்வார் பாடுகிறார்.

குருகினங்களையும், கருநாராய்களையும், புள்ளினங்களையும், அன்னங்களையும், குயில்களையும், கிளிகளையும், நாகணவாய்ப் பறவைகளையும், வண்டிணங்களையும் எம்பெருமானிடத்திற்குத் தூது அனுப்புவதாக அருமையான பாடல்களை ஆழ்வார் சிறப்பாகப் பாடியுள்ளார்.

"குரவையாய்ச் சியரோடு கோத்ததும்
குன்ற மொன்றேந்தியதும்
உரவு நீர்ப்பொய்கை நாகம் காய்ந்ததும்

"கேயத்துங்குழல் ஊதிற்றும் நிரை மேய்த்த
தும் கெண்டை யொன்கண்
வாசப்பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும்

"நிகரில் மல்லரைச் செற்றதும் நிரை
மேய்த்ததும் நீணெடுங்கைச் சிகரமாகளிறட்டதும்
நோவ ஆய்ச்சி உரலோடார்க்க
இரங்கிற்றும் வஞ்சப் பெண்ணைச்

சாவப் பாலுண்டதும் ஊர்சகடம்
இறச் சாடியதும்,

"வேண்டித் தேவரிரக் கவந்து
பிறந்ததும் வீங்கிருள் வாய்
பூண்டன்றன்னை புலம்பப் போய் அங்கோர்
ஆய்க்குலம் புக்கதும்,

"காண்டல் இன்றி வளர்ந்து கஞ்சனைத்
துஞ்ச வஞ்சம் செய்ததும்,
இகல்கொல் புள்ளைப் பிளந்ததும் இமில்
ஏறுகள் செற்றதுவும்
உயர் கொள் சோலைக் குருந்தொ சித்ததும்,

"மனப்பரிப்போடு அழுக்கு மாநிட
சாதியில் தான் பிறந்து
தனக்கு வேண்டு ருக் கொண்டு தான்றன
சீற்றத்தினை முடிக்கும்
புனத்துளாய் முடிமாலை மார்பனென்
அப்பன் தன் மாயங்களே!

நீணிலத் தொடுவான் வியப்ப நிறைபெரும்
போர்கள் செய்து
வாணனாயிரம் தோள் துணித்ததும்

"கலக்க வேழ்கடல் ஏழ்மலையுலகே
ழும் கழியக்கடாய்
உலக்கத்தேர் கொடு சென்ற மாயமும்

"மண்மிசைப் பெரும்பாரம் நீங்க வோர் பாரத
மாபெரும் போர்
பண்ணி, மாயங்கள் செய்து சேனையைப்
பாழ்பட நூற்றிட்டுப் போய்
விண்மிசைத் தனதாம மேபுக
மேவிய சோதி தன்தாள்
நண்ணி நான் வணங்கப் பெற்றேன்"

என்று கண்ணனின், லீலைகளை, பெருமைகளை, புகழை, மாயங்களைப் பலவாறாகப்பாடி, நம்மாழ்வார் மகிழ்கிறார். கண்ணனைப் பாடுவதால், தான் நிறைவு பெறுவதாகவும், தனக்கு நிகர் யாருமில்லை என்றும், தனக்கு எந்தவிதத் துன்பமும் நேராது என்றும், தனக்கு எவ்விதத் துக்கமும் கலக்கமும், பகையும் எதுவும் இல்லை என்றும் பாடிப்பாடி மகிழ்ச்சியடைகிறார்.

உண்ணும் சோறு, பருகு நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்று திருக்கோளூர் பிரானைக் குறித்துப் பாடுகிறார்.

புள்ளினங்களை, கிளிகளை, வண்டினங்களை, தும்பிகளை, பூவைகளை, பதுமைகளை, பெருநாரைகளை, அன்னங்களை யெல்லாம் ஆழ்வார் தான் நாயகி பாவத்தில் இருந்து கண்ணனிடம் தூது அனுப்புகிறார். தூது அனுப்பியும் கண்ணபிரான் வரவில்லையென்று உரக்கக் கூவி வாராய் வாராய் என்று எம்பெருமானை அழைக்கிறார்.

மண்ணும் விண்ணும் மகிழ்வெய்திட வாராய் என்று கூவியழைக்கிறார். அம்மானே! உயிர் காப்போனே! பெருமானே! எங்கும் நிறைந்தவனே, மாயோனே! உலகுக்கு உயிரானவனே! சோதி மூர்த்தி என்றெல்லாம் கூவி அழைத்துக் கூப்பிடுகிறார்.

ஆழ்வார் நாயகி பாவத்திலிருந்து கண்ணனின் அழகை, கண்ணபிரானின் திருக் கண்கள், திருமூக்கு, பவளவாய், புருவம், அவனுடைய புன்முறுவல், திருச்செவிகள், திருநுதல், திருமுகம், திருக்குழல், திருமுடி, ஆகியவற்றின் அழகை ஆழ்ந்து அனுபவித்துப் பாடுகிறார். உலகை அறிவதில் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களின் பங்கு மிக முக்கியமானது. இவற்றை ஒருங்கிணைத்து ஒருமுகப்படுத்தி, ஒரு முனைப்படுத்தி, பகுத்தறிவதன் மூலம் உலகைப் பற்றிய பட்டறிவு தொட்டறிவு பகுத்தறிவு விரிவுபடுகிறது. ஆழ்வார் கண்ணபிரானின் அங்கக் கூறுகளின் அழகை உணர்ந்து அவைகளைப் பற்றிக் கூறும்போது, அவைகளின் செயல்திறன்களின் சிறப்பையும் மனதில் கொண்டு பேசுகிறார், பாடுகிறார்.

"எமக்குத் தொழில் கவிதை, நாட்டுக் குழைத்தல்" என்று பாரதி கூறுகிறார். அத்துடன், அவர்,

பண்டைச் சிறுமைகள் போக்கி
என்னாவில் பழுத்த சுவைத்
தெண்டமிழ்ப் பாடல் ஒரு கோடி
மேவிடச் செய்குவை யே

என்று பாடுகிறார். ஆண்டவனை வேண்டுகிறார்.

என்றைக்கும் என்னை உய்யக் கொண்டு போகிய
அன்றைக் கன்றென்னைத் தன்னாக்கி யென்னாய்
தன்னை

இன்றமிழ் பாடிய ஈசனை யாதியாய்

நின்றவென் சோதியை என் சொல்லி நிற்பனோ?

என்று தனக்குப் பாடும் திறனைக் கொடுத்த ஈசனைப் பாராட்டிப் பாடுகிறார்.

பகவானைக் கண்டு அவனது வடிவழகைக் கண்டு கழிக்கவும், பாடவும் விரும்புகிறார். கண்ணன்தான் எல்லாவிடத்திலும் எங்கும் நிறைந்திருக்கிறானே! கறந்த பாலுள் நெய்யாக நிறைந்திருக்கிறானே என்று பாடுகிறார்.

"பிறந்த மாயா! பாரதம்

பொருதமாயா, நீயின்னே

சிறந்த கால், தீ, நீர், வான், மண்

பிறவும் ஆய பெருமானே!

கறந்த பாலுள் நெய்யே போல்,

இவற்றுள் எங்கும் கண்டுகொள்

இறந்து நின்ற பெருமாயா!

உன்னை எங்கே காண்கேனே!"

என்று பாடுகிறார்.

ஆழ்வாருக்குக் கண்ணன் தனது உடலிலும், உயிரிலும், உணர்விலும் கலந்துவிட்டான், இணைந்துவிட்டான் என்று உணர்கிறார். மிகவும் உயர்ந்த மேலான தத்துவ நிலையில் ஆழ்வார் கண்ணனை இணைத்துக் கொள்கிறார். எனவே தெருளும், மருளும் மாய்ந்துவிட்டன. அவை இனி, இல்லை எனக் கூறுகிறார்.

உணர்விலும்பர் ஒருவனை

அவனதருளால் உறல் பொருட்டு என்

உணர்வினுள்ளே இருத்தினேன்
அதுவும் அவனது இன்னருளே
உணர்வும் உயிரும், உடம்பும் மற்
றுலப்பிலனவும் பழுதேயாம்,
உணர்வைப் பெறவூர்ந் திறவெறி
யானும் தானாய் ஒழிந்தானே,”

என்றும்,

“யானும் தானாய் ஒழிந்தானை
யாதும் எவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனும்
ஆகிப் பணைத்த தனி முதலை
தேனும் பாலும் கன்னலும்,
அமுதும் ஆகித்தித்தித்து என்
ஊனில், உயிரில் உணர்வினில்
நின்ற வொன்றை உணர்ந்தேனே”

என்றும் பாடுகிறார்.

“கூடிற்றாகில் நல்லுறைப்புக்
கூடாமையைக் கூடினால்
ஆடல் பறவையுயர் கொடியெம்
ஆயனாவது அதுவதுவே
வீடைப் பண்ணியொரு பரிசே
எதிர்வும் நிகழ்வும், கழிவுமாய்,

ஓடித் திரியும் யோகிகளும்

உளருமில்லை யல்லரே" என்றும்,

"உளரும் இல்லையல்லராய்

உளராயில்லை யாகியே!

உளரெம் மொருவர் அவர் வந்தென்

உள்ளத்துள்ளே உறைகின்றார்

வளரும் பிறையும் தேய்பிறையும்

போல அசைவும் ஆக்கமும்

வளரும் சுடரும் இருளும் போல்

தெருளும் மருளும் மாய்த் தோமே!"

எனவும் பாடுகிறார்.

ஆழ்வார்கள் காலத்தில் பல சமயங்களும், சமய வேறுபாடுகளும் சமயச் சண்டைகளும் மோதல்களும் இருந்தன. சமயப் பிணக்குகள் ஏராளமாக நிலவியிருந்தன. நம்மாழ்வார் இந்த வேறுபாடுகளைத் தவிர்த்து நல்லிணக்கம் காணவே விரும்பினார். "தானும் சிவனும், பிரமனும், ஆகிப்பிணைத்த" என்று வறியுள்ளதையொட்டி, "அயனாம், சிவனாம், திருமாலால் அருளப்பட்ட சடகோபன்" என்றும் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

குட்ட நாட்டுத் திருப்புலியூரில் எழுந்தருளியுள்ள கண்ணபிரானை நினைந்து அவருடன் இரண்டறக் கலந்து விட்டதாக ஆழ்வார் பாடும் பாடல்கள் கருத்தாழமும் இன்பச் சுவையும் நிரம்பியவை. திரும்புலியூரின் செழிப்பைப் பற்றி, தாமரைக் காடுகளும், புன்னைப் பொழில்களும் சூழ்ந்த, மணி மாடங்கள் நிறைந்த ஊர்வளம், ஏர்வளம், சீர்வளம் நிரம்பிய சோலைகள் நிறைந்த கரும்பும், நெல்லும் சூழ்ந்த திருப்புலியூர் என்று குறிப்பிடுகிறார். அங்கு வாழும்

மக்கள் சீரும் சிறப்புமாய் ஆடைகளும் அணிகளும் நிறைந்தவர்களாக மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார்கள், என்றும் குறிப்பிடுகிறார். அத்தகைய திருப்புலியூரில் வாழும் செல்வக் கண்ணனுடன் ஆழ்வார், தன்னைப் பாராங்குச நாயகியாகப் பாவித்து இணைந்துள்ளதாக வரும் பாடல்கள் மிக அருமையானவை.

சுற்றத்தை நம்பிப் பலன் இல்லை. கண்ணனை நம்புவதே உய்யும் வழி என்னும் கருத்து நிறைந்த பாடல் வாழ்க்கை அனுபவங்களைத் தெளிவு படக் கூறுவதாக அமைந்துள்ளன.

"கொண்ட பெண்டிர் மக்கள்

உற்றார் சுற்றத்தவர் பிறரும்

கண்ட தோடு பட்ட தல்லால்

காதல் மற்றியாது மில்லை" எனவும்,

"துணையும் சார்வுமாகு

வார் போல் சுற்றத்தவர் பிறரும்

அணைய வந்த ஆக்கமுண்டேல்

அட்டைகள் போல் சுவைப்பர்" எனவும்

"பொருள் கையுண்டாயச் செல்லக்

காணில் போற்றியென் றேற்றெழுவர்

இருள் கொள் துன்பத்தின்மை

காணில் என்னே என்பாருமில்லை"

என்றெல்லாம் மனம் கசிந்து உள்ளம் உருகிக் குறிப்பிட்டு,

"கண்ணன் அல்லால் இல்லை

கண்டீர் சரணது நிற்க வந்து

மண்ணின் பாரம் நீக்குதற்கே

வடமதுரை பிறந்தான்"

என்று பாடுகிறார்.

ஆழ்வார் கண்ணனைக் கண்ட மகிழ்ச்சியில், கண்டு கொண்டேன், கண்ணனைக் கண்டு களித்தேன், பாசுரங்களும் பாடினேன், என்று உள்ளம் உருகப் பாடுகிறார்.

" உருவாகிய ஆறு சமயங்கட் கெல்லாம்,

பொருவாகி நின்றான் அவன் எல்லாப் பொருட்கும்,

அருவாகிய ஆதியைத் தேவர்கட் கெல்லாம்,

கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே,"

எனவும்,"கலக்க வேழ்கடல் ஏழ்மலையுலகே

ழும் கழியக்கடாய்

உலக்கத்தேர் கொடு சென்ற மாயமும்

"மண்மிசைப் பெரும்பாரம் நீங்க வோர் பாரத

மாபெரும் போர்

"கண்டு கொண்டேன் கண்ணிணை யாரக்களித்து

பண்டை வினையாயின பற்றோடறுத்து

தொண்டர்க் கமுதுண்ணச் சொன் மாலைகள்
சொன்னேன்,

அண்டத் தமரர் பெருமான் அடியேனே!"

என்று அருமையாகப் பாடுகிறார்.

என்னெஞ்சத்துள்ளிருந்திங்

கிருந்தமிழ் நூல் இவை மொழிந்து

வன்னெஞ்சத் திரணியனை
மார் விடந்த வாட்டாற்றான்
மன்னஞ்சப் பாரதத்துப்
பாண்டவர்க்காய்ப் படை தொட்டான்
நன்னெஞ்சே! நம்பெருமான்
நமக்கருள் தான் செய்வானே!

என்று நம்மாழ்வார் பிரான் அகம் குழைந்து பாடுகிறார்.

இவ்வாறாக ஆழ்வார் பெருமக்கள், பக்திப் பெருக்கத்துடன் கண்ணனைப் பற்றியும், கண்ணனுடைய பெருமைகளைப் பற்றியும், அருஞ்செயல்களைப் பற்றியும் தத்துவச் செரிவுடனும் தமிழ்ச் சுவையுடனும் பாடியுள்ளார்கள். இவ்வினிய பாடல்களையும், ஆழ்வார்களின் சிறப்புமிக்க கருத்துக்களையும் பாடிப்புரிந்து கொண்ட நாமும் நற்பேறு பெருவோமாக!



## 7. கண்ணனைப் பற்றி பாரதி

ஆழ்வார்களுக்கடுத்தப் படியாகக் கண்ணனைப் பற்றிப் பாரதி அதிகமாகப் பாடியுள்ளார். மகாகவி பாரதி ஒரு தலை சிறந்த தேசீய மகா கவி. அவருடைய அனைத்துப் பாடல்களிலும் பாரதத்தின் அரசியல், சமுதாய, பொருளாதார, ஆன்மீக, தெய்வீகப் பண்பாட்டுக் கருத்துக்களும் தத்துவங்களும் ஊடுறுவி, ஒளிவீசுவதைக் காணலாம்.

மகாகவி பாரதி தன்னுடைய பலவேறு பாடல்களிலும் கண்ணனைக் குறிப்பிடுகிறார். பாரதியின் அனைத்துப் பாடல்களிலும் கண்ணனைக் காண்கிறோம். அத்துடன் பாரதியின் பாடல் தொகுதியில் கண்ணன் பாட்டு என்னும் பாடல் தொகுதி தனி இடம் பெற்றிருக்கிறது. மேலும் தனது பாஞ்சாலி சபதத்தில் பாரதி கண்ணனின் பெருமையைப் பற்றி மிக அற்புதமாகப் பாடுகிறார். பாரதியின் உள்ளத்தில் கண்ணன் நீங்காத இடத்தைப் பெற்றுள்ளார்.

கண்ணன் பாட்டுக்கு முகவுரை எழுதிய பரலி சு. நெல்லையப்ப பிள்ளை தனது முகவுரையில் "பாரதியாருக்குக் கண்ணபிரான் மீதுள்ள அதிதீவிர பக்தி காரணமாக இந்நூலில் உள்ள பாடல்கள் வெளியாயின. இவை தமிழர்களுக்கு நல்விருந்தாகும்" என்று குறிப்பிடுகிறார். வ.வே.சு அய்யர் தனது முன்னுரையில் "பாரத நாட்டின் குல தெய்வமாகி விட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிகள் அருமை. தன்னை நெடுநாட்களாக மறந்திருந்த பாரத நாடு தீடிரென விழித்துக் கொண்டதும் அதன் எதிரே முதலில் தோன்றிய ஒளி கீதா சாஸ்திரத்தைக் கூறிப் பார்த்தனுடைய ரதத்தை வெற்றிபெற ஓட்டிய கண்ணபிரானுடைய உருவமே. அந்த உருவமானது நமது கவியின் இருதயத்திலும் எழுந்து அவருடைய கவிதைக்கு ஒரு சோபையைக் கொடுத்தது" என்று மிக அற்புதமாகக் குறிப்பிடுகிறார்.

கண்ணனைப் பற்றிய மற்றும் கண்ணன் தொடர்பான பாரதியின் படைப்புகளில் மணி முடியாகத் திகழ்வது அவருடைய பகவத் கீதை தமிழாக்கமும், அதற்கு அவர் எழுதியுள்ள முன்னுரையுமாகும்.

பாரதியின் கண்ணன் பாட்டு ஒரு தனி இலக்கியமாகும். அவை புதிய ஆதர்சத்தையும் புதிய ஊக்கத்தையும் புதிய எழுச்சியையும் கொடுப்பவை.

''பாரதியின் பாஞ்சாலி சபதம்'' அவர் படைத்துள்ள அற்புதமான காவியம். அதில் தோன்றும் கண்ணன் நமது தாயின், நமது மாதாவின் மானத்தைக் காப்பாற்றுகிறார்.

ஆழ்வார்களும், அவர்களுடைய பக்திப் பாடல்களும், அவர்களுடைய செயல்பாடுகளும் பாரத சமுதாயத்தின் வரலாற்றில் வரலாற்று வளர்ச்சியில் ஒரு முக்கியமான கட்டமாகும். அதில் பக்தி இயக்கத்தின் பிரவாகத்தில் ஆழ்வார்கள் தமிழ் மக்களை அழைத்துச் செல்கிறார்கள். அதில் கண்ணனும் கண்ணனுடைய பெருமைகளுடன் அருஞ்செயல்களின் நினைவுகளும் முக்கிய இடம் பெருகின்றன.

அன்னிய ஆட்சியின் கொடுமைகளுக்கு ஆளாகி, கடுமையான துன்பதுயரங்களை சந்தித்து, அவைகளை எதிர்த்து, அடிமை விலங்குகளை முறித்தெரிந்து, விடுதலைக் குரலை பாரத மக்கள் எழுப்பத் தொடங்கிய ஒரு புதிய வரலாற்று கட்டத்தில், தேசீய விடுதலை இயக்கப் பிரவாகத்தின் தொடக்கமாக பாரதி புதிய ஒளியைப் பரப்பத் தொடங்கினார். அந்தப் புதிய ஒளியில் கண்ணனும் கண்ணனுடைய செயற்கரிய செயல்களின் நீங்காத நினைவுகளுடன் இடம் பெறுகின்றான்.

பல தெய்வங்களின் வழிபாடுகளில் பாரதி பேதம்

காட்டவில்லை. எல்லா தெய்வங்களையும் ஒன்றாகவே கண்டார். என்றாலும் பாரதியின் கவிதா மண்டலத்தில் கண்ணனுக்குத் தனி இடம் இருப்பதைக் காண்கிறோம்.

பாரதி தனது விநாயகர் நான்மணி மாலையில்:–

“இறைவி இறைவன் இரண்டும் ஒன்றாகித்
தாயாய்த் தந்தையாய் சக்தியும் சிவனுமாய்
உள்ளொளியாகி உலகெலாம் திகழும்,
பரம் பொருளேயோ! பரம் பொருளேயோ!
ஆதிமூலமே! அனைத்தையும் காக்கும்,
தேவதேவா! சிவனே, கண்ணா
வேலா, சாத்தா, விநாயகா, மாடா,
இருளா, காளீ, மாமகளேயோ
ஆணாய்ப் பெண்ணாய் அலியாய் உள்ள
தியாதுமாய் விளங்கும் இயற்கை தெய்வமே!
வேதச்சுடரே, மெய்யாங் கடவுளே!
அபயம், அபயம், அபய நான் கேட்டேன்
நோவு வேண்டேன், நூறாண்டு வேண்டினேன்
அச்சம் வேண்டேன், அமைதி வேண்டினேன்
பாவம் வேண்டேன், பல்சுவை வேண்டினேன்,
இழிவு வேண்டேன், இன்பம் வேண்டினேன்
உடமை வேண்டேன், உன் துணை வேண்டினேன்,
பிறர்துயர் வேண்டேன், பெருமை வேண்டினேன்
கொலையினை வேண்டேன், தலைமையை
வேண்டினேன்

களவு வேண்டேன், காதல் வேண்டினேன்
வேண்டாதனைத்தையும் நீக்கி
வேண்டியதனைத்தும் அருள்வதுன் கடனே"

என்று கண்ணன் உள்ளிட்ட எல்லாக் கடவுள்களையும் இயற்கை தெய்வத்தையும் சேர்த்து வேண்டுகிறார்.

பாரதி ஒரு கனவு காண்கிறார். அதில் அவருக்கு ஆரிய தரிசனம் கிடைக்கிறது. அதன் பகுதியாக கிருஷ்ணார்ஜுன தரிசனம் முன்வருகிறது.

"கண்ணனைக் கண்டேன் – எங்கள்
கண்ணனைக் கண்டேன்
வண்ணனை ஞான மலையினைக் கண்டேன்

"சேனைகள் தோன்றும் – வெள்ளச்
சேனைகள் தோன்றும் – பரி
யானையும் தேரும் அளவில தோன்றும்,

"கண்ணனற்றேரில் – நீலக்
கண்ணனற்றேரில் – மிக
எண்ணயர்ந்தானோர் இளைஞனைக் கண்டேன்,

என்று அந்த அற்புதமான காட்சியைப் பாரதி தனது உயிர்த்துடிப்பான கவிதை வரிகளில் குறிப்பிடுகிறார். அடுத்து வரும் கவிதை வரிகளில் கீதையின் சாரத்தையே வியக்கத் தக்கவகையில் விளக்கிக் கூறிவிட்டார்.

தேரில் அமர்ந்திருந்த கண்ணன் கூறிய சொற்களைப் பாரதி கேட்டதாகக் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

"பெற்றதென் பேறே – செவி
பெற்றதென் பேறே – அந்தக்
கொற்றவன் சொற்கள் செவியுறக்
கொண்டேன் என்று கூறுகிறார்.

"சுற்றம் கொல்வேனோ – என்றன்
சுற்றம் கொல்வேனோ – கிளை
அற்றபின் செய்யும் அரசு மோர் அரசோ?

என்று புலம்பும் விஜயன் கூற்றுக்குக் கண்ணன் பதில்

"வில்லினை எடடா – கையில்
வில்லினை எடடா! அந்தப்
புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா

என்று தொடங்கி,

"வாடி நில்லாதே – மனம்
வாடி நில்லாதே – வெறும்
பேடியர் ஞானப் பிதற்றல் சொல்லாதே!

"ஒன்றுளதுண்மை – என்றும்
ஒன்றுளதுண்மை – அதைக்
கொன்றிடொணாது, குதைத்தலொண்ணாது,

"துன்பமும் இல்லை – கொடுந்
துன்பமும் இல்லை – அதில்
இன்பமும் இல்லை, பிறப்பிறப்பில்லை.

"படைகளும் தீண்டா - அதைப்
படைகளும் தீண்டா - அனல்
சுடவுமாண்ணாது, புனல் நனையாது

" செய்தல் உன் கடனே - அறஞ்
செய்தல் உன் கடனே- அதில்
எய்துறும் விளைவினில் எண்ணம் வைக்காதே

என்று கூறி பாடலை முடிக்கிறார்.

கண்ணன் பிறப்பைப் பற்றி விவரித்துப் பாரதி பாடுகிறார்.

"கண்ணன் பிறந்தான் - எங்கள்
கண்ணன் பிறந்தான் - இந்தக்
காற்றதை யெட்டுத் திசையிலும் கூறிடும்

"திண்ணமுடையான் - மணி
வண்ணமுடையான் - உயர்
தேவர்தலைவன் புவிமிசைத் தோன்றினான்"

என்று பாடுகிறார்.

கண்ணன் பிறப்பைத் தொடர்ந்து பாரினில் துயர் நீங்கிடும் என்றும், இனி எந்தக் குறைவும் இல்லை என்றும், வேதம் துணையுண்டு என்றும், அக்கினி வந்தான் என்றும், அவன், இருள் பெய்மைக் கலியை மடித்தான், சூரியன், இந்திரன், வாயு, மருத்துகள் திரளாய் வந்து நிறைந்து பாவி அசுரர்களை வீழ்த்தினர் எனவும், கங்கையும், கலை மங்கையும், காளி பராசக்தியும், செங்கமலத்தாளும், திருத்தேவியும் வந்து சிறப்புற நின்றனர் என்றும் மிக அழகாகப் பாடுகிறார்.

வருவாய், வருவாய், வருவாய் கண்ணா என்றும், எனது அறிவினில் ஒளிர்வாய் என்றும்; எனது ஆவியில் இணைவாய் என்றும், எனது இதயத்தில் அமர்வாய் என்றும் என்னுள் கருவாய் வளர்வாய் என்றெல்லாம் பாடுகிறார்.

காயிலே புளிப்பதும், கனியிலே இனிப்பதும், நோயிலே படுப்பதும், நோன்பிலே உயிர்ப்பதும், காற்றிலே குறிர்ந்ததும், கனலிலே சுடுவதும், சேற்றிலே குழப்பலும், திக்கிலே தெளிந்ததும் இவையெல்லாம் கண்ண பெருமானே என்று பாடுகிறார்.

எளியர் தம்மைக் காப்பதும், போற்றினோரைக் காப்பதும், பொய்யர் தம்மை மாய்ப்பதும் கண்ண பெருமானே என்றும் பாடுகிறார்.

பாரதி ஒருவரே, கண்ணனைக் கண்ணம்மாவாக பாவித்துப் பாடியுள்ளார். அது கண்ணன் மீது அவருக்குள்ள பேதமில்லாத ஆழ்ந்த ஈடுபாட்டைக் குறிக்கிறது. கண்ணம்மாவை அங்கம் அங்கமாக வர்ணித்து அவர் பாடுகிறார்.

கண்ணம்மாவின் புன்னகை புது ரோஜாப்பூவென்றும், விழி இந்திர நீலப்பூவென்றும், முகம் செந்தாமரைப் பூவென்றும், நுதல் பாலசூரியன் என்றும் பாடுகிறார்.

கண்ணம்மாவின் எழில் மின்னலை நேர்க்கும் என்றும் புருவங்கள் மதன்விற்கள் எனவும், செறிகுழல் திங்களை மூடிய பாம்பினைப் போலவென்றும் வாக்கு ஆனந்த ஊற்று எனவும், மதுரவாய் அமிர்தம் எனவும், அவளது மென்குரல் சரஸ்வதியின் வீணை எனவும் சாயல் அரம்பையெனவும், சதுர் அயிராணி எனவும் பாடுகிறார்.

இங்கித நாத நிலைய மிருசெவி
சங்க நிகர்த்த கண்டம் அமிர்த சங்கம்

மங்களக்கைகள் மகாசக்தி வாசம்

வயிறாலிலை இடை அமிர்தவீடு

"சங்கரனைத் தாங்கு நந்திபத சதுரம்

தாமரையிருந்தால் லக்ஷிமி பீடம்,

"பொங்கித்ததும் பித்திசையெங்கும் பாயும்

புத்தன்பும் ஞாலமும் மெய்த்திருக் கோலம்

எங்கள் கண்ணம்மா என்றெல்லாம் பாடுகிறார்.

பீடத்தில் ஏறிக் கொண்டாள் – மனப்

பீடத்தில் ஏறிக் கொண்டாள் கண்ணம்மா

என்று பாடுகிறார்.

"நின்னையேரதி யென்று நினைக்கிறேனடி – கண்ணம்மா என்றும் தன்னையே சகியென்று சரணமெய்தினேன் எனவும் பாடுகிறார். கண்ணம்மா, கண்ணம்மா என்றும் குறிப்பிடும் பாரதியின் பாடல்கள் நெஞ்சை நெகிழ்விப்பனவாகும்.

"காற்று வெளியிடைக் கண்ணம்மா – நின்றன் காதலை எண்ணிக் களிக்கின்றேன் எனத் தொடங்கும் அருமையானதொரு இனிய பாடல் நம்மை மயக்குவதாகும். நமது உள்ளத்தை உருக்குவதாகும். பாரதியின் பெயரையும் புகழையும் நாடெங்கும் உலகெங்கும் பரப்புவதாகும்.

காற்று வெளியிடைக் கண்ணம்மா – நின்றன்

காதலை எண்ணிக் களிக்கின்றேன் – அமு

தூற்றினையொத்த இதழ்களும் – நில

வூறித்ததும்பும் விழிகளும் – பத்து
மாற்றுப் பொன்னொத்த நின் மேனியும் – இந்த
வையத்தில் யானுள்ள மட்டிலும் – எனை
வேற்று நினைவின்றித் தேற்றியே – இங்கோர்
விண்ணவனாகப் புரியுமோ – இந்தக்
(காற்று வெளியிடை)

நீயென துயிர் கண்ணம்மா – எந்த
நேரமும் நின்றனைப் போற்றுவேன் – துயர்
போயின, போயின துன்பங்கள் – நினைப்
பொன்னெனக் கொண்ட பொழுதிலே – என்றன்
வாயினிலே அமுதூறுதே – கண்ணம்
மாவென்ற பேர் சொலும் போழ்திலே – உயிர்த்
தீயினிலே வளர் சோதியயே – என்றன்
சிந்தனையே என்றன் சித்தமே – இந்தக்
(காற்று வெளியிடைக்)

என்று பாடுகிறார். பாரதியின் மிகச் சிறந்த பிரபலமான பாடல்களில் இது ஒன்றாகும். தனிச் சிறப்புமிக்க இந்தப் பாடல் பாரதிக்குக் கண்ணன் பாலுள்ள உணர்வு பூர்வமான ஈடுபாட்டைத் தெளிவுபட எடுத்துக் காட்டுகிறது.

மனமே என்னும் தலைப்பில்

"கண்ணன் திருவடி எண்ணுக மனமே
திண்ணம் அழியா வண்ணம் தருமே"

" தருமே நிதியும் பெருமை புகழும்
கருமா மேனிப் பெருமானிங்கே"
"இங்கே யமரர் சங்கம் தோன்றும்
மங்கும் தீமை, பொங்கும் நலமே!"

"நலமே நாடிற் புலவீர் பாடீர்
நிலமா மகளின் தலைவன் புகழே "

"புகழ்வீர் கண்ணன் தகைசேரமரர்
தொகையோட சுரப்பகை தீர்ப்பதையே"

"தீர்ப்பான் இருளைப் பேர்ப்பான் கலியை
ஆர்ப்பாரமரர் பார்ப்பார் தவமே"

"தவறாதுணர்வீர் புவியீர்மாலும்
சிவனும் வானோர் எவரும் ஒன்றே!"

"ஒன்றே பலவாய் நின்றோர் சக்தி
என்றும் திகழும் குன்றா வொளியே!"

என்று அருமையாகப் பாடுகிறார்.

"போருக்கு வந்தங் கெதிர்த்த கவுரவர்
போலுவந்தானும் அவன் – நன்னெஞ்சே
நேருக்கருச்சுனன் தேரில் கசை கொண்டு
நின்றதும் கண்ணனன்றோ – நன்னெஞ்சே

என்று உருக்கமாப் பாடுகிறார்.

பாரதியாரின் பாடல் தொகுப்பில் தேச பக்திப் பாடல்கள் ஒரு முக்கிய பகுதி என்பதை அனைவரும் அறிந்ததேயாகும். அப்பாடல்கள் வெளியிட்ட போது அதன் முன்னுரையில் சமர்ப்பணமாகக் கீழ்க் கண்டவாறு பாரதி குறிப்பிடுகிறார்.

"ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்தும நிலையை விளக்கிய தொப்ப எனக்கு பாரத தேவியின் சம்பூரண ரூபத்தைக் காட்டி ஸ்வதேசபக்தி உபதேசம் புரிந்தருளிய குருவின் சரண மலர்களில் இச்சிறு நூலைச் சமர்ப்பிக்கிறேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

பாரதி கண்ணனை நினைக்கும் போதெல்லாம் கீதை உபதேசங்களையும் சேர்த்தே காண்கிறார். பாரதக் கதையும் அதில் கண்ணனின் அருஞ்செயல்களும் கீதை உபதேசமும் பாரதியின் உள்ளத்தில் மிகுந்த தாக்கங்களை உண்டாக்கியிருப்பதைக் காண்கிறோம்.

"பாரத மாதா" என்றும் தலைப்பிலான பாடலில் :

"போர்க் களத்தே பரஞானமெய்க் கீதை
புகன்றதெவருடை வாய்? – பகை
தீர்க்கத்திறந்தரு பேரினள் பாரத
தேவி மலர்த்திருவாய்"

என்று போற்றிப் பாடியுள்ளார்.

சத்ரபதி சிவாஜி தனது சைன்யத்திற்குக் கூறுவதாக வரும் பாடலில்,

"பன்னரும் புகழுடைப் பார்த்தனும் கண்ணனும்
வீமனும் துரோணனும் வீட்டு மன்றானும்

ராமனும் வேறுள இருந்திறல் வீரரும்
நற்றுணை புரிவர்" என்று குறிப்பிடுகிறார்.

அதே பாடலில், பார்த்தன் தன் எதிரில் நிற்கும் தனது உறவினர் கருதி சோர்ந்து நின்ற போது கண்ணன் கூறுவதாக.

உண்மையை அறியாய், உறவையே கருதிப்
பெண்மை கொண்டு ஏதோ பிதற்றி நிற்கின்றாய்,
வஞ்சகர், தீயர், மனிதரை வருத்துவோர்
நெஞ்சகத்தருக் குடை நீசர்கள் – இன்னோர்,
தம்மோடு பிறந்த சகோதரராயினும்
வெம்மையோ டொறுத்தல் வீரர் தம் செயலாம்,

என்று கீதையின் கருத்தைக் குறிப்பிடுவதைக காணலாம்.

லஜபதிராய் பிரலாபம் என்னும் பாடலில்,

"நல்லறத்தை நாட்டுதற்கு நம்பெருமான்
கௌரவராம் புல்லரைச் செற்றாழ்த்த

புனிதப் பெருநாடு" என்று பாஞ்சாலத்தைக் குறிப்பிடுகிறார். அறத்தை நிலை நாட்டுவதும் கண்ணனுடைய அருஞ்செயல் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

கிருஷ்ணன் மீது ஸ்துதி என்னும் பாடலில் கண்ணனை வணங்கி வேண்டி வரம் கேட்கிறார். நல்வாழ்வும், கல்வியும், வீரமும், இப்புவியாட்சியும் வெற்றியும் புகழும் தரவேண்டும்மெனக் கேட்கிறார்.

வேதவானில் விளங்கி, அறஞ்செய்மின்
சாதல் நேரினும் சத்தியம் பூணுமின்

தீதகற்றுமின் என்று திசையெலாம்
மோத நித்தம் இடித்து முழங்கியே"

உண்ணும் சாதிக் குறக்கமும் சாவுமே
நண்ணு றாவணம் நன்கு புரந்திடும்
எண்ணரும் புகழ்க் கீதையெனச் சொலும்
பண்ணமிழ் தத்தருள் மழை பாவித்தே"

எனவும்,

"ஒப்பிலாத உயர்வொடு கல்வியும்
எம்மில் வீரமும் இப்புவியாட்சியும்
தப்பிலாத தர்மமும் கொண்டுயாம்
அப்பனேநின் அடிப் பணிந்துய்வமால்"

எனவும்,

"நின்றன் மாமரபில் வந்து நீசராய்ப்
பொன்றல் வேண்டிலம் பொற்கழல் ஆணைகாண்,
இன்றிங்கெம்மை யதம் புரியில்லையேல்
வென்றியும் புகழும் தரல் வேண்டுமே"

என்றும் உணர்ச்சி மிக்க சொற்களில் கண்ணனை வேண்டி வரம் கேட்டுப் பாடுகிறார்.

பாரதியார் தனது சுய சரிதைப் பாடல்களில்,

"அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி,
அகத்திலே அன்பினோர் வெள்ளம்

பொறிகளின் மீது தனியரசாணை,
பொழுதெல்லாம் நினது பேரருளின்
நெறியிலே நாட்டம் கர்ம யோகத்தில்
நிலைத்திடல் என்றிவையருள்வாய்
குறி குணம் ஏதுமில்லதாய் அனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே"

என்று கண்ணபிரானை நினைத்து அருள் வேண்டிப்பாடி முடிக்கிறார்.

## கண்ணன் பாட்டு

பாரதியின் கண்ணன் பாட்டு ஒரு தனி இலக்கியமாகும். ஒரு தனித்தன்மையான சிறப்பு இலக்கியமாகும். அப்பாடல்களில் ஆழ்வார்களின் பாவனைகளும் பக்திச் சுவைகளும் இருப்பதைக் காணலாம். பாரதியும் ஆழ்வார்களைப் போலவே தன்னை மறந்தும், தன்னை முழுமையாக கண்ணன் பால் ஈடுபடுத்திக் கொண்டும், இணைத்துக் கொண்டும் பாடுகிறார்.

பாரதியும் ஆழ்வார்களைப் போலவே பக்தியை ஒரு உருவமாகக் கொண்டும் சமுதாய நலன்களையும் நாட்டுக் காட்சிகளையும் உலகக் காட்சிகளையும் உள்ளடக்கமாகக் கொண்டும் பாடுகிறார்.

பாரதியின் கண்ணன் பாட்டுகள், ஆழ்வார்களின் காலத்திலிருந்து வளர்ச்சி பெற்று புதிய வரலாற்றுச் சூழ்நிலைகளில், புதிய பரிமாணங்களை எட்டிப்பிடித்து, புதிய பல கருத்துக்களுடன் செரிவு பெற்று விரிவடைந்திருக்கின்றன. பாரதியாரின் கண்ணன் பாட்டுப் பாடல்களும் ஆழ்வார்களின் இனிய பாசுரங்களைப் போலவே நம்மை நெகிழ வைக்கின்றன. நெறிப் படுத்துகின்றன. ஒரு நிலைப்படுத்துகின்றன.

பாரதியின் கண்ணன் பக்தி, தேச பக்த உணர்வுடன், புதிய காலத்தின் தேவைகளுடன் இணைந்து புதிய பரிமாணங்களையும் புதிய உயரங்களையும் புதிய சிகரங்களையும் எட்டியிருக்கிறது. பழைய மரபுகளைத் தழுவி அவைகளின் வேர்மூலத்தில் நின்று அவைகளின் நேர் ஆக்கத்தன்மைகளை செரித்து உயர்த்தி அவைகளின் புதிய கிளைகளையும் இலை, மலர், காய், கனி, விதைகளையும் தோற்றுவித்து நமது பக்தியையும் சிந்தனைகளையும் அறிவையும் உயர்த்தியிருக்கின்றன. கண்ணனைக் கண்ணனாகவும், கண்ணம்மாவாகவும் பாடியிருப்பது பாரதியின் புதுமையாகும். பழய மரபுகளிலிருந்து எழுந்த புதுமையாகும்.

ஆழ்வார்களின் பக்திப் பாடல்கள், பெரும்பாலும் ஒருமுகப்பட்டது. பாரதியின் கண்ணன் பாட்டுக்கள் பன் முகப்பட்டது. ஆழ்வார்களின் இனிய பாசுரங்களைப் போலவே பாரதியின் கண்ணன் பாட்டுகளையும் மீண்டும் மீண்டும் படித்துப் படித்துப் புத்துணர்ச்சி பெறலாம். காலத்தால் ஆழ்வார்களின் அக, புறத் தேவைகளைக் காட்டிலும் பாரதியின் அக, புறத் தேவைகள் அதிகம். பாரதி காலத்தில், நாட்டு மக்களின், உலக மக்களின் ஆன்மீகத் தேவைகளும், அறிவுத் தேவைகளும், பொருளாயதத் தேவைகளும், லௌகீகத் தேவைகளும் அதிகம். எனவே கண்ணனிடம் பாரதியின் வேண்டுதல்களும் அதிகப்பட்டிருக்கின்றன, விரிவுபட்டிருக்கின்றன. அடிமைப்பட்டிருந்த பாரத மக்களைத் தட்டியெழுப்பப் புதிய ஆதர்சம் பாரதிக்குத் தேவைப்பட்டது. எனவே பாரதியும் ஆழ்வார்களின் வழியில் கண்ணனைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டார்.

## கண்ணன் - என் தோழன்

கண்ணன் பார்த்தனுக்குத் தோழன். உயிர்த் தோழன். கண்ணன் பரமாத்மா. பார்த்தன் ஜீவாத்மா. கண்ணன் பரம்பொருள். பார்த்தன் கருவி. பாரதி பார்த்தனுடைய நிலையில் நின்று கொண்டு புதிய காலத்தின் கண்ணாடி மூலம் கண்ணனைக் காண்கிறார்.

பார்த்தனின் உயிர்க்காதலி சுபத்திரை. அவளும் பார்த்தனையே மணமார விரும்புகிறாள். அவள் கண்ணனின் தங்கை. அவளைப் பார்த்தனுக்கு மணம் முடித்து வைக்க மூத்த அண்ணன் பலராமன் விரும்பவில்லை எனவே அவளைப் பார்த்தன் கடத்திக் கொண்டு செல்ல வேண்டும். கண்ணன், பார்த்தன் பக்கம். பார்த்தன்-சுபத்திரை விருப்பத்தை நிறைவேற்றக் கண்ணன் உபாயம் சொல்கிறான்.

போரில் கர்ணனை வெல்ல வேண்டும். அதற்கும் பார்த்தனுக்குக் கண்ணன் துணையாகத் தோழனாக இருக்கிறான்.

"பொன்னவிர் மேனிச் சுபத்திரை மாதைப்
புறங்கொண்டு போவற்கே - இனி
என்னவழி யென்று கேட்கில் உபாயம்
இருகணத்தேயுரைப்பான் - அந்தக்
கன்னன் வில்லாளர் தலைவனைக் கொன்றிட
காணும்வழி யொன்றில்லேன் - வந்திங்
குன்னை அடைந்தனன் என்னில் உபாயம்
ஒரு கணத்தேயுரைப்பான்" என்று

தனது பாடலில் குறிப்பிட்டுக் கூறுகிறார் பாரதியார்.

நாங்கள் காட்டில் சுற்றித் திரிந்துக் கொண்டிருந்தபோது எங்கள் நெஞ்சில் கலக்கமில்லாது செய்து ஆறுதல் அளித்தான் என்றும், பெரும்சேனையின் முன் நின்று போர் செய்யும்போது தேர் நடத்திக் கொடுத்தான் என்றும் எனக்குக் கடுமையான நோய்கள் வந்தபோது அதற்குரிய மருந்துகளைக் கூறுவான் என்றும் எனது நெஞ்சில் கவலைகள் ஏற்பட்டபோது அதற்கான ஆறுதல் சொல்லிக் கவலைகளை மாற்றிவிடுவான் என்றும் கூறுகிறார்.

"கானகத்தே சுற்று நாளிலு நெஞ்சில்

கலக்கமிலாது செய்வான் – பெருஞ்

சேனைத் தலை நின்று போர் செய்யும் போதினில்,

தேர் நடத்திக் கொடுப்பான் – என்றன்

ஊனை வருத்திடும் நோய்வரும் போதினில்

உற்றமருந்து சொல்வான் – நெஞ்சம்

ஆஈனக் கவலைகள் எய்திடும் போதில்

இதஞ்சொல்லி மாற்றிடுவான்

என்று பாடுகிறார் பாரதி.

பிழைக்கும் வழி சொல்லுமாறு கேட்டால் உழைக்கும் வழி, வினை செய்யும் வழி, பயன் உண்ணும் வழி ஆகியவற்றை ஒரு பேச்சினில் சொல்லி விடுவான். அழைக்கும் போது நொடிப் பொழுதில் வருவான். மழைக்குக் குடையாகவும் பசி நேரத்திற்கு உணவு கொடுப்பவனாகவும், எங்கள் வாழ்வினுக்கு உயிராகவும், எங்கள் கண்ணன் உள்ளான் என்று கூறுகிறார்.

"பிழைக்கும் வழி சொல்ல வேண்டும் என்றால் ஒரு

பேச்சினிலே சொல்லுவான்

உழைக்கும் வழி வினையாளும் வழி பயன்

அழைக்கும் பொழுதினில் போக்கு சொல்லாமல்

அரை நொடிக்குள் வருவான்

மழைக்குக் குடை பசி நேரத்துணவு என்றன்

வாழ்வினுக் கெங்கள் கண்ணன்"

என்று பாரதி பாடுகிறார்.

"கேட்ட பொழுதில் பொருள் கொடுப்பான் சொல்லுங்
கேலி பொறுத்திடுவான் – எனை
ஆட்டங்கள் காட்டியும் பாட்டுகள் பாடியும்
ஆறுதல் செய்திடுவான் – என்றன்
நாட்டத்திற் கொண்ட குறிப்பினையி ஃதென்று
நான் சொல்லு முன்னுணர்வான் – அன்பர்
கூட்டத்திலே இந்தக் கண்ணனைப் போலன்பு
கொண்டவர் வேறுளரோ?

என்றும் பாடுகிறார்.

எனது உள்ளத்தில் கருவம் கொண்டால் ஓங்கியடிப்பான். கள்ளங்கபடமான வார்த்தைகள் சொன்னால் காறி உமிழ்வான். ஒரு பள்ளத்தில் நீண்ட நாட்களாக நிறைந்து நிற்கும் அழுகிய பாசத்துடன் உள்ள தேங்கிய தண்ணீரை வெள்ளம் வந்தால் அதை அளிரை அடித்துக் கொண்டு போய் சுத்தம் செய்துவிடும் அது போலக் கண்ணன் எனக்கு அருள் வார்த்தைகள் கூறி எனது மெலிவைத் தவிர்த்து விடுவான் என்று கூறுகிறார்.

"உள்ளத்திலே கருவம் கொண்ட போதினில்
ஓங்கியடித்திடுவான் – நெஞ்சில்,
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை
சொன்னால் அங்கு
காறி உமிழ்ந்திடுவான் – சிறு
பள்ளத்திலே நெடுநாள் அழுகும் கெட்ட
பாசியை எற்றிவிடும் – பெரு

வெள்ளத்தைப் போலருள் வார்த்தைகள் சொல்லி,
மெலிவு தவிர்த்திடுவான்”

என்று மிக அழகாகப் பாடுகிறார்.

சின்னக் குழந்தைகள் போல் விளையாடிச்
சிரித்துக் களித்திடுவான் – நல்ல
வண்ண மகளிர் வசப்படவே பல
மாயங்கள் சூழ்ந்திடுவான் – அவன்
சொன்னபடி நடக்காவிடிலோ மிகத்
தொல்லையிழைத்திடுவான் – கண்ணன்
தன்னை இழந்துவிடில் ஐயகோ பின்
சகத்தினில் வாழ்வதிலேன்

என்று பாரதி நெஞ்சுருகக் கசிந்து பாடுகிறார்.

“கோபத்திலேயொரு சொல்லிற் சிரித்துக்
குலுங்கிடச் செய்திடுவான் – மனஸ்
தாபத்திலே யொன்று செய்து மகிழ்ச்சி
தளிர்த்திடச் செய்திடுவான் பெரும்
ஆபத்தினில் வந்து பக்கத்திலே நின்று
அதனை விலக்கிடுவான் – சுடர்த்
தீபத்திலே விழும் பூச்சிகள் போல் வரும்
தீமைகள் கொன்றிடுவான்”

என்று அருமையாகப் பாடுகிறார்.

உண்மை தவறி நடப்பவர்களை உதைத்து நசுக்கி விடுவான். ஆனால் அவனோ தனது வண்மையினால் மலை மலையாகப் பொய்களைக் கூறிடுவான். கண்ணன் பல பெண்மை குணங்களும், பித்தர் குணங்களும் சில நேரங்களில் நெருப்பின் குணங்களையும் கொண்டவன் என்று பாரதி கூறுகிறார்.

கண்ணன் கொலைக் கஞ்சாத மறவர் குணம் கொண்டவன். ஆயினும் குழந்தைகளைப் போல சூது வாது அறியவாதவன். அப்பாவித்தனமாகக் காட்சியளிப்பவன். நல்லவர்களுக்குத் தீங்கு விளையாமல் அவர்களைக் காத்திடுவான். அல்லவர்களுக்காயின் விடத்தைப் போல், நோயைப் போல், நெருப்பைப் போல் கொடியவனாகவும், இருப்பான் என்று கண்ணனுடைய குணச்சிறப்புகளைப் பற்றி பாரதி குறிப்பிட்டுக் கூறுகிறார்.

" உண்மை தவறி நடப்பவர் தம்மை
உதைத்து நசுக்கிடுவான் – அருள்
வண்மையினால் அவன் மாத்திரம் பொய்கள்,
மலை மலையா வுரைப்பான் – நல்ல
பெண்மைக் குணமுடையான் – சில நேரத்தில்
பித்தர் குணமுடையான், மிகத்
தண்மை குணமுடையான்; சில நேரம்
தழலின் குணமுடையான் " என்றும்,

"கொல்லும் கொலைக் கஞ்சிடாத மறவர்
குணமிகத் தானுடையான் – கண்ணன்
சொல்லு மொழிகள் குழந்தைகள் போலொரு
சூதறியாது சொல்வான் – என்றும்,

நல்லவருக்கொரு தீங்கு நண்ணாது
நயமுறக் காத்திடுவான் – கண்ணன்
அல்லவருக்கு விடத்தினில் நோயில்
அழலினும் கொடியான்" என்று அழகுறப்பாடுகிறார்.

காதல் விளையாட்டுகளில், பாட்டினில், சித்திரங்கள் வரைவதில், படைத் தொழில் முதலிய பல தொழில்களிலும் பாண்டித்யம் உடையவன், அக்கண்ணன் வேதம் அளித்த முனிவர்களின் உணர்வில் பரம்பொருளாவான். அவன் எனக்குக் கீதையை உரைத்து மகிழ்ச்சியடையச் செய்தவன், அவனுடைய புகழைப் பரப்பிடுவேன்." என்றெல்லாம் பாரதி கண்ணன் புகழ் பரப்பிக் கவிதையை முடிக்கிறார்.

காதல் விளைய மயக்கிடும் பாட்டினில்
கண் மகிழ்சித்திரத்தில் – பகை
மோதும் படைத் தொழில் யாவினுமே திற
முற்றிய பண்டிதன் காண் – உயர்
வேத முணர்ந்த முனிவர் உணர்வினில்
மேவு பரம்பொருள் காண் – நல்ல
கீதையுடைத் தென்னையின் புறச் செய்தவன்,
கீர்த்திகள் வாழ்த்திடுவேன்"

என்று பாடிக் கவிதையை முடிக்கிறார்.

கண்ணன் - என் தாய்

கண்ணனைப் பாரதத் தாயாகவே கருதி பாரதி இக்கவிதையைப் பாடுகிறார். பாரதத் தாயே கண்ணன் வடிவத்தில்

பாரதிக்குக் காட்சியளிக்கிறாள். கண்ணன் என்னும் பாரத அன்னை தனது உயிரெனும் முலையிலிருந்து உணர்வெனும் பாலை எனது வாயில் ஊட்டுகிறாள் என்று கவிஞர் கூறுகிறார். என்னைக் கண்ணன் எனும் தாய் கட்டிப்பிடித்துக் கைகளில் அணைத்து மடியில் அமர்த்தித் தட்டிக் கொடுத்துப் பலபல கதைகளைச் சொல்லி என்னை மகிழ வைத்தாள்; என்று பாரதி கூறுவது நமது உணர்வை உலுக்கி விடுகிறது. நாம் எல்லோரும் பாரதத் தாயின் பிள்ளைகள் என்னும் பேருண்மையை, அந்த அன்னை நம்மையெல்லாம் அறவணைத்து ஆதரித்துக் கொண்டிருப்பதைக் கவிஞர் தனது மிக அற்புதமான கவிதை மூலம் நினைவூட்டுகிறார்.

"உண்ண உண்ணத் தெவிட்டாதே – அம்மை
உயிரெனும் முலையினில் உணர்வெனும் பால்,
வண்ணமுற வைத்தெனக்கே – என்றன்
வாயினிற் கொண்டூட்டு மோர் வண்மையுடையாள்
கண்ணனெனும் பெயருடையாள் – என்னைக்
கட்டி நிறைவாள் எனும் தன் கையிலணைத்து
மண்எனும் உந்தன் மடியில் வைத்தே – பல
மாய முறுங்கதை சொல்லி மனங்களிப்பாள்

என்று பாரதி பாடுகிறார்.

பாரதத் தாய் எழுதியுள்ள கதைகள் பலப்பல. இன்ப மயமான பல கதைகள், ஏற்றம் என்றும் வெற்றி என்றும் சில கதைகள், துன்பம் எனச் சில அவலக்கதைகள், தோல்வி என்றும் வீழ்ச்சியென்றும் சில கதைகள், "இவ்வாறு எனது பருவத்திற்கும் விருப்பத்திற்கும் ஏற்றவாறு பல கதைகளை அன்புடன் எனக்குச் சொல்லிவருவாள். அந்த அற்புதமான கதைகளைக் கேட்ட நான்

பரவசமடைவேன்'' என்று பாரதி கூறுகிறார். பாரதத் திருநாட்டில் மக்களிடம் உலவி வரும் எண்ணற்ற கதைகளையே பாரதி இவ்வாறு குறிப்பிடுகிறார். அவையெல்லாம் பாரத அன்னையின் கண்ணன் என்னும் தாயின் கதைகள். அக்கதைகளைக் கேட்டுக்கேட்டு பாரதியுடன் சேர்ந்து பாரத மக்கள் அனைவரும் பரவசமடைகிறார்கள், என்று பாரதி குறிப்பிடுவது நம்மையும் பரவசமடையச் செய்கிறது.

" இன்பமெனச் சில கதைகள் – எனக்
கேற்றமென்றும், வெற்றி யென்றும் சில கதைகள்,
துன்பமெனச் சில கதைகள் – கெட்ட
தோல்வியென்றும் வீழ்ச்சி யென்றும் சில கதைகள்,
என்பருவம், என்றன் விருப்பம் – எனும்
இவற்றினுக் கிணங்க என்னுளமறிந்தே
அன்போடு அவள் சொல்லி வருவாள் – அதில்
அற்புத முண்டாய்ப் பரவசமடைவேன்"

என்று பாரதி அற்புதமாகப் பாடுகிறார்.

விந்தை விந்தையாகப் பலவிதமான காட்சிகளையும் பொம்மைகளையும் எனக்குக் காட்டி மகிழ்விப்பான். சந்திரன், அதன் பால் போன்ற நிலவு, மந்தை மந்தையாக மேகக் கூட்டம், அதன் மழை, சூரியன் அதன் ஒளி முகம், வானத்து மீன்கள் கானத்து மலைகள் நல்ல நல்ல நதிகள், அவை சேரும் விரிகடல், அதன் அலை கடல், அவை ஓம் என ஒலித்திடும் ஓசை, சோலைகள் காவினங்கள், மலர்கள், அவைகளின் இனிய மணம், கனி வகைகள், முதலியவற்றை எனது அன்னையாகிய கண்ணன், கோடி கோடியாய்க் குவித்து வைத்து பொம்மைகளாக அவைகளை எனக்குக் காட்டி, என்னை மகிழ்வித்தாள்.

" விந்தை விந்தையாக வெனக்கே – பல
விதவிதத் தோற்றங்கள் காட்டுவிப்பான்
சந்திரன் என்றோரு பொம்மை – அதில்
தண்ணமுதம் போல ஒளி பரந்தொழுகும்,
மந்தை மந்தையா மேகம் – பல
வண்ணமுறும் பொம்மையது மழை பொழியும்,
முந்த ஒரு சூரியனுண்டு – அதன்
முகத்தொளி கூறுநற்கோர் மொழியிலையே!

என்றும்,

"வானத்து மீன்களுண்டு – சிறு
மணிகளைப் போல் மின்னி நிறைந்திருக்கும்,
நானத்தைக் கக்கிடவே – மனம்
நாடிமிக முயல்கினுங் கூடுவதில்லை,
கானத்து மலைகளுண்டு – எந்தக்
காலமும் ஓரிடம் விட்டு நகர்வதில்லை,
மோனத்திலேயிருக்கும் – ஒரு
மொழியுரையாது விளையாட வருங்காண்!

என்றும்,

"நல்ல நல்ல நதிகளுண்டு – அவை
நாடெங்கும் ஓடி விளையாடி வருங்காண்
மெல்ல மெல்லப் போயவை தாம் – விழும்
விரிகடல் பொம்மையது மிகப்பெரிதாம்,

எல்லையதில் காணுவதில்லை – அலை
எற்றிநுரைகக்கியொரு பாட்டிசைக்கும்,
ஒல்லெனும் அப்பாட்டினிலே – அம்மை
ஓம் எனும் பெயர் என்றும் ஒலித்திடுங்காண்,"

என்றும்,

"சோலைகள் காவினங்கள் – அங்கு
சூழ்தரும் பலநிற மணி மலர்கள்,
சாலவும் இனியனவாய், அங்கு
தருக்களில் தூங்கிடும் கனிவகைகள்
ஞாலம் முற்றிலும் நிறைந்தே – மிக
நயந்தரு பொம்மைகள் எனக்கெனவே
கோலமும் சுவையுமுற – அவள்
கோடி பல் கோடிகள் குவித்து வைத்தாள்"

என்றெல்லாம் மகிழ்ச்சியுடன் பாடுகிறார்.

தின்றிடப் பண்டங்கள், செவியினிக்கக் கேட்க நல்ல பாட்டுகள், பழகுவதற்குரிய தோழர்கள், நல்ல காதலுக்குரிய நாரியர், இறகுடைப் பறவைகள், நிலத்தில் திரியும் விலங்குகள், ஊர்வனகள், கடலில் நிறைந்த மீன்வகைகள் எனப்பல தோழர்களை அன்னை கண்ணன் எனக்கு நிறைவுறக் கொடுத்து என்னை மகிழ்வித்தாள் என்று கூறுகிறார் பாரதியார்.

தின்றிடப் பண்டங்களும் – செவி
தெவிட்டறக் கேட்க நற்பாட்டுகளும்
ஒன்றுறப் பழகுதற்கே – அறி

வுடைமெய்த் தோழரும் அவள் கொடுத்தான்
கொன்றிடும் என இனிதாய் – இன்பக்
கொடு நெருப்பாய் அனற்சுவையமுதாய்
நன்றியல் காதலுக்கே – இந்த
நாரியர்தமை எனைச் சூழ வைத்தான்”

“இறகுடைப் பறவைகளும் – நிலந்
திரிந்திடும் விலங்குகள் ஊர்வனகள்
அறைகடல் நிறைந்திடவே – எண்ணில்
அமைந்திடற்கரிய பல்வகைப்படவே
சுறவுகள், மீன்வகைகள் – எனத்
தோழர்கள் பலரும் இங்கெனக் களித்தாள்
நிறைவுற இன்பம் வைத்தாள் – அதை
நினைக்கவும் முழுதிலும் கூடுதில்லை”

என்று பாரதி பாடுகிறார்.

பாரதத் தாய் கோடிக் கணக்கான நல்ல சிறந்த சாத்திரங்களை வைத்துக் கொண்டிருக்கிறாள். அந்த சாத்திரங்களில் மிக உயர்ந்த ஞானத்தையும் வைத்துள்ளாள். அத்துடன் அவற்றில் வேடிக்கையாக நகைப்பதற்குச் சில பொய் வேதங்களும் மதக் கொலைகளும் அரசர்களுடைய கூத்துக்களும் மூத்தவர்களின் பொய் நடையும் கொண்ட கற்பனைக் கதைகளும் கோர்த்து வைத்துள்ளாள் என்று பாரதி தனக்கே உரித்தான கருத்து நிறைந்த கவிதை வரிகளைப் படைத்துள்ளார்.

“சாத்திரங்கோடி வைத்தாள் – அவை
தம்மினுமுயர்ந்த தோர் ஞானம் வைத்தான்

மீத்திடும் போதினிலே – நான்
வேடிக்கையுறக் கண்டு நகைப்பதற்கே
கோத்த பொய் வேதங்களும் – மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய் நடையும் – இள
மூடர்தம் கவலையும் அவள் புனைந்தாள்”

என்று சிறந்த கருத்துக்கள் நிறைந்த இக்கவிதை வரிகளைக் கூறியுள்ளார்.

இத்தகைய அன்னைக் கண்ணனின் அருளைப் புகழ்ந்து பாடும் தொழிலைச் செய்வேன். எனக்கு நீண்ட வாழ்வும் புகழும் பெருமையும் அவள் கொடுப்பாள் என்று இப்பாடலைப் பாரதி பாடி முடிக்கிறார்.

வேண்டிய கொடுத்திடுவாள் – அவை
விரும்பு முன் கொடுத்திட விரைந்திடுவாள்
ஆண்டருள் புரிந்திடுவாள் – அண்ணன்
அருச்சுனன் போல் என்னை ஆக்கிடுவாள்
யாண்டும் எக்காலத்திலும் – அவள்
இன்னருள் பாடும் நற்றொழில் புரிவேன்,
நீண்ட தோர் புகழ் வாழ்வும் – பிற
நிகரறு பெருமையும் அவள் கொடுப்பாள்

என்று மிக அற்புதமாகப் பாடி பாரதியார்,

கண்ணன் – என் தாய் என்னும் கவிதையை முடித்துள்ளார்.

## கண்ணன் என் தந்தை

கண்ணனைத் தோழனாக, தாயாக, பாவித்துப் பாடிய பாரதி தந்தையாகப் பாவித்து அருமையானதொரு கவிதையை நமக்கு அளித்துள்ளார். இந்தப் பாடல் சிறந்த தத்துவக் கருத்துக்களையும், சமுதாயக் கருத்துக்களையும், சமுதாய சமத்துவக் கருத்துக்களையும் கொண்டதாகும். இப்பாடல்களில் மத வேறுபாடுகளையும், சாதி வேறுபாடுகள் மற்றும் பாகுபாடுகளையும் ஏழை செல்வந்தர் வேறுபாடுகளையும் பாரதி வலுவாகச் சாடியுள்ளார். மக்கள் அனைவரும் இன்பமாகச் சகல செல்வங்களும் பெற்று வாழ்வதற்கான வேண்டுதலைப் பாரதி கண்ணனிடம் சமர்ப்பிக்கிறார். இப்பாடல்களில் பாரதியின் பல லட்சியக் கருத்துக்களும் வெளிப்படுகின்றன. அவருடைய சீரிய கருத்துக்களைப் பாரதி கண்ணனின் வடிவத்தில் எடுத்துக் கூறுவது சிறப்பாகும். இந்தப் பாடல்களை முழுமையாகப் படித்தால் தான் அவைகளின் உட்பொருளை, அவைகளின் சிறந்த கருத்துக்களை நாம் நன்கு புரிந்து கொண்டு முழுமையாக அறிந்து உணர்ந்து பயன் பெற முடியும்.

எனதருமைத் தாய் என்னை இப்பூமிக்கு அனுப்பினாள். இந்த அற்புதமான பூமண்டலத்தில் எனது அருமைத் தம்பிகள் வாழ்கின்றார்கள். அவர்கள் எல்லாம் அவரவர்கள் நியமித்துக் கொண்டுள்ள நெறிமுறைகளின் படியும் பழக்க வழக்கங்களின் படியும் நடை உடைபாவனைகளின் படியும் நெடுவழிகள் அனைத்திலும் உருண்டு கொண்டு, அவரவர்கள் மனம் போனபடி எங்கள் மனித இனத்தாரால் ஆளப்படுகிறார்கள். அவர்களுக்கெல்லாம் எனது தந்தையாகிய கண்ணனுடைய கதைகளைச் சிறிது கூறுவேன் என்று பாரதி தொடங்குகிறார்.

“பூமிக்கெனை யனுப்பினாள் – அந்தப்
பூத மண்டலத்தில் என் தம்பிகளுண்டு
நேமித்த நெறிப்படியே . இந்த
நெடுவழியெங்கனும் நித்த முருண்டே
போமித்த ரைகளிலெல்லம் – மனம்
போல விருந்தாளுபவ ரெங்களினத்தார்,
சாமி இவற்றினுக் கெல்லாம் – எங்கள்
தந்தையவன் சரிதைகள் சிறிதுறைப்பேன்,”

என்று பாரதி கண்ணன்–என் தந்தை என்னும் அற்புதமான பாடல்களைத் தொடங்குகிறார்.

செல்வத்திற்கோர் குறையில்லை – எந்தை
சேமித்து வைத்த பொன்னுக்கு அளவொன்றில்லை
கல்வியில் மிகச் சிறந்தோன் – அவன்
கவிதையின் இனிமையொர் கணக்கில் இல்லை.
பல்வகை மாண்பினிடையே – கொஞ்சம்
பயித்தியம் அடிக்கடி தோன்றுவதுண்டு
நல்வழி செல்லுபவரை – மனம்
நையும் வரை சோதனை செய் நடத்தையுண்டு.

என்று பாடுகிறார்.

செல்வத்திற்குக் குறைவேயில்லை. எல்லா வளங்களும் நிறைந்திருக்கின்றன. சேமித்து வைத்துள்ள பொன்னும் வெள்ளியும் ஏராளம். கல்வியிலும் மிகச் சிறந்தவன். அவனுடைய கவிதைகளும் இனிமைமிக்கவை. இப்படி எல்லா வகையான மாண்புகளும்

சிறப்புகளும் கொண்டவன். இருப்பினும் அவனிடம் சில பலவீனங்களும் உண்டு. அடிக்கடி அவனுக்குப் பயித்தியம் தோன்றும். இது எல்லா மனிதர்களிடமும் தோன்றும் பொதுவான குணம்தான். அது கண்ணனுக்கும் உண்டு. அத்துடன் நல்லவர்களைக் கடைசிவரை சோதனை செய்யும் நடத்தையும் அவனிடம் இருக்கிறது என்று மகாகவி பாரதி தன்னையும் நமது நாட்டையும் நினைந்து பாடுகிறார்.

"நாவு துணிகுவதில்லை – உண்மை
நாமத்தை வெளிப்பட உரைப்பதற்கே
யாவரும் தெரிந்திடவே – எங்கள்
ஈசனென்றும் கண்ணன் என்றும் சொல்லுவதுண்டு,
மூவகைப் பெயர்புனைந்தே – அவன்
முகமறியாதவர் சண்டை செய்வார்
தேவர் குலத்தவ னென்றே – அவன்
செய்தி தெரியாதவர் சிலருரைப் பார்,

"பிறந்தது மறக்குலத்தில் – அவன்
பேதமற வளர்ந்ததும் இடைக்குலத்தில்
சிறந்தது பார்ப்பனருள்ளே – சில
செட்டி மக்களோடு மிகப் பழக்கமுண்டு
நிறம் தனில் கருமை கொண்டான் – அவன்
நேயமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள்
துறந்த நடைகளுடையான் – உங்கள்
சூனியப் பொய்ச் சாத்திரங்கள் கண்டு நகைப்பான்,

என்று பாரதி கருத்து மிக்க பாடல்களைப் பாடுகிறார்.

பாரதியாரின் கவிதைகளில், கவிதையின்பச் சுவை, நகைச் சுவை, மென்மையான அவலச் சுவை, வியப்புச் சுவை, களிப்புச் சுவை, கோபம், தாபம், சாபம், இரக்கம், முதலிய பல சுவைகளையும் உணர்வுகளையும் காணமுடிகிறது. அதற்குள் அறிய கருத்துக்களும் தத்துவங்களும் லட்சியங்களும், உயர்ந்த குறிக்கோள்களும், சிறந்த செய்திகளும் எல்லாவற்றிற்கும் மேலாக தேச பக்த உணர்வும் ஆழ்ந்த நாட்டுப் பற்றும் இழையோடியிருப்பதையும் காண முடிகிறது. ஆக்கல், நிலை பெறுத்தல், நீக்கல் ஆகிய முத்தொழில்களுக்குரிய மூலவர்கள் மூவர் பற்றிய சண்டைகள், அதில் குறிப்பாக சைவ வைணவ சமயப் பிணக்குகள், வேறுபாடுகள் முதலியன நமது நாட்டில் பல இடங்களிலும், வெளிப்படுகின்றன. இவைகளுக்குள் ஒற்றுமை காணவும் பல முயற்சிகளும் இருந்திருக்கின்றன. அதில் உடன்பாடுகளும் சிறப்பாக ஏற்பட்டுள்ளன. அன்னை மீனாட்சி திருக்கல்யாணமும், அழகர் ஆற்றில் இரங்கும் புனித விழாவும் இணைந்து காட்சியளிப்பதைக் காண்கிறோம்.

ஆழ்வார்களில் குறிப்பாக நம்மாழ்வார் பெருமானுடைய பாசுரங்களில் மும்மூர்த்தி ஒன்றெனக் கருதும் கருத்துக்கள் கூறப்பட்டுள்ளதைக் கண்டோம். பாரதியாரும் இந்த நிறப்பாகு பாடுகளில் ஒற்றுமையையும் உடன்பாட்டையும் காண்பவர். எனவே அவர் கண்ணனை இந்த ஒற்றுமையின் உடன்பாட்டின் சின்னமாகக் காண்கிறார்.

பாரதியார் கண்ணனை மத ஒற்றுமையின் வடிவமாக மட்டுமல்லாமல் சாதி ஒற்றுமை, குல ஒற்றுமையின் வடிவமாகவும் காண்கிறார். தேவர் குலத்தவன் என்று செய்தி தெரியாதவர் கூறுவர். கண்ணன் பிறந்தது மறக் குலத்தில் வளர்ந்தது இடைக் குலத்தில், சிறந்தது பார்ப்பனருள், சில செட்டி மக்களுடனும் தொடர்பு உண்டு, என்று அத்தனை சாதிகளையும் குலங்களையும் இணைத்து, பாரதி தனது கவிதையில் குறிப்பிடுகிறார்.

கண்ணன் கருப்பு நிறமுறையவன். கரு நீலமேனியன், ஆனால் களிப்பது பொன்னிறப் பெண்களுடன், என்று கூறி, பாரதி நிறவேறு பாட்டையும் நிராகரிக்கிறான். பாரதியார் மிக அருமையாக நாட்டிலும் உலகில் பல நாடுகளிலும் உள்ள நிற வேறுபாடுகளையும் நிராகரித்து நிற ஒற்றுமையையும் கண்ணன் வடிவத்தில் உலகுக்கு எடுத்துக் காட்டுகிறார்.

"ஏழைகளைத் தோழமை கொள்வான் செல்வம்
ஏறியார்தமைக் கண்டு சீறி விழுவான்,
தாழவரு துன்பமதிலும் – நெஞ்சத்
தளர்ச்சி கொள்ளாதவர்க்குச் செல்வமளிப்பான்
நாழிகைக் கோர்புத்தியுடையான் – ஒரு
நாளிருந்த படி மற்றோர் நாளினில் இல்லை
பாழிடத்தை நாடியிருப்பான் – பல
பாட்டினிலும் கதையினிலும் நேரமழிப்பான்,

"இன்பத்தை இனிதெனவும் – துன்பம்
இனிதில்லையென்றும் அவன் எண்ணுவதில்லை
அன்பு மிகவும் உடையான் – தெளிந்
தறிவினில் உயிர்க்குலம் ஏற்றமுறவே
வன்புகள் பல புரிவான் – ஒரு
மந்திரி யுண்டெந்தைக்கு விதியென்பவன்,
முன்பு விதித்ததனையே – பின்பு
முறைப்படியறிந்துண்ண மூட்டி விடுவான்,

என்று பாடுகிறார்.

ஏழைகளுக்குத் தோழன் என்றும், செல்வம் மிகுந்தவர் மீது சீறி விழுவான் என்றும், ஏழை பணக்காரன் என்னும் வேறுபாட்டையும் நீக்க முனைந்தவன் கண்ணன் என்றும் பாரதி கூறுகிறார். துன்பத்தில் தளர்ச்சி கொள்ளாதவர்களுக்குச் செல்வத்தைக் கொடுத்து உதவுவான் கண்ணன் என்றும் பாரதி கூறுகிறார். கண்ணனுக்கு நண்பன் குசேலன், ஏழ்மையின் சின்னம் அவன். வறுமையில் வாடிய அக்குசேலனுக்குக் கண்ணன் உதவி செய்தான். அந்த உதவியைக் குசேலனுக்குத் தெரியாமலேயே செய்தான்.

கண்ணன் நாழிகைக்கு ஒரு புத்தி கொண்டிருந்தான், ஒரு நாளுக்கு ஒரு குணம் கொண்டிருந்தான் என்று பாரதி குறிப்பிடுகிறார். கண்ணன் குணத்தை, செய்கையை உறுதியாக இன்னதென்று அறிய முடியாது என்று கூறுகிறார். இதில் ஒரு நகைச் சுவையும், ஆச்சரியமும் அடங்கியிருப்பதுடன், ஒரு தத்துவ நிலையும் தென்படுகிறது. பாழிடத்தையும் நாடியிருப்பான், பாட்டிலும் கதையிலும் நேரம் கழிப்பான் என்றும் கூறுகிறார். கண்ணன், எந்த நேரத்திலும், எந்த வேலையிலும், எந்த நிலையிலும் இருப்பான் என்பது, கண்ணனுடைய உலகளாவிய பிரபஞ்ச நிலையைப் பாரதி குறிப்பிடுகிறார்.

கண்ணன் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் வேறுபாடு காணமாட்டான். அன்பும் அறிவும் நிறைந்தவன். உயிர்க்குலம் அனைத்தும் ஏற்றமடைய வேண்டியதனைத்தையும் செய்வான் என்றெல்லாம் கண்ணனைப் பாரதி பாராட்டுகிறார்.

“வேதங்கள் கோத்து வைத்தான் – அந்த
வேதங்கள் மனிதர் தம் மொழியில் இல்லை
வேதங்கள் என்று புவியோர் – சொல்லும்
வெறும் கதைத் திரளில் அவ்வேதமில்லை

வேதங்கள் என்றவற்றுள்ளே – அவனவ்
வேதத்தில் சிலசில கலந்ததுண்டு
வேதங்களன்றி யொன்றில்லை – இந்த
மேதினி மாந்தர் சொலும் வார்த்தைகளெல்லாம்,

"நாலு குலங்கள் அமைத்தான் – அதை
நாச முறப்புரிந்தனர் மூட மனிதர்
சீலம் அறிவு தர்மம் – இவை
சிறந்தவர் குலத்தினில் சிறந்தவராம்
மேலவர் கீழவர் என்றே – வெறும்
வேடத்தில் பிறப்பினில் விதிப்பனவாம்
போலிச் சுவடியை யெல்லாம் – இன்று
பொசுக்கி விட்டால் எவர்க்கும் நன்மை உண்டென்பான்.

என்று கண்ணன் என் தந்தை என்னும் தலைப்பில், மிகவும் அற்புதமான கருத்தாழம் மிக்க கவிதையைப் பாரதி பாடுகிறார்.

இப்பாடல்களில் வேதங்களைப் பற்றி ஒரு சிறந்த கருத்துண்மையைப் பாரதி குறிப்பிடுகிறார். பாரதி தனது பகவத் கீதைத் தமிழாக்க நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில் வேதங்களைப் பற்றிய ஒரு விரிவான வரலாற்று விளக்கத்தையே கூறுகிறார்.

"சம்ஹிதைகள் என்று மந்திரங்கள் சொல்லப்படுவனவே உண்மையான வேதங்கள். அவையே ஹிந்து மதத்தின் வேர். அவை வசிஷ்ட, வாம தேவாதி தேவரிஷிகளின் கொள்கைகளைக் காட்டுவன" என்றும், இந்த மந்திரங்கள் அல்லது சம்ஹிதைகள்

பழைய, மிகப் பழைய சமஸ்திருத பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன.'' எனவும் சமஸ்கிருத பாஷையிலுள்ள மற்றெல்லா நூல்களும் ஒரு பாஷை, வேதம் மாத்திரம், அதாவது சம்ஹிதை அல்லது மந்திரம் மாத்திரம் தனியான பாஷையாக இருக்கிறது. வேத சமஸ்கிருதம், வேறு எந்த நூலிலும் கிடையாது என்றும், "வேத மந்திரங்களுக்குச் சரியான அர்த்தம் கண்டுபிடிக்க வேண்டும் என்று தற்காலத்து ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் அநேக பண்டிதர்கள் மிகவும் சிரமப் படுகிறார்கள்'' என்றெல்லாம் பாரதி கூறுகிறார்.

எனவே வேதங்களைப் பற்றியும் அவைகளின் உண்மைப் பொருள்களைப் பற்றியும் தொடர்ந்து ஆய்வுகள் நடை பெற்று வருகின்றன. மேலும் அவ்வாய்வுகள் தொடர வேண்டும். போலி விளக்கங்கள், மற்றும் போலிக் கதைகளிலிருந்து வேதங்களை விடுவிக்க வேண்டும், வேதங்களின் உண்மையான கருத்துக்கள் உலக மக்கள் அனைவருக்கும் பொதுவானவைகளாக்கப் பட வேண்டும் என்பது பாரதியின் கருத்தாகும்.

சமஸ்கிருதமே கூட மக்கள் பேசும் அல்லது மக்கள் பேசிய மொழியல்ல. அது பண்டிதர்களின் மொழியாகும். பாரத நாட்டில் உள்ள அனைத்து மொழிப் பண்டிதர்களும் சமஸ்கிருதப் பண்டித மொழியின் வளர்ச்சிக்குத் தங்கள் பங்கை ஆற்றியுள்ளார்கள். அம்மொழியை நம் நாட்டுப் பண்டிதர்களின் பொது மொழியாக ஒரு வளமான சிறந்த மொழியாக தனிச் சிறப்பு மிக்க மொழியாக வளர்த்திருக்கிறார்கள்.

வேதங்களைப் பொருத்தவரையில் அது சமஸ்கிருத மொழியில் இல்லை. அது பூர்வ மொழியில் அமைந்திருக்கிறது. அதை வேத மொழி என்றுதான் குறிப்பிட வேண்டும். அதற்கு இன்று நமக்குக் கிடைத்துள்ள சாயனபாஷ்யமே ஓரளவுக்குச் சரியான விளக்கம் கொடுப்பதாகும். உபநிடதங்கள் என்பது பின்னர் வந்த நூல்களாகும்.

அவை வேத பாஷையில் இல்லை. அவை சமஸ்கிருத மொழியில் அமைந்துள்ளன. அதை வேதாந்தம் என்றும் கூறுகிறார்கள் என்பது பாரதியின் கருத்தாகும்.

அதனால்தான் பாரதி "கண்ணன் எனது தந்தை" என்னும் தனது பாடலில் அந்த "வேதங்கள் மனிதர் தம் மொழியில் இல்லை. என்றும் "வேதங்கள் என்று புவியோர் சொல்லும் வெறும் கதைத்திரளில் அவ்வேதமில்லை என்றும், அம்மனிதர் கூறும் வேதங்களில் பல கலப்புகள் ஏற்பட்டுள்ளன வென்றும், வேதங்கள் என்பது இந்த உலகத்து மக்கள் சொல்லும் மெய்யான சுத்தமான வார்த்தைகள் தான் என்றெல்லாம், பாரதி குறிப்பிடுவது பற்றி நாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

நாலு குலங்கள் என்னும் குலப்பிரிவுகள் பற்றிய பாரதியின் கருத்து மிகவும் தெளிவாக அமைந்துள்ளது. வேதங்களில் சாதிகள் சாதிப் பிரிவுகள் பற்றி கூறப்படவில்லை. அவை பின்னர்தான் ஏற்பட்டிருக்கின்றன. மனு தர்மம் சாதிப்பிரிவுகளை வகுத்தது.

கண்ணன் கீதையில், "குணத்துக்கும் செய்கைக்கும் தக்கபடி நான் நான்கு வருணங்களை சமைத்தேன்" என்றுதான் குறிப்பிடுகிறார். பாரதி தனது கீதைத் தமிழாக்க நூலின் முன்னுரையில், "கண்ணபிரான் மனிதருக்குள் சாதி வேற்றுமையும் அறிவு வேற்றுமையும் பார்க்கக் கூடாது என்பது மட்டுமேயன்றி எல்லா உயிர்களுக்குள்ளேயும் எவ்வித வேற்றுமையும் பாராட்டாதிருத்தலே ஞானிகளுக்கு லட்சணம் என்று சொல்லுகிறார்" என்று குறிப்பிடுகிறார்.

அதனால்தான் பாரதி தனது பாடலில் "நாலு குலங்கள் அமைத்தான், அதை நாசமுறப்புரிந்தனர் மூட மனிதர்" என்றும், "சீலம் அறிவு தர்மம்", இவைகளில் சிறந்தவர் மனிதர்களில் சிறந்தவர்கள்

என்றும் “ வெறும் வேடத்தில் பிறப்பினில் சாதியில்லை, என்றும் அவ்வாறு கூறும் சுவடிகள் போலிச் சுவடிகள் என்றும், அப்போலிச் சுவடிகளைப் பொசுக்கி விட்டால் எல்லோருக்கும் நன்மையுண்டென்றும் கண்ணன் கூறியுள்ளதாகக் குறிப்பிடுகிறார் பாரதி.

வயது முதிர்ந்து விடினும் – எந்தை
வாலிபக்களை யென்றும் மாறுவதில்லை
துயரில்லை, மூப்பில்லை – என்றும்
சோர்வில்லை, நோயொன்றும் தொடுவதில்லை,
பயமில்லை, பரிவொன்றில்லை – எவர்
பக்கமும் நின்றெதிர்ப்பக்கம் வாட்டுவதில்லை,
நயம்மிகத் தெரிந்தவன் காண் – தனி
நடுநின்று விதிச் செயல் கண்டு மகிழ்வான்.

“துன்பத்தில் நொந்து வருவோர் – தம்மை
தூவென்று இகழ்ந்து சொல்லி அன்பு கனிவான்,
அன்பினைக் கைக்கொள் என்பான் துன்பம்
அத்தனையும் அப்பொழுது தீர்ந்திடும் என்பான்,
என்புடைப்பட்ட பொழுதும் – நெஞ்சில்
ஏக்க முறப் பொருப்பவர் தம்மையு கப்பான்
இன்பத்தை எண்ணுபவர்க்கே – என்றும்
இன்ப மிகத்தருவதில் இன்பமுடையான்”

என்று “கண்ணன் என் தந்தை” என்னும் கவிதையைப் பாடி முடிக்கிறார்.

**கண்ணன்** என்னும் என் தந்தைக்கு வயதாகிவிட்டது. ஆயினும் **வாலிபக்களை** மாறவில்லை. அவனுக்குத் துயரில்லை மூப்புமில்லை. **எப்போதும்** சோர்வில்லை. நோயே தொடுவதில்லை. பயமில்லை. பரிவு **ஒன்று**மில்லை. ஒரு சார்பாக என்னும் பேதம் இருப்பதில்லை. நடுநிலையில் நின்று அனைவருக்கும் நன்மை செய்வான். துன்பம் மிகுந்து வருவோரிடம் அன்பு கனிந்து பேசுவான். அன்பினைக் கைக்கொண்டால், துன்பம் அனைத்தும் தீரும் என்பான். இன்பத்தை எண்ணுவோருக்கு இன்பமளித்து இன்புறுவான் என்று பாரதி கூறி முடிக்கிறார். பாரதி இப்பாடலில் கீதையின் வழியில் தனது கருத்தைத் தெளிவுபடக் கூறுவதைக் காண்கிறோம்.

## கண்ணன் - என் சேவகன்

இப்பாடல் ஒரு அற்புதமான பாடலாகும். நகைச் சுவையும் தத்துவ ஞானப் பொருளும் நிறைந்ததாகும். இப்பாடலில் பாரதி தன்னைக் கண்ணனுடன் இணைத்துக் கொண்டு ஒன்றாக்கிக் கொண்டிருக்கிறார். இப்பாடல் ஈடு இணையில்லாத ஒரு அருமையான இலக்கியமாகும். இப்பாடலுக்கும் விளக்கமும் விரிவுரையும் தேவைப்படவில்லை. எளிய பதங்களில் பாரதி தனது அன்புள்ளத்தையும், அறிவையும் செயலையும் சிந்தனையையும் கண்ணனுடன் இணைத்துக் கொண்டிருக்கிறார். ஆண்டவனைத் தேடி நீசெல்லாமல், உனது அழ்ந்த பக்தியால் ஆண்டவனே உன்னைத் தேடி வந்து உனக்கு உதவிடுவான் என்னும் வைணவ தத்துவத்தின் படி, இப்பாடலில் கண்ணனே பாரதியைத் தேடி வந்து அவருக்கு சேவை செய்வதாகப் பாவித்து பாரதி குறிப்பிடுகிறார். இது ஒரு அருமையான புதுமையான வடிவத்தில் அமைந்த பாடலாகும். இப்பாடல் ஒரு உரையாடல் போல அமைந்திருக்கிறது. சாதாரணமாக, நாம் ஒவ்வொரு வீட்டில் நடப்பில் காணும் பிரச்னைகள், விவரங்கள், விளக்கங்கள், காரணங்கள், தோரணைகள் வேடிக்கைகள் ஆகியவற்றை இக்கவிதையில் காணலாம்.

கண்ணனை நான் ஆட்கொண்டேன், கண் கொண்டேன். கண்ணன் என்னை ஆட்கொள்ளக் காரணமும் உள்ளன என்று பாடி முடிக்கிறார் இப்பாடலை முழுமையாகத் தொடர்ச்சியாக அப்படியே இங்கே கொடுத்துள்ளோம். இப்பாடலை எத்தனை முறை வேண்டுமானாலும் திரும்பத்திரும்பப் பாடிப்பாடி மகிழலாம்.

"கூலி மிகக் கேட்பார்,
கொடுத்ததெலாம் தாம் மறப்பார்,
வேலை மிக வைத்திருந்தால்
வீட்டிலே தங்கிடுவார்.

" ஏனடா நீ நேற்றைக் கிங்கு
வரவில்லை யென்றால்
பானையிலே தேளிருந்து
பல்லாற் கடித்தது என்பார்,

"வீட்டிலே பெண்டாட்டி மேல்
பூதம் வந்த தென்பார்
பாட்டியார் செத்துவிட்ட
பன்னிரண்டாம் நாளென்பார்

"ஓயாமல் பொய்யுரைப்பார்,
ஒன்றுரைக்க வேறு செய்வார்,
தாயாதி யோடு தனியிடத்தே பேசிடுவார்
உள்வீட்டுச் செய்தியெல்லாம் ஊரம் பலத்து உரைப்பார்,

"எவ்வீட்டில் இல்லையென்றால் எங்கும் முரசறைவார்
சேவகரால்பட்ட சிரமம் மிகவுண்டு கண்டீர்
சேவகரில்லா விடிலோ செய்கை நடக்கவில்லை
இங்கிதனால் யானும் இடர்மிகுந்து வாடுகையில்,

"எங்கிருந்தோவந்தான் இடைச்சாதி நான் என்றான்,
மாடுகன்று மேய்த்திடுவேன் மக்களை நான்
காத்திடுவேன்,
வீடுபெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்,
சொன்னபடி கேட்பேன், துணி மணிகள்
துவைத்திடுவேன்

"சின்னக் குழந்தைக்குச் சிங்காரப் பாட்டிசைத்தே,
ஆட்டங்கள் காட்டி அழாதபடி பார்த்திடுவேன்
காட்டு வழியானாலும் கள்ளர்பய மானாலும்
இரவில் பகலிலே எந்நேரமானாலும்,
சிரமத்தைப் பார்ப்பதில்லை, தேவரீர் தம்முடனே
சுற்றுவேன், தங்களுக்கோர் துன்ப முறாமற் காப்பேன்,
கற்றவித்தை யேதுமில்லை, காட்டு மனிதன் ஐயே!
ஆன பொழுதும் கோலடி குத்துப் போர் மற்போர்
நானறிவேன், சற்றும் நயவஞ் சனை புரியேன்,
"என்று பல சொல்லி நின்றான்" ஏது பெயர்
சொல் என்றேன்,

ஒன்றுமில்லை, கண்ணன் என்பர்
ஊரில் உள்ளோர் என்னை " என்றான்

கட்டுறுதி யுள்ளவுடல் கண்ணிலே நல்ல குணம்,
ஒட்டுறவே நன்றாய் வுரைத்திடுஞ்சொல் ஈங்கிவற்றால்
தக்கவன் என்று உள்ளத்தே சார்ந்த மகிழ்ச்சியுடன்,
மிக்கவுரை பல சொல்லி விருது பலசாற்று கிறாய்
கூலியென்ன கேட்கின்றாய் கூறுக என்றேன் ஐயனே!

தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததிகள் ஏதுமில்லை,
நானோர் தனியாள், நரைதிரை தோன்றாவிடினும்
ஆனவயதிற் களவில்லை, தேவரீர்
ஆதரித்தால் போதும் அடியேனை நெஞ்சிலுள்ள
காதல் பெரிது எனக்குக்காசு பெரிதில்லை" யென்றான்

" பண்டைக்காலத்துப் பயித்தியத்தில் ஒன்றெனவோ
கண்டு மிகவும் களிப்புடனே நான் அவனை
ஆளாகக் கொண்டுவிட்டேன் அன்று முதற்கொண்டு
நாளாக நாளாக நம்மிடத்தே கண்ணனுக்கு

"பற்று மிகுந்து வரல் பார்க்கின்றேன் கண்ணனால்,
பெற்றுவரும் நன்மையெல்லாம் பேசி முடியாது
கண்ணையிமை யிரண்டும் காப்பது போல் என்குடும்பம்
வண்ணமுறக் காக்கின்றான் வாய் முணுத்தல்
கண்டறியேன்

"வீதி பெருக்குகிறான், வீடு சுத்தமாக்குகிறான்
தாதியர்செய் குற்றமெலாம் தட்டியடக்குகிறான்
மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய், வைத்தியனாய்
ஒக்க நயங்காட்டுகிறான் ஒன்றும் குறைவின்றிப்

"பண்டமெலாம் சேர்த்து வைத்துப் பால்
வாங்கி மோர் வாங்கிப்
பெண்டுகளைத் தாய்போல் பிரியமுற ஆதரித்து
நண்பனாய், மந்திரியாய் நல்லாசிரியனுமாய்
பண்பிலே தெய்வமாய் பார்வையிலே சேவகனாய்
எங்கிருந்தோ வந்தான், இடைச்சாதியென்று
சொன்னான்
இங்கிவனை யான்பெறவே என்ன தவம்
செய்துவிட்டேன்
கண்ணன் எனதகத்தே கால் வைத்த நாள் முதலாய்

"எண்ணம் விசாரம் எதுவும் அவன் பொறுப்பாய்ச்
செல்வம், இளமாண்பு, சீர், சிறப்பு நற்கீர்த்தி
கல்வி, அறிவு, கவிதை, சிவயோகம்,
தெளிவே வடிவாம் சிவஞானம் என்றும்,
ஒளிசேர் நல மனைத்தும் ஓங்கி வருகின்றன காண்
கண்ணனை நான் ஆட் கொண்டேன்
கண் கொண்டேன் கண் கொண்டேன்

கண்ணன் என்னை ஆட்கொள்ளக் காரணமும் உள்ளனவே என்று உள்ள முருகப் பாரதி – கண்ணன் என் சேவகன் என்னும் பாடலைப் பாடி முடிக்கிறார்.

கண்ணன் எல்லா வகையிலும் நமக்குத் துணையாக இருப்பான். நண்பனாய், மந்திரியாய், நல்லாசிரியனாய், பண்பிலே தெய்வமாய், பார்வையிலே சேவகனாய் இருக்கிறான்.

கண்ணன் என்னகத்தே கால் வைத்த நாள் முதலாய் செல்வம், இளமாண்பு, சீர்சிறப்பு, நற்கீர்த்தி, கல்வி, அறிவு, கவிதை, சிவயோகம், சிவஞானம் முதலிய அனைத்து நலன்களும் ஓங்கி வருகின்றன, எண்ணம், விசாரம், கவலை எதுவுமில்லை என்று பாரதியார் இந்தக் கவிதை மூலம் நமக்குக் கூறுகிறார்.

கண்ணனிடம் பாரதிக்குள்ள ஈடுபாட்டிற்கு அளவேயில்லை. ஆழ்வார்களுக்கடுத்தபடியாகப் பாரதியைக் கண்ணனுக்கருகில் உயர்த்தி நிறுத்தலாம். பாரதி தனக்காகவல்லாமல் நாட்டிற்காக உலக க்ஷேமத்திற்காக கண்ணனை சேவகனாகப் பாவித்து மிகுந்த பக்தியுடன் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு இப்பாடலைப் பாடியுள்ளார். “எங்கிருந்தோ வந்தான்” என்னும் பாரதியின் சொற்கள் நமது உள்ளத்தில் என்றென்றும் நிலைத்து நிற்கும். கண்ணன் வாழ்க! பாரதி வாழ்க!

## கண்ணன் என் அரசன்

அரசனுடைய, அரசு தன்னுடைய கடமை, நாட்டையும் நாட்டு மக்களையும் காத்தலாகும். அதனாலேயே அரசனுக்குக் காவலன் எனப் பெயர் ஏற்பட்டது. மக்களைக் காத்தல் என்றால், நாட்டையும் நாட்டு மக்களையும் உள்நாட்டுக் குழப்பங்களிலிருந்தும், கலகங்களிலிருந்தும், மக்களுக்கு எதிராகக் குற்றங்கள் புரியும் தீயசக்திகள், சமூக விரோத சக்திகளிடமிருந்தும், மக்களின் உயிரையும் உடமைகளையும் காப்பது, வனவிலங்குகளின்

தாக்குதல்களிலிருந்து மக்களைக் காப்பது, அன்னியப் படையெடுப்புகளிலிருந்து நாட்டையும் நாட்டு மக்களையும் காப்பது, இயற்கைச் சீற்றங்களிலிருந்து அதாவது புயல், பெருமழை, பெருவெள்ளம், சூரைக் காற்று வறட்சி பஞ்சம் முதலியவற்றால் ஏற்படும் சேதங்களிலிருந்து மக்களுக்கு ஏற்படும் துயர்களைத் தணிப்பது, துடைப்பது, நிவாரணங்களுக்கு ஏற்பாடு செய்வது முதலியனவாகும். இதுவே மன்னனின் முதல் கடமையாகிறது. அத்துடன் மக்களுக்கும் நாட்டிற்கும் தேவையான பொருள்களை உற்பத்தி செய்தல் அவற்றை சேகரித்து சேமித்தல், பாதுகாத்தல் விநியோகித்தல் அவைகளை நிர்வகித்தல் பார்வையிடல் சீரமைத்தல், முதலிய கடமைகளையும் அரசு நிறைவேற்ற வேண்டும்.

ஆலயங்கள் பராமரித்தல், கல்வி பெருக்குதல் மக்களின் இதர நலன்களைக் காத்தல் முதலியனவும் அரசனின், ஆட்சி நிர்வாகத்தின் முக்கிய கடமையாகும். தற்காலத்தில் அரசினுடைய கடமைகள் மேலும் விரிவடைந்து வருகின்றன.

படைகள் சேர்த்தல், பரிசனம் சேர்த்திடல் பணமுண்டாக்கல், ஆகியவை அரசர் தம் கடமையாக பாரதி குறிப்பிடுகிறார். ஆயர்பாடி மக்களுக்கு அண்டை நாட்டு அரசர்கள் மூலம் தொடர்ந்து படையெடுப்பு அபாயங்கள் நேர்ந்து கொண்டிருந்தன. இந்திரன், கம்சன், சிசுபாலன், இவ்வாறு பல கொடுங்கோலர்களும் பல அசுரர்களும் அரக்கிகளும் தொடர்ந்து ஆயர்பாடி மக்களைத் தாக்கிக் கொண்டிருந்தார்கள். மக்கள் தங்கள் பாதுகாப்பிற்குக் கண்ணனை எதிர்பார்த்தார்கள். கண்ணன் என்னும் அரசன் பகைமையை ஒழிப்பான் என்று மக்கள் காத்துக் கொண்டிருந்தனர். கண்ணன் ஒரு பக்கம் எதைப் பற்றியும் கவலைப் படாமல் கூத்துக்களிலும், பாட்டுகளிலும் காலம் கழித்தான். இடையன், வீரமில்லாதவன் அஞ்சினோன், என்றெல்லாம் வசைகள் பொழிந்தாலும் அவைகளைப் பற்றியெல்லாம் சட்டை செய்யாமல் இருந்தான். ஆயினும், மறுபக்கம்,

காலம் வந்தபோது கண்ணன் கணத்திலே செயலில் ஈடுபட்டான் என்று பாரதி குறிப்பிடுகிறார்.

காலம்வந்து கைகூடும் போதிலோர்
கணத்திலே புதிதாக விளங்குவான்,
ஆலகால விடத்தினைப் போலவே
அகில முற்றும் அசைந்திடச் சீறுவான்

என்றும்,

வேரும் வேரடி மண்ணும் இல்லாமலே
வெந்துபோகப் பகைமை பொசுக்குவான்
பாரும் வானமும் ஆயிரம் ஆண்டுகள்
பட்ட துன்பம் கணத்திடை மாற்றுவான்

என்றும்,

சக்கரத்தை எடுப்பது ஒருகணம்,
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்
இக்கணத்தில் இடைக்கண மொன்றுண்டோ
இதனுள்ளே பகைமாய்த்திட வல்லன்காண்,

என்றும் பாரதி பாடுகிறார்.

அத்தகைய கண்ணன் எங்கள் அரசன். அவன் புகழினை எனது கவிதைகளில் காலமெல்லாம் போற்றுவேன். கண்ணனுடைய கோயிலின் திண்ணை வாயிலைப் பெருக்க வந்த என்னை அக்கண்ணன் தனது மந்திரியாக்கினான். நித்தமும் சோறு வேண்டி ஏவல் செய்ய வந்த என்னை பெரும் செல்வந்தனாக்கினான். வித்தைகள் பயின்றிடாத எனக்கு வேதநுட்பங்கள் விளங்கிடச்

செய்தான், அத்தகைய எம்பெருமான், கண்ணன் எம்பெருமான் அருள் வாழ்கவே கலியழிந்து புவித்தலம் வெல்கவே அண்ணல் நின்னருள் நாடிய நாடுதான் அவலம் நீங்கிப் புகழில் உயர்கவே என்று கண்ணனை வாழ்த்தி, அவனருளால் நாட்டின் அவலம் நீங்கி நலன் பெற்று நாடு புகழடையும்படி அக்கண்ணன், கண்ணன் என்னும் அரசனை வேண்டுகிறார் கவிஞர் பாரதி.

## கண்ணன் என் சீடன்

கண்ணன் என் சேவகன் என்னும் கவிதையைப் போலவே கண்ணன் என் சீடன் என்னும் கவிதையும் மிகவும் சிறப்பு வாய்ந்தது. தனித்தன்மை கொண்டது. புகழ்மிக்கது, மிகப் பிரபலமானது. அடங்காக் குழந்தை, அடங்காத சீடன், சுட்டிப் பயல் போல கண்ணனை பாவித்து அக்கண்ணனைத் தான் திருத்த முயலுவதாகவெல்லாம் பாரதியார் பாடுகிறார்.

நம்மாழ்வாரைத் தொடர்ந்து பாரதியும் கண்ணனைத் தத்துவ நிலையில் காண்கிறார்.

"யானேயாகி என்னலாற் பிறவாய்
யானும் அவையுமாய் இரண்டினும்
யாதோ பொருளாம்மாயக் கண்ணன்"

என்று கண்ணன் – என் சீடன் என்னும் பாடலைப் பாரதி தொடங்குகிறார்.

கண்ணன் சீடனாக வந்து தன்னைச் சேர்ந்ததாகக் கற்பித்துப் பாரதி தன்னை மறந்து பாடுகிறார். அந்த மாயக் கண்ணன், என்னிலும் அறிவில் குறைந்தவன் போலவும், என்னைத் துணையாகக் கொண்டு, என்னுடைய முயற்சியால், என்னுடன் பழகுவதால், என் சொல்லைக் கேட்பதால் அவன் மேம்பாடு எய்த

வேண்டினான் போலவும், யான் சொல்லும் கதையிலும் எனது புத்தி அளவிலும், பெருமை உள்ளனவென்று அவன் கருதுவது போலவும் அந்தக் கண்ணன் கள்வன், என்னிடம் சீடனாக வந்து சேர்ந்தனன் என்றும் பாரதி கூறுகிறார்.

இந்த உலகத்திலே உள்ள மாந்தர்க்கு உற்ற துயர்களையெல்லாம் போக்கி, இன்பத்தை நிறுத்த நான் எண்ணினேன். அந்தப் பிழைக்காக எனக்கு தண்டனை கொடுக்க எண்ணி "மாயக் கண்ணன் வலிந்தெனைச் சார்ந்து புகழ்ச்சிகள் கூறியும் புலமையை வியந்தும் பலவகையாய் அகப்பற்றுறச் செய்தான் என்று பாரதி குறிப்பிடுகிறார்.

அவ்வாறு தன்னிடம் வந்த மாயக் கண்ணனைச் சீடனாக ஏற்று அவனை உயர்நிலைப்படுத்த ஊக்கம் கொண்டு அவனிடம்

"இன்னது செய்திடேல், இவரோடு பழகேல்,
இவ்வகை மொழிந்திடேல், இனையன விரும்பேல்
இன்னது கற்றிடேல், இன்ன நூல்கற்பாய்,
இன்னவர் உறவு கொள், இன்னவை விரும்புவாய்"
எனப் பலதருமம் எடுத்தெடுத்தோதி
ஒய்விலாது அவனோடு உயிர் விடலானேன்"

என்று குறிப்பிடுகிறார்.

ஆனால் கண்ணனோ, பாரதி கூறிய அறிவுரைகளைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. சொன்னதற்கெல்லாம் நேர் எதிரிடையாகவே நடந்தான்.

" கண்ணனாம் சீடன்யான் காட்டிய வழியெலாம்,
விலகியே நடக்கும் விநோதமிங்கன்றியும்,

உலகினர் வெறுப்புறும் ஒழுக்க மத்தனையும்
தலையாக் கொண்டு சார்பெலாம் பழிச்சொலும்
இகழும் மிக்கவனாய் என் மனம் வருந்த
நடந்திடல் கண்டேன்" என்று குறிப்பிடுகிறார்.

இங்கு பாரதி உலகியல் நடப்பில் உள்ள பல பழக்க வழக்கங்களையும் சாதாரண மக்களின் இயல்புகளையும் மதிப்பீடுகளையும் பற்றிச் சில அரிய கருத்துக்களைக் குறிப்பிடுகிறார்.

"கதையிலே கணவன் சொல்லினுக்கெல்லாம் எதிர்செயும் மனைவி போல" என்று குறிப்பிடுகிறார்.

நானிலத்தவர்தம், மதிப்பையும், புகழுறு வாழ்வையும் புகழையும் தெய்வமாகக் கொண்ட சிறுமதி யுடையேன் என்று குறிப்பிடுகிறார். சாதாரண மக்கள் வெறும் மதிப்பையும் புகழையும், புகழ்மிக்க வாழ்க்கையையும் (மற்றவர்கள் நம்மை போற்றிப் புகழும் வாழ்க்கை – அது போலியாகக் கூட இருக்கலாம் அப்படிப்பட்ட வாழ்க்கையை) விரும்புகிறார்கள் என்பது உலகியலாகும்.

இத்தகைய உலக மக்கள் சாதாரண உணர்விலேயே இதர மக்களையும் பர்ர்க்கிறார்கள். அப்படியாகவே அவர்கள் கண்ணனையும் காண்கிறார்கள் எனக் கருதுகிறார் பாரதி அவர் மேலும் கூறுகிறார் . . . . . நாட்பட நாட்படக் கண்ணனும் தனது கழிபடு நடையில் மிஞ்சுவனாகி, வீதியிற் பெரியோர் கிழவியரெல்லாம் கிறுக்கன் என்றிவனை இகழ்ச்சியோடு, இரக்கமும் உற்று ஏளனம் புரியும் நிலையும் வந்திட்டான்" என்று குறிப்பிட்டுச் சாதாரண மக்கள் கண்ணனைப் பற்றிக் குறைவாகப் பேசுவதாகக் கற்பித்துப் பாரதி:

"நெஞ்சிலே எனக்குத் தோன்றிய வருத்தம் சொல்லிடப்படாது" என்று குறிப்பிடுகிறார்.

நாட்டில் பல இளைஞர்களின் நிலையும் மற்றவர்களுடைய ஏளனத்திற்கு உரியது போல இருப்பதை நினைந்து பாரதி வருத்தமடைகிறார் எனவே,

"முத்தனாக்கிட நான் முயன்றதோர் இளைஞன், பித்த னென்றுலகினர் பேசிய பேச்சு என் நெஞ்சினை அறுத்தது" என்று கூறிப் பாரதி மிகவும் வருத்தமடைந்துப் பேசுகிறார்.

எனினும் தொடர்ந்து விடா முயற்சியுடன்,

"------- நீதிகள் பலவும்
தந்திரம் பலவும், சாத்திரம் பலவும்
சொல்லி கண்ணனை நான்
தொளைத்திடல் ஆயினேன்"

என்றும்,

"தேவ நிலையிலே சேர்ந்திடா விடினும்
மானுடம் தவறி மடிவுறா வண்ணம்
கண்ணனை நானும் காத்திட விரும்பித்
தீயெனக் கொதித்துச் சின மொழி யுரைத்தும்
சிரித்துரை கூறியும், செள்ளென விழுந்தும்
கேலிகள் பேசிக் கிளறியும், இன்னும்
எத்தனை வகையிலோ என் வழிக்கு அவனைக்
கொணர்ந்திட முயன்றேன்,

கொள்பயன் ஒன்றில்லை'' என்று கவலை கொண்டு பாரதி கூறுகிறார்.

இதுவே எல்லா இளைஞர்களைப் பற்றியும், அவர்களிடம் அன்பு கொண்டு அவர்களை உயர்ந்த மனிதர்களாக ஆக்க முயலும் ஆசிரியர்களுடைய விருப்பமும் ஆசையும் ஆகும் என்பதைப் பாரதி தனது உள்ளத்தில் எழும் கவிதை மூலம் கூறுகிறார்.

“தேவ நிலையிலே சேர்ந்திடாவிடினும்
மானுடம் தவறி மடிவுறா வண்ணம்

என்று நிதானமாகவே காரிய சாத்திய அளவிலேயே மதிப்பிட்டு, மானுட நிலையாவது தவறாது நிலைத்திடல் வேண்டுமென்று பாரதி கவலை கொள்கிறார், ஆனால்,

“கண்ணன் பித்தனாய்க் காட்டானாகி
எவ்வகைத் தொழிலிலும் எண்ணம் அற்றவனாய்
எவ்வகைப் பயனிலும் கருத்தி ழந்தவனாய்,
குரங்காய்க் கரடியாய்க் கொம்புடைப் பிசாசாய்
யாதோ பொருளாய் எங்ஙனோ நின்றான்”

என்று மனம் நொந்து கூறுகிறார்.

இதனால்,

அகந்தையும் மமதையும் ஆயிரம் புண்ணுற
யான் கடும்சினமுற்று எவ்வகையானும்,
கண்ணனை நேருறக் கண்டே தீர்ப்பான்,
எனப் பெருந்தாபமெய்தினேனாகி,

"எவ்வாறேனும் இவனையோர் தொழிலில்
ஓரிடந்தன்னில் ஒரு வழி வலிய
நிறுத்துவோமாயின் நேருற்றிடுவான்

என்று எண்ணி அதற்காகத் தக்க சமயம் வரும் வரை காத்திருந்ததாகவும் அதன்பின் ஒரு நாள் கண்ணனைத் தனது வீட்டிற்கழைத்துத் தனியே கொண்டு போய்,

"மகனே, என்பால் வரம்பிலா நேசமும்
அன்புநீ யுடையை, அதனையான் நம்பி,
நின்னிடம் ஒன்று கேட்பேன், நீயது
செய்திடல் வேண்டும் சேர்க்கையின் படியே
மாந்தர் தம்செயல் எலாம் வகுப்புறல் கண்டாய்"

என்று குறிப்பிட்டுக் கூறி மேலும் தொடர்ந்து,

சாத்திர நாட்டமும் தருக்கமும் கவிதையில்
மெய்ப் பொருள் ஆய்வதில் மிஞ்சிய விழைவும்,
கொண்டோர் தமையே அருகினில் கொண்டு
பொருளினுக்கலையும் நேரம் போக
மிஞ்சிய பொழுதெலாம் அவருடன் மேவி
இருந்திடல் ஆகுமேல், எனக்கு நன்றுண்டாம்
பொழுதெலாம் என்னுடன் போக்கிட விரும்பும்
அறிவுடை மகனிங்குனையலால் அறிந்திடேன்"

என்று கூறி,

"ஆதலால்,

என்பயின் கருதி, எனக்கொருதுணையாய்

என்னுடன் சிலநாள் இருந்திட நின்னை

வேண்டிநிற்கின்றேன், வேண்டுதல் மறுத்தே

என்னைநீ துன்பமெய்து வித்திடாமே,

இவ்வுரைக் கிணங்குவாய்! என்றேன்" என்று குறிப்பிடுகிறார்.

இதன் பின்னர், கவிதையில், கவிஞருக்கும் கண்ணனுக்கும் ஒரு உரையாடல் நிகழ்கிறது. அது ஒரு அபூர்வமான இலக்கிய வளம் நிறைந்த தெய்வீக உரையாடலாகும். ஆழ்ந்த கவியுள்ளம் கொண்டதாகும். இங்கு பாரதியின் கவியுள்ளம் பெருங்கடலின் ஆழத்தைக் காட்டிலும் ஆழமானது. அவருடைய சிந்தனை கைலாய மலையின் சிகரத்தைக் காட்டிலும் உயரமாக உள்ளது. கவிஞர் கூறுவதும், சீடன் மாயன் பதிலளிப்பதுமான உரையாடல் மிக எளிமையாகத் தோன்றிய போதிலும் அதன் ஆழத்தையும் உயரத்தையும் காண்பது கடினமாகத் தெரிகிறது. பாரதியின் பக்தி அதில் நிறைந்து நிற்கிறது.

"பாரதியின் வேண்டுகோளுக்கிணங்கி,

கண்ணனும் அங்ஙனமே புரிவேன் ஆயின்,

நின்னிடத்தே தொழில் இல்லாது யாங்ஙனம்,

சோம்பரில் இருப்பது, காரியம் ஒன்று காட்டு

வையாயின் இருப்பேன் என்றான் "

"இவனுடைய இயல்பையும் திறனையும் கருதி" என் செய்யுளையெல்லாம் நல்லதோர் பிரதியில் நாள் தோறும் எழுதி கொடுத்திடும் தொழிலினைக் கொள்ளுதி" என்றேன்.

கண்ணனும் "நன்றெனக் கூறியோர் நாழிகையிருந்தான்" பின்னர் " செல்வேன்" என்றான். அதாவது போகிறேன் என்றான். அப்போது கவிஞன் கோபம் கொள்கிறான்.

"சினத்தோடு நானும்,
பழங்கதை யெழுதிய பகுதியொன்றி
னையவன் கையினில் கொடுத்துக்
கவினுற இதனை எழுதுக" என்றேன்

இணங்குவான் போன்று அதைக் கையிலே கொண்டு கணப்பொழுது இருந்தான். பின்னர் "செல்வேன்" என்றான்.

கவிஞருக்கு அச்சொல்லைக் கேட்டுச் சினம் மேலிட்டு,
"ஏதடா சொல்ல சொல் அழித்துறை
க்கின்றாய்? பித்தன் என்றுன்னை
உலகினர் சொல்வது பிழையிலை
போலும்" என்றேன். அதற்கு,
"நாளை வந்து இவ்வினை நட
த்துவேன்" என்றான் கண்ணன்.

அதற்கு கவிஞன்,

"இத்தொழில் இங்கே இப்பொழுது எடுத்துச் செய்கின்றனையா? செய்குவதில்லையா? ஒருரை சொல்" என்று உறுமினேன் என்று பாரதி குறிப்பிடுகிறார். உரையாடல் தொடருகிறது.

"கண்ணனும்", "இல்லை" யென்றொரு சொல் இமைக்கு முன் கூறினான்.

அப்போது கவிஞனுக்குக் கோபம் பொங்கி,

"வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாய்ப் பாய்ந்திடக்
கண் சிவந்த இதழ்கள் துடித்திடக் கனன்று
*சீச்சீ*, பேயே, சிறிது போழ்தேனும்
"இனி என்முகத்தின் எதிர் நின்றிடாதே
என்னும் இவ்வுலகில் என்னிடத்தினில் நீ
போந்திடல் வேண்டாபோ, போ, போ என்று
இடியுறச் சென்னேன்" எனக் குறிப்பிடுகிறார்.

"கண்ணனும் எழுந்து செல்குவானாயினன்,
கவிஞரோ, விழி நீர் சோர்ந்திட
"மகனே போகுதியோ வாழ்க நீ நின்னைத்
தேவர் காத்திடுக! நின்றனைச் செம்மை
செய்திடக் கருதி எதோதோ செய்தேன்
தோற்றுவிட்டேனடா! சூழ்ச்சிகள் அழிந்தேன்
மறித்தினி வாராய் செல்லுதி வாழிநீ"
எனத்துயர் நீங்கி அமைதியோ டிசைத்தேன்"

என்று கவிஞன் குறிப்பிட்டுள்ளார்.

" சென்றனன் கண்ணன் திரும்பியோர் கணத்தே
எங்கிருந்தோ நல்லெழுதுகோல் கொணர்ந்தான்
"ஐயனே! நின்வழியனைத்தையும் கொள்வேன்
தொழில் பல புரிவேன் துன்பமிங்கென்றும்

---

இனி நினக்கென்னால் எய்திடா தெனப்பல
நல்ல சொல்லுரைத்து நகைத்தனன் மறைந்தனன்

என்று கவிஞர் தனது கவிதையில் குறிப்பிட்டு மேலும் கூறுகிறார்.

"மறைந்ததோர் கண்ணன் மறுகணத் தென்றன்
நெஞ்சிலே தோன்றி நிகழ்த்துவா னாயினான்,
"மகனே, ஒன்றையாக்குதல் மாற்றுதல்
அழித்திடல் எல்லாம் நின் செயலன்று காண்,
தோற்றேன் எனநீ உரைத்திடும் பொழுதிலே
வென்றாய், உலகினில் வேண்டிய தொழில் எலாம்,
ஆசையும் தாமும் அகற்றியே புரிந்து
வாழ்க நீ என்றான், வாழ்க மற்றவனே"

என்று முடிவுரை கூறுகிறார்.

கண்ணன் - எனது சற்குரு

இந்த அருமையான பாடலும் மற்றொரு உயர்ந்த கருத்துக்களும் தத்துவ ஞானப் பொருளும் நிறைந்த ஒரு சிறந்த கவிதையாகும். பாரதியின் கவிதைகள் அனைத்தும் பெரும்பாலும் பழைய நிலையிலிருந்து ஒரு புதிய நிலைக்கு வளர்ச்சியடையும் புதுமையும் புதிய நிலையும் மிகுந்த கருத்துக்களாகும். இங்கு பாரதி ஒரு நல்ல குருவை அடைய நினைத்து தேடிச் செல்கிறார்.

"சாத்திரங்கள் பல தேடினேன் – அங்கு
சங்கையில்லாதன சங்கையாம் பழங்

கோத்திரங்கள் சொல்லும்மூடர்தம் பொய்மைக்

கூடையில் உண்மை கிடைக்குமோ?

என்று பாரதி ஏங்கித் தவித்து உண்மையைத் தேடி அலைகிறார்.

அப்போது,

"நாடுமுழுதும் சுற்றி நான் – பல

நாட்கள் அலைந்திடும் போதினில்,"

என்று அலைந்த திரிந்து யமுனைக்கரைக்கு வந்தபோது அங்கு ஒளிமிகுந்த முகமும் தெளிவு குடி கொண்ட கண்களும் சடைகளும் வெள்ளைத் தாடியும் கொண்ட ஒரு கிழவனாரைச் சந்தித்தார். அவரிடம் தனது ஆசைகளைக் கூறிப் பேசிக் கொண்டிருந்தபோது அவர்,

" தம்பி, நின்உளத்திற்குத் தகுந்தவன் – சுடர்

நித்திய மோனத் திருப்பவன் – உயர்

மன்னர் குலத்தில் பிறந்தவன் – வட

"மாமதுரைப் பதியாள் கின்றான் – கண்ணன்

தன்னைச் சரண் என்று போவையால் – அவன்

சத்தியங் கூறுவன் என்று அந்தப் பெரியவர்

அன்புடன் கூறினார். அதைக் கேட்டு நான்

மதுரைக்குச் சென்றேன், கண்ணனைக் கண்டு,

போற்றி எனது ஊரையும் பெயரையும் கருத்தையும் கூறி நன்மை தருமாறு வேண்டினேன்.

கண்ணனோ, காமனைப் போன்ற அழகிய வடிவமும், இளங்காளையர்களின் நட்பும் பழக்கமும் கொண்ட கெட்ட

பூமியைக் காக்கும் தொழிலிலேயே எப்போதும் சிந்தை செலுத்திக் கொண்டிருந்ததைக் கண்டேன். எனக்கு யமுனைக் கரையில் கண்ட கிழவன் மீது கோபம் ஏற்பட்டது. கண்ணன் நாட்டை ஆளும் மன்னவன். அவன் அந்தக் கவலையிலேயே எப்போதும் மூழ்கிக் கிடப்பவன், தவம் செய்து பாடுபடுவோருக்கு விளங்கிடாத உண்மைகளை எப்படி இவன் அறிவான்'' என்று சந்தேகப்பட்டேன் என்று குறிப்பிட்டுப் பாரதி கூறுகிறார். இந்த இடத்தில் பாரதி ஒரு வரலாற்றுக் கேள்வியை எழுப்பி அதற்கு அவரே பதிலும் கூறுகிறார்.

கீதையை உரைத்தது கண்ணன். ஒரு அரசன். அதைக் கேட்டவன் அர்ஜுனன். அவனும் ஒரு அரசன். கீதா வாக்கியங்கள் தத்துவ ஞானக் கருத்துக்கள் நிறைந்தவை. அவைகளை அரச காரியங்களில் அன்றாடம் ஈடுபட்டிருப்பவர்கள் எப்படி அறிவார்கள் என்னும் கேள்வியை எழுப்பி கண்ணனின் பெருமைகளை நினைக்கிறார் கவிஞர்.

அந்த நேரத்தில் கண்ணனுடைய தத்துவஞான போதனைகள் கவிஞருக்குக் கிடைக்கிறது. அவைகளைப் பாரதி மிகவும் சிறப்பாகத் தனது கவிதைகளில் குறிப்பிடுகிறார்.

"மைந்தனே – பர
ஞான முரைத்திடக் கேட்பைநீ – நெஞ்சில்
ஒன்றும் கவலையில்லாமலே – சிந்தை
ஊன்ற நிறுத்திக் களிப்புற்றே – தன்னை
வென்று மறந்திடும் போழ்தினில் – அங்கு
விண்ணை அளக்கும் அறிவுதான்
வெளிப்படும் என்று பாடுகிறார் மேலும்,

"சந்திரன் சோதியுடையதாம் – அது
சத்திய நித்திய வஸ்துவாம் – அதைச்
சிந்திக்கும் போதினில் வந்து தான் – நினைச்
சேர்ந்து கழுவியருள் செய்யும் – அதன்
"மந்திரத்தால் இவ்வுலகெலாம் – வந்த
மாயக் களிப்பெருங் கூத்து காண் – இதைச்
சந்ததம் பொய்யென்றுரைத்திடும் – மடச்
சாத்திரம் பொய்யென்று தள்ளடா"

என்றும்,

" ஆதித்தனிப் பொருள் ஆகுமோர் – கடல்
ஆரும் குமிழியுயிர்களாம் – அந்தச்
சோதியறி வென்னும் ஞாயிறு – தன்னைச்
சூழ்ந்த கதிர்களுயிர்களாம் – இங்கு
மீதிப் பொருள்கள் எவையுமே – அதன்
மேனியில் தோன்றிடும் வண்ணங்கள் – வண்ண
நீதி யறிந்தின்ப மெய்தியே – ஒரு
நேர்மைத் தொழிலில் இயங்குவார்"

என்று பாரதி பாடுகிறார்.

இந்த உலகம் உண்மையானது. சந்திரன் அதன் ஒளி, கடல் அதன் குமிழிகள், ஞாயிறு அதன் கதிர்கள், அவைகளின் தோன்றும் வண்ணங்கள், உயிர்கள், பொருள்கள் அனைத்தும் உண்மை, இதைப் பொய்யென்று கூறும் சாத்திரங்கள் பொய்யாகும் என்னும் தத்துவத்தை இங்கு பாரதி எடுத்துக் கூறுகிறார்.

இந்த உலகம் பொய், மாயை என்னும் தத்துவத்தில் பாரதிக்கு உடன்பாடில்லை. வேதங்களில் இக்கருத்தில்லை. இன்னும் மாயை என்றால் மருட்சியல்ல, பொய்த் தோற்றம் அல்ல. மாயை என்றால் சக்தி'' என்று பாரதி மற்றோரிடத்தில் கூறுகிறார். சக்திக்கு அதிக முக்கியத்வம் கொடுத்து பாரதி பல பாடல்கள் பாடியுள்ளதைக் காணலாம்.

உலகம் உண்மையானது அதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். அறிந்து கொள்ள வேண்டும். புரிந்து கொள்ள வேண்டும். உலக இயற்கையுடன் மனிதன் இணைந்து நல்வாழ்க்கை ஒழவேண்டும் என்பதே பாரதியின் தத்துவமாகும். மேலும்

"சோதியறிவில் விளங்கவும் – உயர்
சூழ்ச்சி மதியில் விளங்கவும் – அற
நீதிமுறை வழுவாமலே – எந்த
நேரமும் பூமித் தொழில் செய்து – கலை
ஓதிப் பொருளியல் கண்டுதாம் – பிறர்
உற்றிடும் தொல்லைகள் மாற்றியே – இன்ப
மோதி விழிக்கும் விழியினார் – பெண்மை
மோகத்தில், செல்வத்தில், கீர்த்தியில்

"ஆடுதல், பாடுதல், சித்திரம் – கவி
யாதி இனைய கலைகளில் – உள்ளம்
ஈடுபட்டென்று நடப்பவர் – பிறர்
ஈனநிலை கண்டு துள்ளுவார் – அவர்
நாடும் பொருள்கள் அனைத்தையும் – சில
நாளினில் எய்தப் பெருகுவார் – அவர்

காடு , புதரில் வளரினும் – தெய்வக்
காவன மென்றதைப் போற்றலாம்

என்று சிறந்த மெய்ஞ்ஞானக் கருத்துக்களை எடுத்துக் கூறுகிறார்.

ஞானியர் தம்மியல் கூறினேன் – அந்த
ஞானம் விரைவினில் எய்து வாய் – எனத்
தேனில் இனிய குரலிலே – கண்ணன்
செப்பவும் உண்மை நிலைகண்டேன் – பண்டை
ஈனமனிதக் கனவெல்லாம் – எங்ஙன்
ஏகி மறைந்தது கண்டிலேன் – அறி
வான தனிச்சுடர் நான் கண்டேன் – அதன்
ஆடல் உலகென நான் கண்டேன்”

என்று பாடி மகிழ்ந்து கவிதையை முடிக்கிறார்.

கண்ணன் - என் விளையாட்டுப் பிள்ளை

இராகம் தாளத்தோடு சிருங்காரச் சத்துடன் மிகவும் அழகாக அனைவரும் பாடும் பாடல் இது. குறிப்பாகப் பெண்கள், கண்ணன் சிறு குழந்தையாக இருக்கும் போது விளையாட்டாகச் செய்தக் குறும்புகளை விளக்கும் பாடலாக அமைந்துள்ளது. கண்ணனைப் பல வடிவங்களிலும் கண்ட பாரதி விளையாட்டுப் பிள்ளையாகவும் கண்ணனை பாவித்துப் பாடி மகிழ்கிறார். நம்மையும் மகிழ்விக்கிறார்.

“தீராத வினையாட்டுப் பிள்ளை – கண்ணன்
தெருவிலே பெண்களுக்கு ஓயாத தொல்லை”

"தின்னப்பழம் கொண்டு தருவான் – பாதி
தின்கின்ற போதில் தட்டிப் பறிப்பான்"

"தேனொத்த பண்டங்கள் கொண்டு – என்ன
செய்தாலும் எட்டாத உயரத்தில் வைப்பான்,"

"பின்னலைப் பின்னின்றிழுப்பான் – தலை
பின்னே திரும்பு முன்னே சென்று மறைவான்,
"புல்லாங்குழல் கொண்டு வருவான் – அமுது
பொங்கித்ததும்பு நற்கீதம் படிப்பான்"

என்றெல்லாம் பாரதி பாடுகிறார் இன்னும்,

"விளையாட வாவென்றழைப்பான் – வீட்டில்
வேலையென்றால் அதைக் கேளாதிருப்பான்,

"அம்மைக்கு நல்லவன் கண்டீர்– மூளி
அத்தைக்கும் நல்லவன், தந்தைக்கும் அஃதே!

"எம்மைத் துயர்செய்யும் பெரியோர் – வீட்டில்
யாவர்க்கும் நல்லவன் போல் நடிப்பான்

"கோளுக்கு மிகவும் சமர்த்தன் – பொய்மை
சூத்திரம் பழி சொலக் கூசாச் சழக்கன்

"ஆளுக்கிசைந்தபடி பேசி – தெருவில்
அத்தனை பெண்களையும் ஆகாதடிப்பான்

என்றெல்லாம், எளிய பதங்களில் எல்லோரும் தெளிவாகப் புரிந்து கொள்ளும்படியாக மிக அற்புதமாகப் பாரதி, கண்ணனின் விளையாட்டு லீலைகளைப் பற்றிப் பாடுகிறார்.

## கண்ணன் - என் காதலன்

இந்தத் தலைப்பில் பாரதி நான்கைந்து பாடல்களைப் பாடியுள்ளார். சிங்கார ரசம் நிறைந்த அருமையான பாடல்கள் அவை. இசை மீட்டி அருமையாகப் பாடத்தக்கவை. காதல் ரசமும் அழகியலும் மிக்கவை.

"தூண்டிப் புழுவினைப் போல் – வெளியே
சுடர் விளக்கினைப் போல்
நீண்ட பொழுதாக – எனது
நெஞ்சம் துடித்ததடி
கூண்டுக் கிளியினைப் போல் – தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்
வேண்டும் பொருளையெல்லாம் – மனது
வெறுத்து விட்டதடி

என்று பாடுகிறார்.

"உணவு செல்லவில்லை – சகியே
உறக்கம் கொள்ளவில்லை
மணம் விரும்பவில்லை – சகியே
மலர் பிடிக்கவில்லை
குணமுறுதியில்லை – எதிலும்
குழப்பம் வந்ததடி

கணமும் உள்ளத்திலே – சுகமே
காணக்கிடைத்ததில்லை”

எனப்பாடுகிறார்.

“ பாலும் கசந்ததடி – சகியே
படுக்கை நொந்ததடி
கோலக்கிளி மொழியும் – செவியில்
குத்தல் எடுத்ததடி

“நாலு வயித்தியரும் – இனிமேல்
நம்புதற்கில்லை யென்றார்
பாலத்து ஜோசியனும் – கிரகம்
படுத்தும் என்று விட்டான்”

என்று பாடுகிறார்.

“கனவு கண்டதிலே – ஒருநாள்
கண்ணுக்குத் தோன்றாமல்
இனம் விளங்கவில்லை – எவனோ
என்னகம் தொட்டுவிட்டான்”

என்றும்,

“எண்ணும் பொழுதில் எல்லாம் – அவன்கை,
இட்டவிடத்தினிலே
தண்ணென்றிருந்ததடி – புதிதோர்
சாந்தி பிறந்ததடி

கண்ணியெண்ணிப் பார்த்தேன் – அவன்தான்
யாரெனச் சிந்தை செய்தேன்
கண்ணன் திருவுருவம் – அங்ஙனே
கண்ணின் முன் நின்றதடி”

என்றெல்லாம் பாடி முடிக்கிறார்.

“கண்களுறங்கவொரு காரணமுண்டோ?
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே
பெண்கள் எல்லோரும் அவர் வீடு சென்றிட்டார்,
பிரிய மிகுந்த கண்ணன் காத்திருக்கின்றான்.
“வெண்கல வாணிகரின் வீதி முனையில்
வேலிப் புறத்தில் எனைக் காணடியென்றான்
கண்கள் உறங்கல் எனும் காரிய முண்டோ
கண்ணனைக் கையிரண்டும் கட்டலின்றியே”

என்று மிக அருமையாகக் கவிஞர் பாடுகிறார்.

திக்குத் தெரியாத காட்டில் – உனைத்
தேடித்தேடி இளைத்தேனே

என்னும் பாடலில் மிக அருமையாக இயற்கையைப் பற்றி அதில் குறிப்பாக அடர்ந்த காட்டைப் பற்றி விவரித்துப் பாடுகிறார்.

இயற்கையைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் அதிகமாக ஏற்பட்டுவிட்ட இக்காலத்தில் பாரதியின் இந்தப் பாடல்கள் மனதில் வலுவாக நிறுத்த வேண்டிய பாடல்களாகும். இயற்கையின் அழகையும், அமைப்பையும், அதன் அவசியத்தையும் நினைக்கும்போது நமது உள்ளம் ஆனந்தத்தால் துள்ளிக் குதிக்கிறது. அது நமது ஆரோக்கியத்தையும் கூட அதிகப்படுத்துகிறது.

"மிக்க நலமுடைய மரங்கள் – பல

விந்தைச் சுவையுடைய கனிகள் – எந்தப்

பக்கத்தையும் மறைக்கும் வரைகள் – அங்கு

பாடி நகர்ந்து வரும் நதிகள் – ஒரு

நெஞ்சில் கனல் மணக்கும் பூக்கள் – எங்கும்,

நீளக்கிடக்கும் இலைக் கடல்கள் – மதி

வஞ்சித்திடும் அகழிச் சுனைகள் – முட்கள்

மண்டித்துயர் கொடுக்கும் புதர்கள்"

என்றெல்லாம் பாடி இன்னும் காடுகளில் உள்ள விலங்கினங்கள், மான்கள், புலிகள், பறவைகள், பாம்புகள், சிங்கம், யானைகள், தவளைகள் முதலியன திரிவதை சத்தமிடுவதைக் கூறி, அந்தத்திக்குத் தெரியாத காட்டில் அகப்பட்டு கண்ணனைத் தேடியலைந்து வேடன் கையில் அகப்பட்டு அலறக் கண்ணன் வந்து காப்பாற்றுவதாகக் கனவு, கண்ணா, மணிவண்ணா, எனது அபயக் குரலில் எனை வாழ்விக்க வந்த அருள்வாழி என்று பாரதி பாடி முடிக்கிறார்.

கண்ணனாகிய காதலனுக்குப் பாங்கியைத் தூது விடுப்பதாகப் பாவித்துப் பாடியுள்ள பாடல் சிருங்கார ரசமும் மறுப்பக்கம் ரௌத்திரமும் கொண்டது. தங்கப்பாட்டு மெட்டில் பாரதி மிகவும் அருமையாக உணர்ச்சி பொங்கப் பாடியுள்ளார்.

"கண்ணன் மனநிலையைத் தங்கமே

தங்கம், அடித்தங்கமே தங்கம்,

கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்,

எண்ணமுரைத்துவிடில் தங்கமே

தங்கம் – பின்னர்

ஏதெனிலும் செய்வமடி தங்கமே தங்கம்,

என்று தொடங்கி,

"சொன்ன மொழி தவறும் மன்னவனுக்கே – எங்கும்
தோழமையில்லையடி தங்கமே தங்கம்,
என்ன பிழைகள் இங்கு கண்டிருக்கின்றான் அவை
யாவும் தெளிவு பெறக் கேட்டுவிடடி,"

என்றும்,

"ஆற்றங்கரைதனிலே முன்னமொரு நாள் – எனை
அழைத்துத் தனியிடத்தில் பேசியதெல்லாம்
தூற்றி நகர் முரசு சாற்றுவனென்றே
சொல்லி வருவையடி தங்கமே தங்கம்"

என்றும்,

" சோரமிழைத்திடையர் பெண்களுடனே – அவன்
சூழ்ச்சித் திறமை பல காட்டுவதெல்லாம்
வீர மறக்குலத்து மாதரிடத்தே
வேண்டியதில்லை யென்று செல்லிவிடடி"

"நேரமுழுதிலும் அப்பாவி தன்னையே – உள்ளம்
நினைத்து மறுகுதடி தங்கமே தங்கம்
தீரஒரு சொல் இன்று கேட்டு வந்திட்டால் – பின்பு
தெய்வமிருக்குதடி தங்கமே தங்கம்.

என்று பாரதி பாடி மகிழ்கிறார்.

" ஆசைமுகம் மறந்து போச்சே – இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி
நேசம் மறக்கவில்லை நெஞ்சம் – எனில்
நினைவு முக மறக்கலாமோ?

என்றும்,

தேனை மறந்திருக்கும் வண்டும் – ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும் – இந்த
வையமுழுதும் இல்லை தோழீ,"

எனவும்,

"கண்ணன் முகம் மறந்து போனால் – இந்தக்
கண்கள் இருந்து பயன் உண்டோ
வண்ணப் படமும் இல்லை கண்டாய் – இனி,
வாழும் வழி என்னடி தோழி"

என்றெல்லாம் சிறந்த உவமைகளுடன் கண்ணன் பால் உள்ள அளவற்ற அன்பை எடுத்துக் காட்டிப் பாரதி பாடுகிறார். இப்பாடல்கள் படிப்படியாக மக்களிடம் இப்போது பிரபலமடைவதைக் காண்கிறோம்.

கண்ணன் என் காந்தன் என்னும் தலைப்பில் இன்பச்சுவையில் மிக அருமையாகப் பாரதி பாடுகிறார்.

"கனிகள் கொண்டுதரும் கண்ணன்
கற்கண்டு போல் இனிதாய்
பணிசெய் சந்தனமும் – பின்னும்
பல்வகை அத்தர்களும்

"குனியும் வான்முகத்தான் – கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே – வண்ண
மியன்ற சவ்வாதும்

"கொண்டை முடிப்பதற்கே – மணம்
கூடு தைலங்களும்
வண்டு விழியினுக்கே – கண்ணன்
மையும் கொண்டு தரும்.
"தண்டைப் பதங்களுக்கே – செம்மை
சார்ந்து செம்பஞ்சு தரும்
பெண்டிர் தமக்கெல்லாம் – கண்ணன்
பேசரும் தெய்வமடி"

"குங்குமம் கொண்டுவரும் – கண்ணன்
குழைத்து மார்பெழுத
சங்கையிலாத பணம் – தந்தே
தழுவிமையல் செய்யும்

"பங்க மொன்றில்லாமல் – முகம்
பார்த்திருந்தாற் போதும்
மங்களமாகுமடீ – பின்னோர்
வருத்தமும் இல்லையடி" என்று

பாடி நம்மை மகிழ்விக்கிறார்.

## கண்ணம்மா

கண்ணனைக் கண்ணம்மாவாகக் கற்பித்துப் பாடிய பெருமை பாரதிக்கே உண்டு. கண்ணம்மாவைச் செல்லக் குழந்தையாக, அன்புக் காதலியாக, அழிவில்லாக் குல தெய்வமாகப் பாரதி பாடி மகிழ்கிறார்.

கண்ணம்மா – என் குழந்தை

1. சின்னஞ் சிறுகிளியே – கண்ணம்மா
செல்வக் களஞ்சியமே
என்னைக் கலிதீர்த்தே – உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்"

2. "பிள்ளைக் கனியமுதே – கண்ணம்மா
பேசும் பொற்சித்திரமே
அள்ளியணைத்திடவே – என் முன்னே
ஆடிவரும் தேனே"

3. "ஓடி வருகையிலே – கண்ணம்மா
உள்ளம் குளிருதடீ
ஆடித்திருதல் கண்டால் – உன்னைப்போய்
ஆவிதழுவுதடி"

4. " உச்சிதனை முகந்தால் – கருவம்
ஓங்கி வளருதடி
மெச்சியுனை ஊரார் – புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடி"

5. “கன்னத்தில் முத்தமிட்டால் – உள்ளந்தான்
கள்வெறி கொள்ளுதடி
உன்னைத் தழுவிடிலோ – கண்ணம்மா
உன்மத்த மாகுதடி”

6. “சற்றுன்முகம் சிவந்தால் – மனது
சஞ்சலமாகுதடி
நெற்றி சுருங்கக் கண்டால் – எனக்கு
நெஞ்சம் பதைக்குதடி”

7. “உன் கண்ணில் நீர்வழிந்தால் – என்நெஞ்சில்
உதிரம் கொட்டுதடி
என் கண்ணில் பாவையன்றோ – கண்ணம்மா
என்னுயிர் நின்றதன்றோ?

8. “சொல்லு மழலையிலே – கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே – எனது
மூர்க்கம் தவிர்த்திடுவாய்

9. “இன்பக் கதைகள் எல்லாம் – உன்னைப் போல்
ஏடுகள் சொல்வதுண்டோ?
அன்பு தருவதிலே – உனை நேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ?

10. “மார்பில் அணிவதற்கே – உன்னைப் போல்
வைரமணிகளுண்டோ?

சீர்பெற்று வாழ்வதற்கே – உன்னைப் போல்
செல்வம் பிறிதுமுண்டோ?

என்று, எளிய பதங்களில், சின்னச் சின்ன வரிகளில், கனிவான கருத்துக்களில், காதுக்கினிய இசை ஓசையுடன், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வார்த்தைகளில் அற்புதமாக அமைந்துள்ள பாதியின் இந்தப் பாடல்களை இல்லந்தோறும் இசையுடன் சேர்த்து நாம் பாடவேண்டும், பாடி மகிழவேண்டும்.

கண்ணம்மா – என் காதலி

1. “சுட்டும் விழிச்சுடர்தான் – கண்ணம்மா
சூரிய சந்திரரோ?
வட்டக் கரியவிழி – கண்ணம்மா
வானக்கருமை கொல்லோ?
பட்டுக் கருநீலப் – புடவை
பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில் – தெரியும்
நட்சத்திரங்களடி

2. “சோலை மலரொளியோ – உனது
சுந்தரப் புன்னகைதான்
நீலக்கடல் அலையே – உனது
நெஞ்சில் அலைகளடீ,
கோலக் குயிலோசை – உனது
குரலின் இனிமையடி

வாலைக் குமரியடி – கண்ணம்மா
மருவக் காதல் கொண்டேன்

3. "சாத்திரம் பேசுகிறாய் – கண்ணம்மா
சாத்திரம் ஏதுக்கடி?
ஆத்திரம் கொண்டவர்க்கே – கண்ணம்மா
சாத்திர முண்டோடி
மூத்தவர் சம்மதியில் – வதுவை
முறைகள் பின்பு செய்வோம்
"காத்திருப்பேனோடி – இதுபார்
கன்னத்து முத்தமொன்று"

என்று பாரதி காதலுக்கும், கண்ணன் மீதான காதலுக்கும் தனி இலக்கணம் வகுத்துக் கண்ணம்மா மீது பாடுகிறார்.

கண்ணம்மா – என் காதலி

(மற்றோரு காட்சி)

1. "மாலைப் பொழுதில் ஒருமேடை மிசையே
வானையும் கடலையும் நோக்கியிருந்தேன்
மூலைக்கடலினை அவ்வானவளையம்,
முத்தமிட்டே தழுவி முகிழ்தல் கண்டேன்
"நீல நெருக்கிடையில் நெஞ்சு செலுத்தி
நேரம் கழிவதிலும் நினைப்பின்றியே
சாலப்பலபல நற்பகற் கனவில்
தன்னை மறந்த லயம் தன்னில் இருந்தேன்.

2. “ஆங்கு அப்பொழுதில் என்பின் புறத்திலே
ஆள்வந்து நின்றெனது கண் மறைக்கவே
பாங்கினிற் கையிரண்டும் தீண்டியறிந்தேன்
பட்டுடை வீசு கமழ் தன்னிலறிந்தேன்
ஓங்கிவரும் உவகையூற்றிலறிந்தேன்
ஒட்டும் இரண்டுளத்தின் தட்டில் அறிந்தேன்
வாங்கிவிடடி கையையேடி கண்ணம்மா
மாயம் எவரிடத்தில் என்று மொழிந்தேன்.

3. சிரித்த ஒலியில் அவள் கைவிலக்கியே
திருமித்தழுவி என்ன செய்தி சொல் என்றேன்
நெரித்த திரைக் கடலில் என்ன கண்டிட்டாய்?
நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய்?
திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய்?
சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய்?
பிரித்துப் பிரித்து நிதமேக மளந்தே
பெற்ற நலங்களென்னே? பேசுதி என்றாள்.

4. “நெரித்த திரைக் கடலில் நின்முகம் கண்டேன்,
நீலவிசும்பினிடை நின்முகம் கண்டேன்
திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்
சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன்,
பிரித்துப் பிரித்து நிதமேக மளந்தே

பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை
சிரித்த ஒலியினில் உன்கை விலக்கியே
திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்"

என்று கண்ணனின் உலகளாவிய வடிவில் கண்ணம்மாவின் சாயலைக் கண்டு பாரதி மிக இனிமையாகப் பாடி பரவசமடைகிறார்.

கண்ணம்மா – என் காதலி
முகத்திரை களைதல்

1. "தில்லித் துருக்கர் செய்தவழக்கமடி – பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்
வல்லியிடையினையும் ஓங்கி முன்னிற்கும் – இந்த
மார்பையும் மூடுவது சாத்திரங் கண்டாய்
"வல்லியிடையினையும் மார்பிரண்டையும் – துணி
மறைத்ததனால் அழகு மறைந்ததில்லை
சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை – முகச்
சோதி மறைத்து மொரு காதல் இங்குண்டோ
"ஆரியர் முன்னெறிகள்மேன்மை என்கின்றாய் –
பண்டை
ஓரிருமுறை கண்டு பழகிய பின் – வெறும்
ஒப்புக்குக் காட்டுவதிந் நாண மென்னடி?
"யாரிருந்தென்னையிங்கு தடுத்திடுவார் – வலு
வாக முகத்திரையை யகற்றிவிட்டால்,
காரிய மில்லையடி வீண் பசப்பிலே – கனி
கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பேனோ?

என்று பாரதி காதலுக்குத் தனிப் பெருமையும் வடிவமும் கொடுத்து ஒருதனி இலக்கணமும் வகுத்து, வாழ்க்கை அனுபவத்தோடு இணைத்துப் பாடியுள்ளார்.

"சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை" என்னுமொரு அழகான கருத்துச் சொற்றொடர் தமிழ் இலக்கியத்திற்கும் உலக இன்பச் சுவை இலக்கியத்திற்கும் பாரதி அளித்துள்ள தனிப் பெரும் பங்களிப்பாகும்.

கண்ணம்மா – என் காதலி
மற்றும் ஒரு பரிமாணம்

"பாயுமொளி நீயெனக்கு! பார்க்கும் விழி நான் உனக்கு!
தோயுமது நீயெனக்கு! தும்பியடி நானுனக்கு!
வாயுரைக்க வருவதில்லை! வாழி நின்றன்
மேன்மையெல்லாம்!
தூய சுடர் வானொளியே சூறையமுதே! கண்ணம்மா!

"வானமழை நீயெனக்கு! வண்ணமயில் நான் உனக்கு!
பானமடி நீயெனக்கு, பாண்டடி நானுனக்கு
ஞானவொளி வீசுதடி நங்கை நின்றன் சோதிமுகம்!
ஊனமறு நல்லழகே ஊறுசுவையே கண்ணம்மா!

வீணையடி நீயெனக்கு மேவுவிரல் நானுனக்கு,
பூணும் வடநீயெனக்கு, புதுவயிர நானுனக்கு
காணும் இடம் தோறுநின்றன் கண்ணின் ஒளிவீசுதடி
மாணுடைய பேரரசே வாழ்வு நிலையே கண்ணம்மா!

"வெண்ணிலவு நீயெனக்கு! மேவுகடல் நான்உனக்கு!
பண்ணுசுதி நீயெனக்கு! பாட்டினிமை நானுனக்கு!
எண்ணி எண்ணிப்பார்த்திடில் ஓர் எண்ணமில்லை,
நின்சுவைக்கே!
கண்ணின் மணிபோன்றவளே கட்டியமுதே கண்ணம்மா!

"வீசுகமழ் நீயெனக்கு விரியுமலர் நானுனக்கு!
பேசுபொருள் நீயெனக்கு பேணுமொழி நானுனக்கு!
நேசமுள்ள வான்சுடரே! நின்னழகை யேதுரைப்பேன்!

"ஆசைமதுவே, கனியே, அள்ளு சுவையே கண்ணம்மா!
காதலடி நீயெனக்கு, காந்தமடி நான் உனக்கு!
வேதமடி நீயெனக்கு, வித்தையடி நானுனக்கு!
போதமுற்ற போதினிலே பொங்கிவரும் தீஞ்சுவையே!
நாதவடிவானவளே! நல்லவுயிரே கண்ணம்மா!

"நல்லஉயிர் நீயெனக்கு நாடியடி நானுனக்கு!
செல்வமடி நீயெனக்கு சேமநிதி நானுனக்கு!
எல்லையற்ற பேரழகே! எங்கு நிறைபொற்சுடரே
முல்லைநிகர் புன்னகையாய் மோதுமின்பமே!
கண்ணம்மா!

"தாரையடி நீஎனக்கு தண்மதியம் நானுனக்கு!
வீரமடி நீயெனக்கு! வெற்றியடி நானுனக்கு!
தாரணியில் வானுலகில் சார்ந்திருக்கு மின்பமெல்லாம்
ஒருருவமாய்ச் சமைத்தாய் உள்ளமுதே! கண்ணம்மா!

பாரதியின் கண்ணம்மா பாடல்களில் இப்பாடல் ஒரு புதிய பரிமாணமாகும். பாரதியின் இப்பாடல்களுக்கு விளக்கவுரையோ, விரிவுரையோ தேவையில்லை. ஆயினும் ஆழ்ந்த கருத்துச் செறிவு மிக்கவை.

தமிழும், தமிழகமும் தமிழ் கூறும் நல்லுலகமும் செய்ததவப் பயன் பாரதி, மகாகவி பாரதி. பாரதத்தின் கவியுலகின் உச்சத்திற்குச் சென்று விட்டான் மகாகவி. உலகப் பெருவடிவமான கண்ணனுடன், அனைத்து வடிவங்களிலும் மகாகவி பாரதி இரண்டறக் கலந்து விட்டான். இணையற்ற இந்தக் கவிதைக்கு கவிதை உலகில் எங்கும் ஈடில்லை.

கண்ணனைக் கண்ணம்மாவாகவும் கண்ட பாரதி அந்தக் கண்ணம்மாவிற்குக் கூறும் இலக்கணம் தான் எத்தனை? எத்தனை?

தூயசுடர், வானொளி, சூறையமுது, மாணுடைப் பேரரசு, வாழ்வுநிலை, ஊனமறு நல்லழகு, ஊறு சுவை, கண்ணின் மணி, கட்டியமுது, ஆசை மது, கனி, அள்ளுசுவை, நாதவடிவானவள், நல்ல உயிர், முல்லைநிகர் புன்னகையாள், மோதுமின்பம், எண்ணிப் பார்த்தாலும் கண்ணம்மா நின் சுவைக்கு அளவே இல்லை. அது அனந்தமானது. தாரணியில் வானுலகில் சார்ந்திருக்கும் இன்பமெல்லாம் ஒருருவமாய்ச் சமைந்தவள். உள்ளமுதம் இன்னும் எத்தனை எத்தனை விதம்.

பக்திச் சுவையில் பாரதி அனைவரையும் மிஞ்சிவிட்டார். கண்ணனோடு ஐக்கியமாகிவிட்டார். உலகப் பெருவடிவில் இணைந்துவிட்டார். பாரதியே நீ வாழ்க! தமிழ் உள்ளளவும் இவ்வுலகம் உள்ளளவும் நீ வாழ்க. கண்ணனும் கண்ணம்மாவும் உள்ளளவும் நீ வாழ்க! வாழ்க!!

## கண்ணம்மா - எனது குலதெய்வம்

பாரத பூமியின் குலதெய்வம் கண்ணன். அக்கண்ண –பிரானுடைய அவதாரக் கதையும் இலக்கியமும் பாரத நாட்டு மக்களின் ஒட்டு மொத்தமான வாழ்க்கை வடிவமாகும். நமது நாட்டுமக்கள் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் கண்ணன் வாழ்ந்து கொண்டிருக்கிறான். கண்ணனுடைய அருஞ் செயல்கள் அனைத்தும் நமது வாழ்க்கையில் இணைந்து செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. பாரதிக்கும், கண்ணனும் கண்ணம்மா வடிவிலும் குல தெய்வமாவான். பாரதி தனது குல தெய்வமான கண்ணம்மாவிடம் சரணடைந்து விட்டான். பாஞ்சாலியும், பிரகலாதனும் கண்ணனுடைய சோதியில் கலந்ததைப் போல, ஆழ்வார்களும் பாரதியும் கண்ணனுடைய திவ்ய ஜோதியில் கலந்துவிட்டனர். அதன் ஆதர்சம் பாரத மக்களை மேலும் மேலும் விழிப்படையச் செய்து முழுமையான கர்ம யோகத்தில் நம் அனைவரையும் ஈடுபடுத்துகிறது.

நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

1. பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று
நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

2. மிடிமையும் அச்சமும் மேவி என் நெஞ்சில்
குடிமை புகுந்தன, கொன்றவை போக்கென்று
நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

3. தன்செயல் எண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின்செயல் செய்து நிறைவுபெறும் வண்ணம்,

நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

4. துன்பமினியில்லை சோர்வில்லை தோற்பில்லை
அன்பு நெறியில் அறங்கள் வளர்ந்திட
நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

5. நல்லது தீயது நாமறியோம் அன்னைநீ
நல்லது நாட்டுக! தீமையை ஓட்டுக!
நின்னைச் சரணடைந்தேன் – கண்ணம்மா,
நின்னைச் சரணடைந்தேன்!

என்று பாரதி தனது கண்ணன் பாடல் தொகுதியை நிறைவு செய்கிறார்.

நின்னைச் சரணடைந்தேன் கண்ணம்மா, நின்னைச் சரணடைந்தேன் என்று கண்ணம்மாவிடம் முழுமையகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு சரணாகதி அடைந்துவிட்டார். என்னைச் சூழ்ந்துள்ள கவலைகள் அனைத்தையும் நீக்கும்படியும், எனது நெஞ்சில் புகுந்துள்ள அடிமைப் பேய்களையும் அச்சப்பேய்களையும் நீக்கும் படியும், என் செயல்களை நீக்கி நின்செயல் செய்து என் வாழ்வை நிறைவு செய்யும் படியும், அன்பு நெறியில் அறங்கள் வளர்ந்திடச் செய்யும் படியும் நல்லவைகளை நிலைநாட்டும் படியும் தீமைகளை ஓட்டும் படியும் கண்ணம்மாவை வணங்கி வேண்டிக் கொண்ட, மகாகவி கண்ணனைச் சரணடைகிறார். பாரதியின் இந்த அற்புதமான பாடல் சரணாகதி தத்துவத்தின் புதிய வடிவமாகும்.

நாடும் நாட்டு மக்களும் நலம் பெறவேண்டிக் கொள்ளும், அச்சமும் அடிமையும் தீரும்படி வேண்டிக் கொண்டும், அன்பு

நெறியில் அறங்கள் வளர்ந்திட வேண்டிக் கொண்டும் உன்னதமான சிந்தனை கொண்டு மகாகவி பாரதி கண்ணனைச் சரணடைகிறார்.

இந்த அருமையான காட்சி நம்மை அடிமைத் தனத்திலிருந்து விடுவித்து முழுவிடுதலை பெறுவதற்கு வழிகாட்டுகிறது. பாரதி வாழ்க, கண்ணன் வாழ்க!

பாஞ்சாலி சபதத்தில்

மகாகவி பாரதி தனது பாஞ்சாலி சபதம் என்னும் காவியத்தில் கண்ணன் பெருமையை ஆழ்ந்த பக்தி உணர்வுடன், திருத ராட்டிரன் மூலமும் பாஞ்சாலியின் மூலமும் மிகவும் அற்புதமாக வெளிப்படுத்திக் காட்டுகிறார்.

சகுனியும் துரியோதனனும் பாண்டவர்களை சூதுக்கழைக்கத் திட்டமிடுகின்றனர். திருதராட்டிரன் முதலில் சம்மதிக்கவில்லை. சகுனியும் சுயோதனனும் பாண்டவர்கள் மீது சாட்டிய குற்றச் சாட்டுகளில் ஒன்று இராஜ சூயயாகத்தின்போது கண்ணனுக்கு முதல் அர்க்கியம் கொடுத்தது பற்றியதாகும். அதற்கு பதிலளித்து திருதராட்டிரன் கண்ணனை யாரென்று நினைத்தாய் என்று கேட்டு கண்ணபிரானுடைய பெருமைகளை எடுத்துக் கூறுகிறான்.

"கண்ணனை யேதனக் கொண்டனை அவன்
காலிற் சிறுதுகள் ஒப்பவர் – நிலத்
தெண்ணரு மன்னவர் தம்முளே – பிறர்
யாருமில்லை யெனல் காணுவாய்

"ஆதிபரம் பொருள் நாரணன் – தெளி
வாகிய பாற்கடல் மீதிலே – நல்ல

சோதிப்பணா முடியாயிரம் – கொண்ட
தொல்லறி வென்னுமோர் பாம்பின் மேல் – ஒரு
போதத்துயில் கொளு நாயகன் – கலை

"போந்து புவிமிசைத் தோன்றினான் – இந்தச்
சீதக்குவளை விழியினான் – என்று
செப்புவர் உண்மை தெளிந்தவர்"

என்றும்,

"நானெனும் ஆணவம் தள்ளலும் – இந்த
ஞாலத்தைத்தான் எனக் கொள்ளலும் – பர
மோனநிலையில் நடத்தலும் – ஒரு
மூவகைக் காலம் கடத்தலும் – நடு
வானகருமங்கள் செய்தலும் – உயிர்
யாவிற்கும் நல்லருள் பெய்தலும் – பிறர்
ஊனைச் சிதைத்திடும் போதினும் – தன
துள்ளம் அருளினெகுதலும்"

"ஆயிரங்கால முயற்சியால் – பெற
லாவரிப் பேறுகள் ஞானியர் – இவை
தாயின் வயிற்றிற் பிறந்ததன்றே – தமைச்
சார்ந்து விளங்கப் பெறுவரேல் – இந்த
மாயிரு ஞாலமவர் தமைத் – தெய்வ
மாண்புடையார் என்று போற்றுங்காண் – ஒரு

பேயினை வேத முணர்த்தல் போல் – கண்ணன்
பெற்றி உனக்கெவர் பேசுவார்"

என்று திருதராட்டிரன் சகுனியிடம் இடித்துக் கூறுகிறான். திருதராட்டிரன் வாயிலாகக் கூறப்படும் இந்தக் கவிதை வரிகள் ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்தனவாகும். சிறந்த மெய்ஞானக் கருத்துக்கள் கொண்டனவாகும்.

பாஞ்சாலியைத்துகில் உரியும் காட்சியில் பாரதி மிகவும் அற்புதமான வகையில் ஸ்ரீமத் பாகவதத்தையே சுருக்கிக் கூறியது போல கண்ணனுடைய பெருமைகளையும் அருஞ்செயல்களையும் பாஞ்சாலியின் அபயக் குரலாக எடுத்துக் கூறியுள்ள பாடல் மிகச் சிறந்த பக்தி இலக்கிய வரிசையில் ஒன்றாகக் கொள்ளலாம். கண்ணனிடம் பாரதிக் குள்ள ஈடுபாட்டை இப்பாடல் வரிகள் மூலமாகத் தெளிவாகக் காண முடிகிறது. பாரதியின் கருத்தில் அவருடைய பாவனையில் பாஞ்சாலி பாரத அன்னையாகும். பாரத நாட்டின் பெண் குலத்தின் தலையாய பிரதி நிதியாகும். பாஞ்சாலியின் அபயக் குரல் அடிமைப் பட்டிருந்த பாரதத்தின் அபயக் குரலாகும்.

"அந்தப்
பேயனும் துகிலினை உரிகையிலே
உட்சோதியிற் கலந்தாள் – அன்னை
உலகத்தை மறந்தாள், ஒருமையுற்றாள்.
"ஹரி, ஹரி, ஹரி, என்றாள் – கண்ணா
அபயம், அபயம், உனக்கபயம் என்றாள்
கரியினுக்கருள் புரிந்தே – அன்று
கயத்திடை முதலையின் உயிர் மடித்தாய்
கரிய நன்னிற முடையாய் – அன்று"

"காளிங்கன் தலைமிசை நடம்புரிந்தாய்
பெரியதொர் பொருளாவாய் – கண்ணா
பேசரும் பழமறைப் பொருளாவாய்"

"சக்கர மேந்தி நின்றாய் – கண்ணா
சார்ங்கமென்றொரு வில்லைக் கரத் துடையாய்,
அட்சரப் பொருளாவாய் – கண்ணா
அக்கார அமுதுண்ணும் பசுங்குழந்தாய்
துக்கங்கள் அழித்திடுவாய் – கண்ணா
தொண்டர் கண்ணீர்களைத் துடைத் திடுவாய்
தக்கவர் தமைக் காப்பாய் – அந்தச்
சதுர் முகவேதனைப் படைத்துவிட்டாய்"

வானத்துள் வானாவாய் – தீ
மண், நீர், காற்றினில் அவையாவாய்
மோனத்துள் வீழ்ந்திருப்பாய் – தவ
முனிவர்தம் அகத்தினில் ஒளிர்தருவாய்
கானத்துப் பொய்கையிலே – தனிக்
கமலமென் பூமிசை வீற்றிருப்பாள்
தானத்து ஸ்ரீதேவி – அவள்
தாளினைக்கைக் கொண்டு மகிழ்ந்திருப்பாய்

"ஆதியில் ஆதியப்பா – கண்ணா
அறிவினைக் கடந்த விண்ணகப் பொருளே!

சோதிக்கு சோதியப்பா – என்றன்
சொல்லினைக் கேட்டருள் செய்திடுவாய்
மாதிக்க வெளியினிலே – நடு
வானத்தில் பறந்திடும் கருடன்மிசை
சோதிக்குள் ஊர்ந்திடுவாய் – கண்ணா
சுடர்ப் பொருளே பேரடற் பொருளே!

“கம்பத்தில் உள்ளானோ – அடா
காட்டுன்றன் கடவுளைத் தூணிடத்தே
வம்புரை செயுமூடா என்று
மகன்மிசை யுறுமியத் தூணுதைத்தான்
செம்பவிர் குழல் உடையான் – அந்தத்
தீயவல்லிரணியனுடல் பிளந்தாய்
நம்பி நின்னடி தொழுதேன் – என்னை
நாணழியாதிங்கு காத்தருள்வாய்”

“வாக்கினைக் கீசனையும் – நின்றன்
வாக்கினில் அசைத்திடும் வலிமையினாய்
ஆக்கினைக் கரத்துடையாய் – என்றன்
அன்புடையெந்தை, என்னருட் கடலே
நோக்கினிற் கதிருடையாய் – இங்கு
நூற்றுவர் கொடுமையைத் தவிர்த் தருள்வாய்
தேக்கு நல்வானமுதே – இங்கு
சிற்றிடையாய்ச்சியில் வெண்ணெய் உண்டாய்,

"வையங்காத்திடுவாய் – கண்ணா
மணிவண்ணா, என்றன் மனச்சுடரே
ஐய, நின் பதமலரே சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி என்றாள்.

பாஞ்சாலியின் இந்த நெஞ்சுருகும் அபயக் குரலுக்குக் கண்ணன் செவிசாய்த்தான்.

"பொய்யர் தம்துயரினைப் போல் – நல்ல
புண்ணியவாளர்தம் புகழினைப் போல்
தையலர் கருணையைப் போல் – கடல்
சலசலத் தெறிந்திடும் அலைகளைப் போல்
பெண்ணொளி வாழ்த்திடுவார் – அந்தப்
பெருமக்கள் செல்வத்தின் பெருகுதல்போல்
கண்ணபிரான் அருளால் – தம்பி
கழற்றிடக் கழற்றிடத் துணி புதிதாய்
வண்ணப்பொற் சேலைகளாம் – அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே"

என்று பாரதி குறிப்பிடுகிறார்.

ஆழ்வார்கள் கண்ணனைப் பற்றிப் பாடியுள்ள பாடல்கள் மிகப் பெரும்பாலும் ஆயர்பாடியில் இளமைக் காலத்தில் குறிப்பாகக் குழந்தைப் பருவத்தில் நடத்திய லீலைகள், காட்டிய காட்சிகள், நடத்தி நிறைவேற்றிய அருங்செயல்கள், பின்னர் பாரதப் போரில் கண்ணன் சாதித்த அருஞ்செயல்கள், பற்றியதாகவே இருக்கின்றன. அவை பெரும்பாலும் பாகவத புராணத்தில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளை ஆதாரப்பட்டவைகளாகவே காணப்படுகின்றன.

பாரதக் கதையை, ஒரு மாபெரும் இதிகாசமாக எழுதிய வியாசபகவான் தான் பாகவதப் பெருநூலையும் எழுதியவராகும். பாகவதம் திருமாலின் அவதாரப் பெருமைகளை விவரிக்கும் பெரு நூலாகும். அதில் கிருஷ்ணாவதாரத்தைப் பற்றியும் அவ்வதாரப் பெருமைகளைப் பற்றியும் மிக விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. திருமாலின் திரு அவதாரங்களில் கிருஷ்ணாவதாரத்தைப் பரிபூரணாவதாரம் என்று பெரியோர்கள் குறிப்பிடுகிறார்கள்.

கிருஷ்ணாவதாரம் மகாபாரதக் கதையுடனும் இணைந்தது. ஆயினும் யமுனைக் கரையில் கண்ணன் ஆற்றிய அருஞ்செயல்கள் அதிசயிக்கத்தக்கவை. நமது உள்ளத்தைக் கொள்ளை கொள்பவை. உள்ளத்தை அள்ளுபவவை. தேவகியையும் வசுதேவரையும் கம்சன் சிறையில் அடைத்து, அவர்களுக்குப் பிறந்த குழந்தைகளைக் கொல்வதும், கடைசியாகக் கண்ணன் சிறைக்குள் பிறந்ததும், அக்குழந்தை அங்கிருந்து தப்பி கோகுலத்திற்கு வந்ததும், அங்கு அசோதையின் குழந்தையாக அவ்வாயர் பாடியில் வளர்ந்ததும் அங்கு கண்ணன் நடத்திய லீலைகள், அருஞ்செயல்கள் பலவும் ஆழ்வார்களின் உள்ளங்களை உலுக்கியுள்ளன.

கண்ணபிரானின் அந்த அருஞ்செயல்களைப் பற்றி ஆழ்வார்கள் தங்களுடைய பல பாடல்களிலும் திரும்பத் திரும்பப் போற்றிப் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். அவைகள் அனைத்தும் பக்திச் சுவைமிக்கவை.

கண்ணனைப் பற்றி ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தவன் பேய் முலை நஞ்சுண்டவன், கள்ளச் சகட முதைத்தவன், மாவாய்ப் பிளந்தவன், புள்ளின் வாய்க்கீண்டான், பொல்லா அரக்கரைக் கிள்ளியவன், மல்லரை மாட்டியவன், மருதம் சாய்த்தவன், கன்று குணிலா வெறிந்தவன், கஞ்சனை வீழ்த்தியவன், கஞ்சனுக்கு நஞ்சானவன், குன்று குடையாய் எடுத்தவன், காளிங்கன்மீது களிநடம் புரிந்தவன், உலகம்

உண்டவன், உலகம் உமிழ்ந்தவன், வெண்ணை திருடி உண்டவன், கற்றினம் மேய்த்தவன், ஆவினம் காத்தவன் என்றெல்லாம் ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். இவையெல்லாம் வெறும் சொற்களும் சொற்றொடர்களும் அல்ல. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வரலாற்றுப் பின்னணி கொண்ட அருஞ்செயலாகும். அதிசயிக்கத் தக்க வீரச் செயலாகும். அவதாரக் கடமை மிக்க பெருஞ் செயலாகும். அவை ஒவ்வொன்றும் நல்லோரைக் காப்பதும் தீயோரை மாய்ப்பதுமான கடமைகளை நிறைவேற்றிய அருஞ்செயல்களாகும். அவை ஒவ்வொன்றும் காரண காரியங்களோடு கூடிய சமுதாயச் செயல்பாடுகளுமாகும்.

கண்ணபிரானின் இந்த அவதாரச் சிறப்புக் கதைகள் எல்லாம் பாரத நாட்டின் ஒவ்வொரு வீட்டிலும் நடமாடும் கதைகளாகும். நமது அன்புத் தாய்மார்களின் உள்ளத்தில் குடிகொண்டுள்ள நிரந்தரக் கதைகளாகும்.

கம்சன், சிசுபாலன், முதலிய பல கொடுங்கோல் மன்னர்களின் கொடுமைகள் அனைத்தையும் எதிர்த்து கோகுலங்களையும் வட மதுரை மண்டலத்தையும் காத்தவன் கண்ணன். இவையெல்லாம் பாகவதப் பெருநூலின் குறிப்புகள். ஆழ்வார்களின் எண்ணற்ற பல பாடல்களிலும் இந்த நிகழ்ச்சிகளைப் பற்றிய பல குறிப்புகளையும் காண முடிகிறது.

அடுத்தப் படியாகக் கண்ணனுக்குப் பாரதக் கதையுடன் இருந்த தொடர்பு இணைப்புகளில் ஏற்பட்டிருந்த பல நிகழ்ச்சிகளில், பாரதப் போரில் கண்ணன் ஆற்றிய அருஞ்செயல்களை ஆழ்வார்கள் பலரும் தங்களுடைய பக்திப் பாசுரங்களில் குறிப்பிடுகிறார்கள். குறிப்பாகப் பாண்டவர்களுக்காகக் கண்ணன் தூது சென்றது, பூபாரம் தீர்க்க பாரதப் போரை நடத்தியது, சிந்து மன்னன் ஜயத்திரதனைக் கொல்வதற்காக, தனது சக்கரத்தை ஏவி சூரியனை மறைத்துப் பின் அதைத் திரும்பப் பெற்றது, விறல் வியூகம் விள்ள சிந்துக்கோன் விழவூர்ந்தவன், பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரத்து

கந்தார்களிற்றுக் கழல் மன்னர், கலங்கச் சங்கம் வாய் வைத்தான் என்றெல்லாம் ஆழ்வார்கள் பாடி மகிழ்ந்துள்ளார்கள்.

இவ்வாறு பாஞ்சாலியின் கூந்தல் முடிக்கவென்றும், அவளுடைய சபதத்தை நிறைவேற்றி வைக்க நூற்றுவரைக் கொல்ல வழிவகுத்தவன் என்றும் ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்கள் குறிப்பிடுகின்றன.

ஆயினும் பாஞ்சாலி துகில் உரியப் படும்போது, அவளுக்குத் துகில் கொடுத்து மானம் காத்த நிகழ்ச்சி பற்றி கண்ணனின் அந்த அருஞ்செயலைப் பற்றி ஆழ்வார்களின் பாடல்களில் எந்தக் குறிப்பும் காணப்பட வில்லை. பாஞ்சாலியிள் அபயக் குரலுக்குக் கண்ணன் செவி சாய்த்த விவரத்தைப் பற்றி நாலாயிரத்திவ்யப் பிரபந்தப் பாசுரங்கள் எதிலும் காணப்படவில்லை. இது ஒரு ஆய்வுக்குரிய பொருளாகும்.

இன்னும், கண்ணனுடைய மகத்தான உலகப் பெருஞ்செயல், பாரதப் போர்க்களத்தில், போரின் தொடக்கத்தில் அவன் பார்த்தனுக்குக் கூறிய அறிவுரையாகும். அந்தத் தெய்வீக உரையாடல் புகழ்மிக்க, உலகப் பிரசித்தி பெற்ற பகவத் கீதை என்னும் தத்துவ ஞானக் களஞ்சியம் மகா வாக்கியமாகும்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் பகவத் கீதையைப் பற்றிய குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை. உடையவர், பகவத் கீதைக்குப் பாஷ்யம் கூறியுள்ளார். அது ஸ்ரீபாஷ்யம் என்று கூறப் பட்டிருக்கிறது. இது பற்றிய குறிப்பு இராமனுஜ நூற்றந்தாதியில் 68–வது பாடலில் கூறப்பட்டுள்ளது.

"ஆரெனக் கின்று நிகர் சொல்லின்
மாயன் அன்றுஐவர் தெய்வத்
தேரினிற் செப்பிய கீதையின்

செம்மைப் பொருள் செரியப்

பாரினிற் சொன்ன இராமானுசனைப்

பணியும் நல்லோர்

சீரினிற் சென்று பணிந்தது என்னாவி

யும் சிந்தையுமே"

என்று திருவரங்கத் தமுதனார் அருளிச் செய்துள்ள இராமனுஜ நூற்றந்தாதியில் கூறப்பட்டுள்ளது.

ஆழ்வார்களின் அரிய பாசுரங்களில் பகவான் கண்ணன் கூறிய பகவத் கீதையைப் பற்றிய நேரடியான குறிப்பு தெளிவாகத் தெரியப்படாவிட்டாலும் ஆழ்வார் பெருமக்களின் பாசுரங்களில் காணப்படும் தத்துவஞான நிலை மிகவும் தெளிவானதாகும். ஆழ்வார்களின் தத்துவஞானம் அவர்களுடைய பக்தி தத்துவத்தோடு இணைந்ததாகும். பாகவத்தின் தொடர்ச்சியை அதன் கர்மயோகத்தின் தொடர்ச்சியை ஆழ்வார்களின் பாசுரங்களில் அதன் தத்துவ நிலையிலும் பக்தி யோகத்திலும் நாம் தெளிவாகக் காண முடிகிறது.

பாரதியின் பாடல்கள் கண்ணபிரானின் பகவத் கீதா வாக்கியங்களைப் பெரிதும் ஆதாரப் பட்டு நிற்பதைக் காண்கிறோம். பாரதி பகவத் கீதையைப் பற்றி நேரடியாகவே குறிப்பிடுகிறார். அவருடைய பாடல்களின் எந்தத் தொகுதியை எடுத்துக் கொண்டாலும் அதில் கீதையின் சாரத்தை அதன் அடிச்சுவடுகளைக் காணலாம்.

பாரதி தனது தோத்திரப் பாடல்களில் கிருஷ்ணார்ஜுன தரிசனத்தைக் காண்கிறார். தேரின் முன்பாகனாகக் கண்ணன் வீற்றிருப்பதைக் காண்கிறார். கண்ணனைக் கண்டேன், மணிவண்ணனை, ஞானமலையினைக் கண்டேன் என்று நேரடியாகவே பாரதி குறிப்பிடுகிறார்.

"வில்லினை எடடா" என்றும், "வாடி நில்லாதே" என்றும், "ஒன்றுளதுண்மை" என்றும் "செய்தலுன் கடனே", அறம் செய்தல் உன் கடனே, அதில் எய்துறும் விளைவினில் எண்ணம் வைக்காதே என்றும் நேரடியாகவே கீதையின் கருத்துக்களைத் தனது பாடல்களில் பாரதி முன் வைக்கிறார்.

"கர்மயோகம் ஒன்றே – உலகில் காக்குமென்னும் வேதம்" என்று காளி ஸ்தோத்திரம் என்னும் பாடலில் பாரதி குறிப்பிடுகிறார். "முன்னைப் பார்த்தன் கண்ணனிவர் நேரா – என்னை உய்யக் கொண்டருள வேண்டும் – அடி உன்னைக் கோடி முறை தொழுதேன், இனி வையத்தலைமை யெனக் கருள்வாய்" என்று யோக சித்தி என்னும் வரம் கேட்டல் பாடலில் குறிப்பிடுகிறார். பயனெண்ணாமல் உழைக்கச் சொன்னாள், பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள் என்று பாடுகிறார்.

பகைவனுக்கருள்வாய் என்னும் பாடலில் "போருக்கு வந்து அங்கெதிர்த்த கவுரவர் போலுவந்தானமவன் – நன்னெஞ்சே நேருக்கருச்சுனன் தேரில் கசைகொண்டு நின்றதும் கண்ணனன்றோ – நன்னெஞ்சே" என்று பாடுகிறார்.

"பாரத மாதா" என்னும் தலைப்பிலான பாடலில் பாரத மாதாவின் பல பெருமைகளையும் குறித்துப் பாடும்போது "போர்க்களத்தே பரஞான மெய்க் கீதைபுகன்ற தெவருடைவாய் பகை தீர்க்கத்திறந்தரு பேரினள் பாரத தேவி மலர்த்திருவாய்" என்று பாரத மாதாவின் திருவாயைச் சிறப்பித்து கீதையின் பெருமையைப் பாடுகிறார்.

சத்ரபதி சிவாஜி என்னும் தலைப்பிலான பாடலில் முன்னையோர் பார்த்தன் முனைத்திசை நின்று தன்னெதிர் நின்ற தளத்தினை நோக்கிட என்று தொடங்கி சோர்வடைந்த பார்த்தனுக்கு அறிவுரை கூறியதையும் விவரித்து "பேடிமையகற்று, நின் பெருமையை

மறந்திடேல், ஈடிலாப்புகழினாய், எழுகவோ எழுக என்று "மெய்ஞானம் நம் இறைவர் கூற" என்று பாரதி குறிப்பிடுகிறார்.

"கிருஷ்ணன் மீது ஸ்துதி" என்னும் பாடலில்,

உண்ணும் சாதிக்குறக்கமும் சாவுமே
நண்ணுறாவண் நன்கு புரந்திடும்
எண்ணரும்புகழ்க் கீதையெனச் சொலும்
பண்ணமிழ் தத்தருள் மழை பாவித்தே"

என்று பாடுகிறார்.

பாரதி தனது சுயசரிதைப் பாடலின் நிறைவாக,

"அறிவிலே தெளிவு, நெஞ்சிலேயுறுதி
அகத்திலேயன் பினோர் வெள்ளம்
பொறிகளின் மீது தனியரசாணை
பொழுதெலா நினது பேரருளின்
நெறியிலே நாட்டம், கரும யோகத்தில்
நிலைத்திடல் என்றிவையருளாய்
குறிகுண மேதுமில்லதாய் அனைத்தாய்க்
குலவிடு தனிப் பரம்பொருளே"

என்று அற்புதமாக தனது கவிதையில் கீதையின் சாரத்தை தனது ஆழ்ந்த கருத்துக்களில் குறிப்பிடுகிறார்.

கண்ணன்—என் தோழன் என்னும் பாடலில் "நல்ல கீதையுரைத் தெனையின் புறச் செய்தவன் கீர்த்திகள் வாழ்த்திடுவேன்" என்றும்

பாடி, கண்ணன் பாட்டுகள் முழுவதிலுமே கீதைக் கருத்துக்களின் சாரத்தையே உயிரோட்டமாக வைத்துப் பாடியுள்ளார்.

பாரதியின் கண்ணன் பாட்டுகளின் தொடர்ச்சியாக, பாரதியின் இலக்கியத் தொகுப்பின் மணி மகுடமாக அவருடைய கீதைத் தமிழாக்கமும், அதற்கு அவர் எழுதியுள்ள முன்னுரையும் அமைந்துள்ளது. பாரதியின் தத்துவ தரிசனம் முழுவதற்கும் கண்ணனின் கீதா வாக்கியங்கள் வழிகாட்டியாக அமைந்துள்ளதைக் காணலாம்.

பாரதியின் மேலான கவித்திறனால் கீதையின் சாரமும் அதன் உயிர்த்துடிப்பான கருத்துக்களும் தமிழ் மக்களிடம் நிலவும் கரிய இருளைப் போக்கும் ஆதவனாகப் பிரகாசித்து ஒளி வீசி வந்திருக்கிறது. பாரதி வாழ்க. பாரதியின் புகழ் வாழ்க! கண்ணன் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க!



## நூலாசிரியரைப் பற்றி

நூலாசிரியர் : அ. சீனிவாசன்

நூலாசிரியர் திரு. அ.சீனிவாசன் ஒரு மூத்த தமிழறிஞர். எழுத்தாளர், பத்திரிகையாளர் முன்னாள் விமானப் படை வீரர். பல நாடுகளிலும், இந்தியாவின் பல மாநிலங்களிலும், விரிவாகச் சுற்றுப் பயணம் செய்து அனுபவம் பெற்றவர். தனது பள்ளிப் படிப்பு காலத்திலேயே பன்னிரண்டாவது வயது முதலே பொது வாழ்க்கையில் ஈடுபாட்டு நாட்டுப் பணிகளில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் தேசீய காங்கிரஸ், காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி (1937 ம் ஆண்டில் ஜெயப் பிரகாஷ் நாராயணன் தலைமையிலான சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் சேர்ந்து காங்கிரஸ் சோஷலிஸ்டு கட்சி என்னும் பெயரில் ஒரு தீவிரமான கட்சி என்னும் பெயரில் ஒரு கட்சி அமைத்திருந்தனர். அக்கட்சியினர் காங்கிரஸ் கட்சியிலும் உறுப்பினர்களாயிருந்தனர்). சுயமரியாதை இயக்கம், பின்னர் பொதுவுடமை இயக்கம் ஆகிய இயக்கங்களுடன் தொடர்பு கொண்டு பணியாற்றியவர், சிறை வாசம் சித்திரவதை, கொடுமையான போலீஸ் அடக்குமுறைகளுக்கு ஆளாகித் தியாகத் தழும்புகள் ஏறியவர்.

இரண்டாவது உலகப் பெரும் போர் காலத்தில் விமானப் படையில் சேர்ந்து இராணுவப் பயிற்சியும் தகவல் தொழில் நுட்பப் பயிற்சியும் பெற்றவர்.

திரு. அ.சீனிவாசன் முன்னள் இராமநாதபுரம் மாவட்டம் இன்றைய விருதுநகர் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர் தாலுகா, வத்திராயிருப்பு ஒன்றியம் மகாராஜபுரம் கிராமத்தில் விவசாய குடும்பத்தில் 1925–ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 6–ம் தேதி பிறந்தார். தந்தையார் மெட்ட.வெ.அய்யப்ப நாயுடு, தாயார் மெட்ட.வெங்கடம்மாள், உடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரி, இரண்டு சகோதரர்கள். 1957–ம்

ஆண்டு மே மாதம் 31–ம் தேதி திரு. அ.சீனிவாசன் அவர்களுக்கு திருமணம் ஆயிற்று. மனைவி திருமதி. சீ.நாகலட்சுமி. குழந்தைகள் இரண்டு பெண்கள், ஒரு ஆண். பெண்களில் மூத்தவர் திருமதி. கே.பகீரதி எம்.ஏ.,பி.எட்.,(தமிழ்) திருமணமாகி விட்டது. சென்னையில் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றுகிறார். இளையவர் கு.வைதேகி, கர்நாடக இசையில் பட்டம் பெற்று கோவையில் இசை ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். மகன் ஏ.எஸ்.வாசன் (பழைய பெயர் எஸ். அய்யாசாமி) ஏரோநாட்டிக்கல் என்ஜினியரிங் மற்றும் பி.காம். படிப்பு முடித்தவர். சினிமா துறையில் தயாரிப்பு, நிர்வாகம், இயக்கம் ஆகிய துறைகளில் பணியாற்றி வருகிறார். அத்துடன் தந்தையார் எழுதி வரும் நூல்களைப் பதிப்பித்து அப்பதிப்பகத்தின் நிர்வாகியாகப் பணியாற்றியும் வருகிறார்.

திரு.அ.சீனிவாசன் மகராஜபுரம் சாத்தூர், வத்திராயிருப்பு விருதுநகர் ஆகிய ஊர்களில் பள்ளிப் படிப்பு முடித்து இந்திய விமானப் படையில் தகவல் தொழில் நுட்பப் பயிற்சியும் பெற்றுள்ளார். அப்போது ஆங்கில மொழியில் தனிப் பயிற்சியும் பெற்றார். அத்துடன் சொந்த முயற்சியில் தமிழ் இலக்கியத்திலும் குறிப்பாக பாரதி நூல்கள், கம்பராமாயணம், நாலாயிரத்திவ்யப் பிரபந்தம், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களில் ஆழப்படிப்பும் பயிற்சியும் பெற்றார்.

இவ்வாறு தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் நல்ல பயிற்சியும் அத்துடன் தெலுங்கு, மலையாளம், இந்தி ஆகிய மொழிகளும் அறிந்தவர்.

திரு. அ. சீனிவாசன் 1947–ம் ஆண்டு முதல் 1999–ம் ஆண்டு வரை சுமார் 52 ஆண்டுகள், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில், அக்கட்சியின் வட்டாரப் பொறுப்பிலிருந்து, மாவட்ட, மாநில, அகில இந்தியப் பொறுப்புகள் வரையில் பல்வேறு பொறுப்புகளில் குறிப்பாக அமைப்பு நிலை, தொழிற் சங்கத்தலைமை, பத்திரிகைத்துறை, பிரச்சாரத்துறை, பிரசுரத்துறை, கட்சிக்கல்விப் பயிற்சித்துறை, (சித்தாந்தத்துறை) முதலிய பல துறைகளிலும் பணியாற்றியுள்ளார்.

கட்சியின் உயர்ந்த அமைப்பான தேசீயக் கவுன்ஸிலில் இருபத்து ஐந்து ஆண்டுகள் உறுப்பினராக இருந்து, மாநில, மத்தியப் பொறுப்புகள் பலவற்றில் இருந்து பணியாற்றியுள்ளார். தமிழ் மாநிலக் குழுவின் துணைச் செயலாளர் பொறுப்பில் இருந்து மாநில அளவில் அமைப்பு நிலை, சித்தாந்தப் பயிற்சி, பத்திரிகை பொறுப்புகள் வகித்து இருபது ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றியுள்ளார்.

கட்சியின் உயர் மட்டக் குழுவின் பிரதிநிதியாக அன்றைய சோவியத்யூனியன் (ரஷ்யா–மாஸ்கோ, லெனின் கிராட், ஆர்மீனியா, ஆஜர்பைஜான்) மற்றும் செக்கோஸ்லோவேகியா ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்து சுற்றுப் பயணம் செய்துள்ளார்.

தொழிற் சங்கத் தலைவராக

திரு.அ.சீனிவாசன் 1950–ம் ஆண்டு காலத் தொடக்கத்திலேயே இராஜபாளையம், சிவகாசி, சத்திரப்பட்டி, தளவாய்புரம், விருதுநகர், சாத்தூர், அருப்புக்கோட்டை, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய பகுதிகளில் பஞ்சாலை, அச்சு, தீப்பெட்டி, கைத்தறி மற்றும் பல தொழில்கள் தொடர்பான தொழிலாளர் சங்கங்கள் பலவற்றையும் தொடங்கியும், உருவாக்கியும், தொழிற் சங்கத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். மாநில அளவிலும் பல தொழிற் சங்கப் பொறுப்புகளில் இருந்து பணியாற்றியுள்ளார்.

பின்னர் திரு.அ.சீனிவாசன் தனது தொழிற் சங்கப் பொருப்புகளில் சென்னைக்கு மாற்றப்பட்டு, சென்னையில் ஹார்பர், ஆவடி டாங்க் தொழிற்சாலை, கல்பாக்கம் அணுமின் நிலையம், ஆகிய துறைகளில், தொழில் நிறுவன அளவிலும், அகில இந்திய அமைப்பு வரையிலும், பொறுப்புகள் வகித்து தொழிற் கங்கத் தலைவராகப் பணியாற்றியுள்ளார்.

திரு.அ.சீனிவாசன் சென்னை டாக் லேபர் போர்டு உறுப்பினராக மத்திய அரசால் நியமனம் செய்யப்பட்டு அந்தப் பொறுப்பில் தொழிலாளர் பிரதிநிதியாக பணியாற்றியுள்ளார்.

## ஆய்வு அறிக்கை சமர்ப்பித்தல்

வளர்முக நாடுகளில் இளம் தொழிலாளர்களுக்கு மறுக்கப் பட்டுள்ள வாய்ப்புகள் என்னும் தலைப்பிலும், மற்றும் இளம் தொழிலாளர்களின் பொதுப் பிரச்சனைகள் பற்றியும், உலக தொழிற் சங்க சம்மேளத்தின் சார்பில் பல்கேரிய நாட்டில் வார்னா நகரில் நடைபெற்ற சர்வ தேசத் தொழிலாளர் மகாநாட்டில் இந்தியத் தொழிலாளர்களின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். அம் மாநாட்டில் இந்திய நாட்டின் இளம் தொழிலாளர்களின் பிரச்னைகள் பற்றிய அறிக்கை சமர்ப்பித்துள்ளார். அந்த அறிக்கை உலகத் தொழிலாளர் சம்மேளத்தின் ஆவணங்களின் பகுதியாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

1980–ம் ஆண்டுகளில் உலக தொழிற் சங்க சம்மேளமும், சமாதானம் மற்றும் சோஷலிஸம் பற்றிய பிரச்னைகளும் என்னும் சர்வதேச இதழும் சேர்ந்து நடத்திய கருத்தரங்கில் வளர்முக நாடுகளில் பொதுத்துறையின் பங்கும் பொதுத்துறைக்கும் தனியார் துறைக்கும் இடையிலான உறவு தொடர்புகள் பற்றிய பிரச்னைகள் பற்றி டில்லியில் நடைபெற்ற கருத்தரங்கில் திரு.அ.சீனிவாசன் இந்தியாவில் பொதுத்துறைக்கும் தனியார் துறையில் உள்ள நடுத்தர மற்றும் சிறு தொழில்களுக்கும் இடையிலான உறவு என்னும் தலைப்பில் ஒரு ஆய்வறிக்கை சமர்ப்பித்து, அது உலக தொழிற் சங்க ஆவணத்தில் பதிவாகியுள்ளது.

## பத்திரிகையாளராக

தொழிற் சங்கத் தலைவராக இருந்த காலத்தில் தொழிற் சங்கச் செய்தி ஹார்பர் தொழிலாளி ஆகிய பத்திரிகைகளில் ஆசிரியர் பொறுப்பில் பணியாற்றியுள்ளார். கட்சியின் மாநிலத் துணைச் செயலாளராக இருந்த போது கட்சியின் மாநில அமைப்பு நிலைப் பொறுப்பில் இருந்த காலத்தில் கட்சியின் பத்திரிகையான ஜன சக்தி வார இதழ் மற்றும் நாளிதழ்களில் தலைமை ஆசிரியராக

எட்டாண்டுகளுக்கு மேல் பணியாற்றியுள்ளார். கட்சியின் சித்தாந்த ஏடான மார்கசீய ஒளி மாத இதழின் தலைமை ஆசிரியராக இருபது ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றியுள்ளார்.

## எழுத்துப் பணிகளில்

பத்திகை ஆசிரியராக இருந்த காலத்தில் கட்சி மற்றும் தொழிற் சங்கப் பத்திரிகைகளில் தொடர்ச்சியாகப் பல முக்கிய அரசியல், பொருளாதாரம், இலக்கியம் மற்றும் தத்துவ ஞானம் மற்றும் தொழிலாளர், விவசாயிகள் பற்றியப் பிரச்னைகள் பற்றிய பல கட்டுரைகள் எழுதி வந்ததுடன்,

அரசியல், வரலாறு, பொருளாதாரம், தத்துவஞானம், சர்வதேசப் பிரச்னைகள் முதலியவை பற்றிய பல தலைப்புகளிலான நூல்களை மொழி பெயர்ப்பு (தமிழாக்கம்) செய்தும், மூல நூல்கள் எழுதியும் அவை வெளியாகியுள்ளன. காரல் மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு, மார்க்சிய லெனினிய தத்துவ ஞானப் பிரச்னைகள் அரசியல் விஞ்ஞானத்தின் அடிப்படைகள், ஐக்கிய முன்னணித்தந்திரம், மார்க்சீய தத்துவம், வரலாற்றியல் பொருள் முதல் வாதம், மார்க்சீயமும் பகவத் கீதையும் முதலியன அவர் தமிழாக்கம் செய்துள்ள முக்கியமான பெரிய நூல்களாகும். மற்றும் மார்க்சீய பொருளாதார தத்துவம், ஜீவாவின் தமிழ் பணிகள், கிராமப்புறப் பாட்டாளிகளை நோக்கி ஆகிய தலைப்புகளில் மூல நூல்கள் எழுதியுள்ளார். இந்த மூன்று நூல்களுக்கும் முறையே பேராசிரியர் வான மாமலை பேராசிரியர் சஞ்சீவி, பேராசிரியர் நா. தர்மராஜன் ஆகியோர் முன்னுரை எழுதி பாராட்டியுள்ளனர். இவ்வாறு திரு.அ.சீனிவாசன் அப்போது எழுதி வெளியான நூல்கள் சுமார் பதினேழாயிரம் பக்கங்களுக்கு மேலாகும். இவை திரு.அ.சீனிவாசன் அவர்களுடைய எழுத்துப் பணிகளில் அமைதியான சாதனையாகும்.

## விருதுகள்

திரு, அ. சீனிவாசன் தனது சிறந்த எழுத்துப் பணி சாதனைகளுக்காக சோவியத் நாடு நேரு விருதும், சிறந்த

பத்திரிகைப் பணிகளுக்காக, சமாதானம் சோஷலிஸம் பற்றிய பிரச்னைகள் என்னும் சர்வதேசப் பத்திரிகை நிறுவனத்தின் சார்பில் சிறந்த பத்திரிகையாளர் என்னும் கௌரவப் பட்டயமும் பெற்றுள்ளார். அத்துடன் அண்மையில் பாரதி தொடர்பாக அவர் எழுதியுள்ள நூல்களும் தனியார் விருதுகளைப் பெற்றுள்ளன.

## தேர்தல்களில் பங்கு

1950–ம் ஆண்டுகளின் கடைசியில் திரு. அ. சீனிவாசன் இராஜபாளையம் நகரசபைத் தேர்தலில் வார்டு உறுப்பினர் தொகுதியில் போட்டியிட்டு வெற்றி பெற்று நகரசபை உறப்பினராகச் சிறப்பாகப் பணியாற்றியுள்ளார்.

1984–ம் ஆண்டிலும் 1991–ம் ஆண்டிலும் நடைபெற்ற பாராளுமன்றத் தேர்தல்களில் சிவகாசி பாராளு மன்றத் தொகுதியில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆதரவுடன் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளராக திரு. அ. சீனிவாசன் போட்டியிட்டு ஒவ்வொரு தடவையிலும் இரண்டு லட்சத்திற்கும் மேற்பட்ட வாக்குகள் பெற்று இரண்டாம் இடத்தைப் பெற்று குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தார். இருதடவைகளிலும் முறையே இந்திரா காந்தி படுகொலை, ராஜீவ் காந்தி படுகொலை அதனால் ஏற்பட்ட அனுதாப அலை அவருக்கு பாதகமாக இருந்தது.

திரு. அ. சீனிவாசன் சிறந்த சிந்தனையாளர், எழுத்தாளர், பத்திரிகையாளர், நூலாசிரியர், சிறந்த பேச்சாளர், இராணுவ சேவை அனுபவம் பெற்றவர். தொழிற்சங்கத் தலைவராகப் பணியாற்றி அனுபவம் பெற்றவர். பல நாடுகளுக்கும், இந்திய நாட்டில் பல மாநிலங்ககளுக்கும் சென்று சுற்றுப் பயணம் செய்து அனுபவம் பெற்றவர். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, மலையாளம், இந்தி ஆகிய மொழிகள் அறிந்தவர். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டிருந்த காலத்தில் 1948–50ம் ஆண்டு காலத்தில்

கடுமையான போலிஸ் அடக்கு முறைக்கும் சித்திரவதைக்கும் கொடுமையான சிறைவாசத்திற்கும் உட்பட்டு மதுரை, சேலம் சிறைகளில் கடும் தண்டனை அனுபவித்து தியாகத் தழும்புகள் ஏறியவர்.

## இலக்கிய அனுபவம்

திரு. அ. சீனிவாசன் ஏற்கனவே தனது குழந்தைப் பிராயத்திலிருந்தே தனது தாய் தந்தையர் மூலம் இராமாயணம், மகாபாரதம் நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், நளவெண்பா, இராமனுஜருடைய தத்துவங்கள் முதலியவை பற்றி அறிமுகமானவர். விடுதலை இயக்கத்தின் ஆதர்சத்தில் பள்ளிப் படிப்புகாலத்தில், மகாகவி பாரதியார், வ.உ. சிதம்பரம் பிள்ளை, சுப்ரமணிய சிவா, விவேகானந்தர் நூல்கள், அவர்களைப் பற்றிய செய்திகள், ஆனந்த மடம் முதலிய பங்கிம் சந்திரர், மற்றும் சரத் சந்திரர் நாவல்கள், கல்கி நாவல்கள், மணிக் கொடி கதைகள் முதலிய இலக்கியங்களிலும் அறிமுகமாகி நாட்டுப்பற்றை வளர்த்துக் கொண்டவர். சுதந்திரப் போராட்ட காலத்தில் தீவிர வாதக் கருத்துக்களுக்கு ஆதரவான சிந்தனைப் போக்குகளைக் கொண்டிருந்தார். பாரதி, விவேகானந்தர், ஆகியோரின் இந்திய சிந்தனைப் போக்கு அவரை மிகவும் கவர்ந்தது. அதன் பெருமி தத்தை படிப்படியாக வளர்த்துக் கொண்டிருந்தார்.

திரு. அ. சீனிவாசன், இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்துடன் தொடர்பு ஏற்பட்டபோது கம்யூனிஸ்ட் இலக்கியங்களையும் குறிப்பாக மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின் மற்றும் சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்களின் மூல நூல்களை ஆழ்ந்து படித்தார். அப்போது, இயற்கை, சமுதாயம் தனி மனித சிந்தனை பற்றியும் அதன் வழியில் தத்துவ ஞானம், அரசியல் பொருளாதாரம் சமுதாய வரலாறு பற்றியுமான ஐரோப்பிய சிந்தனைகள், ஐரோப்பாவில் நிகழ்ந்த தீவிரமான கருத்துப் போராட்டங்கள், தொழில் புரட்சி மூலம் நிகழ்ந்த சமுதாய மாற்றங்கள் முதலியவை பற்றிய இலக்கியங்கள் மூலம் ஐரோப்பிய சிந்தனை வளர்ச்சி பற்றிய அறிமுகம் ஏற்பட்டது.

அத்துடன், சோவியத் யூனியனின் தோற்றமும் வளர்ச்சியும் சர்வ தேச கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஆவணங்கள், இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஆவணங்கள் தொடர்ச்சியான அறிக்கைகள் தீர்மானங்கள் ஆகியவற்றையும் ஆழ்ந்து படிக்க நேர்ந்தது. சீனாவின் கம்யூனிஸ்ட் இலக்கியங்களையும் படிக்க நேர்ந்தது.

இந்திய நாடு சுதந்திரம் பெற்ற பின்னர், நாட்டின் வளர்ச்சிக்கான பாதை எந்தத் திசையில் செல்ல வேண்டும் என்பது தொடர்ச்சியான விவாதப் பொருளாக இருந்து வந்திருக்கிறது. இதில் ஆங்கில (ஐரோப்பிய) சிந்தனைப் போக்குகளுக்கும் இந்திய சிந்தனைப் பொக்குகளுக்கும் இடையில் அடிப்படையான மோதல் இருந்து வந்திருக்கிறது. இந்த மோதலில் பல பெரிய அரசியல் கட்சிகளும் கூட பிளவுபட்டு உடைந்திருக்கின்றன. சுதந்திரம் அடைந்தபோது இந்திய நாடும் உடைந்து, இந்தியா, பாகிஸ்தான் பின்னர் பாகிஸ்தானிலிருந்து பங்களாதேஷ் எனப்பிரிந்து பிளவுபட்டிருக்கின்றன.

இந்திய நாட்டின் வெளி உறவுக் கொள்கை, இந்திய நாட்டின் ஒற்றுமை ஒருமைப்பாடு, இந்திய மக்களின் ஒற்றுமை, நாட்டின் தற்காப்பு பலம், இந்திய நாட்டின் தொழில் வளர்ச்சி விவசாயப் பிரச்சனை, உற்பத்திப் பெருக்கம், மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்தல், கல்வி, கலாச்சார முன்னேற்றம், மக்களின் சுகாதாரம் நல்வாழ்வு பல துறைகளிலும் நாட்டின் ஒன்றிணைப்பு இந்திய மக்களின் ஆன்மீக பாரம்பரியத்தின் மேன்மை, ஒட்டுமொத்தமான அரசியல், பொருளாதார, சமுதாய, கலாச்சார, ஆன்மீக வளர்ச்சி பற்றிய பலவேறு பிரச்னைகளும் எழுந்து அவைகளுக்குச் சரியான தீர்வு காண்பதில் இந்திய மக்களிடையில் நூறாண்டு காலத்திய ஆங்கிலக் கல்வி மூலம் ஏற்பட்ட மேலைநாட்டு சிந்தனைப் போக்குகளும், இந்திய பாரம்பரியத்தின் தொடர்ச்சியான இந்திய சிந்தனைப் போக்குகளும் எழுந்து அவை மோதியிருக்கின்றன. இன்னும் அது தொடர்கிறது.

திரு. அ. சீனிவாசன் தன்னுடைய ஐம்பது ஆண்டு காலத்திற்கு மேலான பொது வாழ்க்கை, பத்திரிகைப் பணிகள், தொழிற்சங்க இயக்கப் பணிகள், விவசாயிகளின் போராட்ட அனுபவங்கள் ஐந்தாண்டு திட்டங்களின் வளர்ச்சிப் போக்குகள் பற்றிய படிப்பு, இந்திய நாட்டின் அரசியல் வளர்ச்சி ஆகியவற்றின் அனுபவத்தில் தான் அதுவரை பணியாற்றிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து சித்தாந்த சிந்தனை, அரசியல் கொள்கைகள் அவைகளின் செயல்பாடு, அமைப்பு நிலைப்பணிகள், அணுகும் முறை ஆகிய பல பிரச்னைகளிலும் தனக்குச் சொந்தமான கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டு அக்கட்சியிலிருந்து விலகி 1999–ம் ஆண்டு செப்டம்பர் மாதம் பாரதிய ஜனதாக் கட்சியில் சேர்ந்து அக்கட்சியின் தலைமையின் கீழ் சமுதாயப் பணி ஆற்றிவருகிறார். ஒரே நாடு பத்திரிகை, மற்றும் விஜய பாரதம் ஆகிய பத்திரிகைகளில் பணியாற்றியும் எழுதியும் வருகிறார்.

அத்துடன் சொந்தமாகவும், பாரதி, கம்பன், சிலப்பதிகாரம், திவ்யப் பிரபந்தம் தொடர்பான பல நூல்களும் எழுதியும் பதிப்பித்தும் வெளியிட்டும் வருகிறார். அதன்படி பாரதப் பண்பாட்டு தளத்தில் பாரதி, பாரதியின் புதிய ஆத்திசூடி. ஒரு விளக்கவுரை, சிலப்பதிகாரத்தில் வைதீகக் கருத்துகள், ஆகிய நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார். இந்த நூல்கள் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் சிறந்த நூலுக்கு உதவித் திட்டத்தின் கீழ் உதவி பெற்றிருக்கிறது.

அத்துடன் திரு. அ. சீனிவாசன் எழுதிய சிலப்பதிகாரமும் திவ்யப் பிரபந்தமும்–ஒரு ஆய்வு என்னும் நூலை பிரபல புத்தக வெளியீட்டு நிறுவனமான பழனியப்பா பிரதர்ஸ் வெளியிட்டிருக்கிறது.

மேலும் திரு. அ.சீனிவாசன் எழுதி முடித்து அச்சில் உள்ள, ஆழ்வார்களும், பாரதியும், பாரதியின் தேசீயம், கம்பன் ஒரு சமுதாயப் பார்வை, கம்ப நாடன் காவியத்தில் காதலும் பெருங்காதலும், கம்பன் காவியத்தில் விதியின் பிழையும் அறத்தின் வெற்றியும் என்னும் நூல்கள் விரைவில் வெளிவரவுள்ளன.

மேலும் பாரதி, கம்பன் தொடர்பாக வேறு சில நூல்களும், கிராமங்களை நோக்கி, இந்தியப் பொருளாதார சிந்தனைகள், பாரதியும் பகவத் கீதையும் முதலிய நூல்களும் எழுதிக் கொண்டு வருகிறார். பாரதி தொடர்பாக பல நூல்களை எழுதியும் பாரதி புகழ் பரப்புவதில் பங்கு கொண்டும் வருவதால் திரு. அ. சீனிவாசன் பாரதிய ஜனதா கட்சி வட்டாரத்தில் பாரதி சீனிவாசன் என்று அழைக்கப்பட்டு வருகிறார்.